R. Parthasarathi

## உள்ளுறை

| அத்தியாயம் | விஷயம் | பக்கம் |
|---|---|---|

# லார்ட் கிளைவ்

## அத்தியாயம் 1.

### கிளைவின் இளமைப் பருவம்.

நமது கதா நாயகராகிய கிளைவின் முதாதையர் கி. பி. பன்னிரண்டாவது நூற்றுண்டு முதற்கொண்டு இங்கிலாந்தைச் சார்ந்த ஷிராப்ஷையர் மாகாணத்தில் மார்கட்டிரேடன் என்ற நகருக்கு அருகிலுள்ள மோர்டன்சே என்ற ஊரில் வசித்து வந்தனர். முதலாவது ஜார்ஜ் அரசர் காலத்தில் அக்குடும்பத்தைச் சேர்ந்த ரிச்சர்ட் கிளைவ் என்பவர் அவ்விடத்தில் வசித்து வந்தார். அவர் அவ்வளவு சாமர்த்திய முள்ளவரல்லர். அவர் நியாயவாதத் தொழிலுக்குரிய கல்வி பயின்று அத்தொழிலி லிருந்தும், அத்தொழிலிலேயே தம்முடைய காலம் முழுவதையும் கழிக்காமல் தம்முடைய நிலங்களைப் பயிரிடுவதிலும் சிறிது கழித்து வந்தார். அவர் மான்செஸ்டர் நகரவாசியாகிய காஸ்கில் என்னும் பெயர் கொண்ட மாதை விவாகஞ் செய்துகொண்டார். அவர்களிருவருக்கும் அநேக குழந்தைகள் பிறந்தன. அவர்களுள் மூத்தவராகிய ராபர்ட் கிளைவ் என்பவர் தம்முடைய மூதாதையரின் சொந்த ஊராகிய மோர்டன்சே என்ற ஊரில் 1725-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 29-ந் தேதியன்று பிறந்தார்.

ராபர்ட் கிளைவ் பாலராய் இருந்தபோதே அவரிடம் பிற்காலத்தில் விளங்கிய சில குணநிசயங்கள் காணப்பட்டன. அவர் எழு வயதாக இருக்கும்போது அவருடைய உறவினர்கள் அவரைப்பற்றி எழுதிய சில கடிதங்கள் இருக்கின்றன. அக்கடிதங்களில் அவர் மிக்க பிடிவாதக்காரரென்றும், கோபக்காரரென்றும், தாம் எண்ணியதை எண்ணியபடியே செய்து முடிக்க வேண்டுமென்ற வைராக்கியமும் ஆசையும் உடையவரென்றும் அவர்கள் கூறியுள்ளார்கள். அவர் அங்ஙனம் இருந்தமையால் அவருடைய பெற்றோர்கள் அவரைப்பற்றி விசேஷக் கவலைகொள்ள இடமாயிற்று. 'அவருக்குச் சண்டை யென்றால் அளவிறந்த ஆனந்தமாதலால், அவர் இயற்கையிலேயே கொடூரமும், மூர்க்கமும் பெற்று, அற்ப விஷயத்திலுங்கூட தீவிரமான கோபங்கொண்டு முன்பின் யோசனை செய்யாமல் சண்டை செய்ய முன் வருவார்' என்று அவருடைய சிற்றப்பன்மார்களில் ஒருவர் கூறியிருக்கின்றார். கிளைவ் இளம்பிராயத்தினராக இருந்தபோது ஒருநாள் மார்கட்டிரேடன் என்னுமிடத்திற்குச் சென்று அவ்விடத்திய மாதாகோவிலின் உச்சி மூலை வரைக்கும் ஏறி அங்கே இருந்த ஒரு கல்லின் மீது உட்கார்ந்து கொண்டார் என்றும், அச்சமயம் அவரைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியமும், பயமும் ஒருங்கே கொண்டவர்களாய், செய்வதொன்றுந் தோன்றாமல் திகைத்து நிற்க, அவர் சிறிதும் அஞ்சாமல் அவ்விடத்திலேயே சிறிது நேரமிருந்து பின்னர் ஏறியபடியே கீழே இறங்கிவிட்டார் என்றும், அவர் அவ்வாறு ஒருவிதக் கஷ்டத்தையும் அடையாமல் கீழே இறங்கியதைக் கண்ட ஜனங்களின் வியப்பும், சந்தோஷமும் அளவற்றனவா யிருந்தன

வென்றும், அவ்வூர்வாசிகள் தம் பெற்றோர்கள் சொல்லக் கேட்டிருப்பதாக வியப்புடன் இன்னும் கூறுகின்றார்கள். இன்னும் அவர், தம்மைப்போன்ற சிறுவர்களைத் தம்முடன் கூட்டிக்கொண்டு கடைத் தெருவில் திரிந்து, கடைகளின் ஜன்னல்களை உடைக்காம லிருப்பதற்காகப் பழங்களையும் பணத்தையும் தங்களுக்குக் கொடுக்கும்படி கடைக்காரர்களைத் தொந்தரவு செய்து பெறுவாரென்பதை அவ்வூரார் வியப்புடன் சொல்லுகிறார்கள். அவருக்குத் தகுந்த வயது வரவே, அவருடைய பெற்றோர்கள் உலக வழக்கத்திற்கேற்ப, அவரைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினார்கள். அங்கேயும் அவர் தமது வழக்கப்படி சேஷ்டைகள் செய்ய ஆரம்பித்தார். ஆகவே, பெற்றோர்கள் அவரை அடிக்கடி ஒரு பள்ளிக்கூடத்தை விட்டு மற்றொரு பள்ளிக்கூடத்திற்கு மாற்றிக்கொண்டு இருந்தார்கள். அதனால் படிப்பிலும் அதிகமாக அவருக்குத் தேர்ச்சி ஏற்படவில்லை. எல்லா உபாத்தியாயர்களும், 'அவன் கெட்ட பையன் ; அவனுக்குப் படிப்பு ஒன்றும் ஏறாது ; அவனுடைய மண்டையில் களிமண்ணைத் தவிர வேறொன்றையுங் காணோம்' என்று வசைமொழி கூறி அவரை வீட்டிற் கனுப்பிவிட்டார்கள். ஆனால், கிளைவ் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்தபோதே அவர் பிற்காலத்தில் இந்தியாவில் எவ்விதம் விளங்குவார் என்பதை யுணர்த்தும் சில அறிகுறிகள் அவரிடம் காணப்பட்டன. இளமையிலேயே படிப்பதைக் காட்டிலும் அரும்பெருங் காரியங்களைச் செய்வதில் தமக்கிருந்த விசேஷ ஆசையை அவர் காட்டினார். பிற்காலத்தில் சேனைக்கும், தேசத்திற்கும் எவ்வாறு தலைவராக விளங்கினாரோ அவ்வாறே படிக்குங் காலத்திலும் சிறு

வர்களுக்குத் தலைவராக விளங்கினர். இத்தகைய அரிய குணங்கள் அவரிடமிருப்பதை அறிந்தவர், அவர் முதலில் சேர்ந்து படித்த பாடசாலையின் தலைமை ஆசிரியராகிய டாக்டர் ஈடன் என்பவரே. 'தமது மாணுக்கராகிய கிளைவ், வாலிப பருவமடைந்து, தமது கூர்மையான புத்தியை உபயோகிக்கத் தகுந்த அவகாசத்தையும் பெற்றால், அவர், அதுவரை யாருமடையாத புகழையும், உயர்பதவியையு மடைவார்' என்று அத்திருவாளர் தீர்க்க தரிசனம் கூறினர். அவருடைய பெற்றோர், உறவினர் முதலாயினோர் அவரை ஒரு பெருத்த முட்டாள் என்றும், ஒன்றுக்கும் உதவாதவன் என்றும் கருதி வந்தார்கள். அவரால் குடும்பத்துக்கு ஒருவிதமான நன்மையும் ஏற்படா தென்று அவருடைய பெற்றோர்கள் கருதி, அவரை அயல் தேசங்களுக்கு அனுப்பிவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார்கள். அவர்கள் அம்மாதிரி எண்ணிக் கொண்டிருக்கையில், இங்கிலீஷ் ஈஸ்ட் இந்தியா கம்பெனியில் ஒரு குமாஸ்தா உத்தியோகம் சென்னை பட்டினத்தில் காலியாயிருந்தது. அப்போது சென்னையில் ஒருவகைச் சுரம் பரவியிருந்தது. அந்நிலையில் அவருக்கு அவர்கள் அவ்வேலையை வாங்கிக் கொடுத்து, அங்கே அவர் பெரும்பொருள் சம்பாதித்து மேன்மையடைந்தாலுஞ் சரி, இல்லாவிடின் வெகு மும்முரமாய்ப் பரவியிருக்கும் சுரத்தினால் இறந்தாலுஞ் சரி யென்று நினைத்து 18 வயதுள்ள அவரைச் சந்தோஷத்துடன் அங்கு அனுப்பினார்கள்.

# அத்தியாயம் 2.

## கிளைவ் சென்னையில் உத்தியோகத்திலமர்தல்

கிளைவ் ஈஸ்ட் இந்தியா கம்பெனியில் குமாஸ்தா வாக அமர்ந்தபோது அக் கம்பெனியின் குமாஸ்தாக் களின் நிலை பரிதபிக்கவேண்டிய வகையில் இருந்தது. அஞ்ஞான்று கம்பெனியானது ஒரு வியாபாரச் சங்க மாகவே யிருந்தது. கம்பெனியார் இந்திய இரா ஜாங்கங்களிடமிருந்து குடிக்கூலிக்குக் கொஞ்சம் நிலம் பெற்று அங்கே கோட்டைகள் கட்டிக்கொண்டு வியா பாரஞ் செய்து வந்தார்கள். அக் கோட்டைகளைக் காக்க, சில இராணுவ வீரர்களை வேலையில் அமர்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்களில் பெரும்பான்மை யோர் இந்தியச் சிப்பாய்களே. அவர்களுக்குச் சரியான இராணுவப் பயிற்சியும் இல்லை. சிலர் கத்திகளையும் கேடயங்களையும், இன்னுஞ் சிலர் அம்புகளையும் விற் களையும் ஏந்தி யிருந்தார்கள். அம்போது கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் இக்காலத்தவர்களைப் போல் தேசத் தின் நியாய பரிபாலனம், அரசிறைக் கணக்கு, இராஜரீக முறை இவற்றைக் கவனிக்க வேண்டிய அவசிய மில்லாமல், வியாபார சம்பந்தமான அலுவல்களாகிய சாக்குகளின் இருப்பைக் கவனிப்பது, நூல் நூற்றுத் துணி நெய்கிறவர்களுக்கு முன் பணம் கொடுப்பது, அவர்களிடமிருந்து வாங்கிய சரக்குகளை மூட்டை கட் டிக் கப்பலில் ஏற்றுவது, கம்பெனியைச் சாராத வியா பாரிகளால் கம்பெனியின் வியாபாரத்திற்குத் தீங்கு உண்டாகாதவாறு பார்த்துக் கொள்வது ஆகிய இவற் றைத்தான் கவனித்து வந்தார்கள். புதிதாக வேலையி லமர்ந்த குமாஸ்தாக்களுக்குப் போதுமான சம்பளங்

கொடுக்கப்படாததனுல் அவர்கள் கடன் வாங்காமல் காலங் கழிப்பது கடினமா யிருந்தது. முன்னரே சேர்ந்து கொஞ்ச காலமாக வேலை செய்து வந்த குமாஸ் தாக்களோ தங்களுடைய சொந்தத்தில் வியாபாரஞ் செய்து பெருஞ்செல்வத்தை அடைந்தார்கள். கம்பெனி யின் உத்தியோகத்தில் மேன்மையான பதவியை யடைந்தவர்களோ கணக்கிட முடியாத திரவியத்தைச் சேர்த்தார்கள்.

கிளைவ் ஈஸ்ட் இந்தியா கம்பெனியில் குமாஸ்தா வாக நியமிக்கப்பட்டபோது, கம்பெனிக்குச் சொந்த மான இடங்கள் எல்லாவற்றிலும் சென்னைதான் முதன் மையானதா யிருந்தது. ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் சென்னை வந்தபோது சென்னையானது செம்படவர்கள் வசிக்கும் ஒரு சிறு குப்பமாக இருந்தது ; இங்கே ஒரு விதமான விளைபொருளுங் கிடையாது. இத்தகைய பிரதேசத்தில்தான், ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் செயின்ட் ஜார்ஜ் கோட்டை என்ற ஒரு கோட்டை யைக் கட்டினார்கள். அவர்கள் கோட்டையைக் கட் டியபின் சொற்ப காலத்துக்குள் கோட்டைக்கு அரு கில் பட்டினம் ஒன்று ஏற்பட்டது. அங்கு ஆயி ரக் கணக்கான இந்தியர்கள் வந்து குடியேறினார்கள். கம்பெனியைச் சேர்ந்த பெரிய குமாஸ்தாக்களும், காரிய நிருவாகிகளும் கோட்டைக்கு வெளியில் சுற்றி லும் தோட்டங்களோடு கூடிய அழகான கட்டிடங் களைக் கட்டி அவற்றில் குடியிருந்து மாலை வேளைகளில் வங்காளக் குடாக்கடலினின்று வீசும் மந்தமாருதத்தை நுகர்ந்துகொண்டு காலத்தைக் கழித்து வந்தார்கள். ஆனாலும், இக்காலத்தில் தாபத்தைத் தணிக்கவும்,

ஆரோக்கியத்தைப் பெருக்கவும், வாழ்வை விருத்தி செய்யவும் என்னென்ன சாதனங்கள் இருக்கின்றனவோ அவை அக்காலத்தவர்களுக்கு இல்லை. அக்காலத்தில் இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்குச் செல்லக் குறைந்தது ஆறுமாத காலம் பிடிக்கும்; சில சமயங்களில் ஒரு வருடமும் ஆவதுண்டு. ஆகவே, இந்தியாவுக்கு வந்த ஐரோப்பியர்கள் இவ்விடத்திலேயே நீண்ட காலம் தங்கி இந்நாட்டு வழக்கங்களையும் ஒழுக்கங்களையும் கைக்கொள்வது வழக்கம். நீண்ட காலத்துக்குப் பிறகு அவர்கள் ஐரோப்பாவுக்குச் சென்றாலும் அவர்களை அவ்விடத்திலுள்ள ஜன சமூகத்தார் தங்களுடைய கூட்டத்தில் சுலபமாகச் சேர்த்துக் கொள்வதில்லை. அதனால் அவர்கள் இந்திய இராஜாங்கத்தின் அதிகாரம் பெற்று, தாம் கட்டும் கோட்டைக்குள்ளும், அதைச் சார்ந்த இடங்களிலும் இருந்து தங்களுடைய முழு அதிகாரத்தையும் செலுத்தி வந்தார்கள். கோட்டையைச் சுற்றி இருந்த பிரதேசமானது நைஜாமுக்குக் கீழ்ப்பட்ட கர்நாடகத்தின் அதிபதியாகிய நவாபால் ஆளப்பட்டு வந்தது. அந்த நைஜாமும் மொகலாயச் சக்கரவர்த்திக்கு அடங்கியவரே.

இந்தியாவுக்குப் புறப்பட்ட கிளைவ் சுலபமாக அங்கு வந்து சேர்ந்துவிடவில்லை. அவர் பிரயாணஞ் செய்த கப்பல் பிரேசில் (Brazil) என்னுமிடத்தில் சில மாதங்கள் வரை தாமதித்தது. அப்போது அவர் போர்ச்சுகல் பாஷையை ஓரளவு கற்றுக்கொண்டார். கையிலிருந்த பணத்தையுஞ் செலவழித்து விட்டார். இங்கிலாந்தை விட்டுப் புறப்பட்டு ஒரு வருடங் கழித்தே அவர் இந்தியா வந்து சேர்ந்தார். அச்சமயம் அவர்

நிலை பரிதபிக்கத்தக்கதா யிருந்தது. கையிலோ பண மில்லை ; சம்பளமோ சொற்பம். அதனால் கடன் வாங்க வேண்டிய அவசியம் அவருக்கு எற்பட்டது. வசிப் பதற்குக் கிடைத்த இடத்திலோ வெயிலின் கொடுமை அதிகரித்துக் கொண்டிருந்தது. அவர் இங்கிலாந்தி னின்று புறப்பட்டபோது சென்னையில் ஒத்தாசை செய் யக்கூடிய நிலைமையிலிருந்த ஒருவருக்குச் சிபார்சுக் கடி தங்களோடு புறப்பட்டார். ஆனால், கிளைவ் சென்னை வந்து சேருவதற்கு முன்னதாகவே அவர் இங்கி லாந்துக்குப் பிரயாணமாகி விட்டார். கிளைவ் இயற் கையிலேயே சங்கோசமும் மூர்க்கத்தனமும் உள்ளவ ராதலால் சென்னையில் அறிமுக மில்லாதவரோடு சிநே கித்து, அவர்பால் சகாயம் பெற முயலவில்லை. அநேக மாதங்கள்வரை அவருக்கு ஒருவருடைய பழக்கமும் எற்படவில்லை. சென்னையின் சீதோஷ்ண நிலைமை அவ ருடைய ஆரோக்கியத்தையும், உற்சாகத்தையும் குறைத் தது. அவரது வேலையோ அவருடைய குணத்திற்கு எற்றதாயில்லை. ஆகவே, இங்கிலாந்துக்குத் திரும்பிவிட வேண்டுமென்ற அவா அவருக்கு எற்பட்டு, உறவின் முறையாருக்கு எழுதிய கடிதங்களில் தமது எண் ணத்தை அவர் அதிக வணக்கத்தோடும் வருத்தத் தோடும் தெரிவித்தார். அவர் தம்முடைய உறவினர் களுக்கு எழுதிய கடித மொன்றில் "என்னுடைய சொந்த நாட்டை விட்டு வந்தது முதல் ஒரு நாளாவது நான் சந்தோஷமாக இருக்கவில்லை. என்னுடைய அருமையான சுதேசமாகிய இங்கிலாந்தைப் பற்றி நினைக்கும்போது என் மனது மிகுந்த சங்கடத்தை அடைகிறது. நான் என்னுடைய சொந்த நாட்டை, அதிலும் மான்செஸ்டரை, திரும்பப் பார்க்கும் பாக்கி

யம் பெறுவேனாகில், நான் எதிர்பார்க்கக் கூடியவை களும், விரும்பக் கூடியவைகளும் ஒருங்கே எனக்குக் கிட்டியது போலாகுமென நம்புகின்றேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

அத்தகைய மன நிலையோடிருந்த கிளைவுக்கு ஓர் ஆறுதல் ஏற்பட்டது. சென்னை கவர்னர் நல்ல மாதிரி யான புத்தகாலயம் (Library) ஒன்று வைத்திருந்தார். அதில் போய்ப் படிப்பதற்கு அவர் கிளைவுக்கு உத்தரவு கொடுத்திருந்தமையால், அவர் தம்முடைய ஓய்வு நேரங்களி லெல்லாம் அப்புத்தகசாலைக்குச் சென்று கல்வியை மேன்மேலும் அபிவிருத்தி செய்துவந்தார். சிறுவராயிருந்தபோது சோம்பேறித்தனத்தில் காலங் கழித்துவந்த அவர் வாலிபத்தில் வித்தையில் கண்ணுங் கருத்துமாய்க் காலத்தைக் கழித்தார்.

இத்தகைய கஷ்டங்கள் ஏற்பட்டும் கிளைவ் தம் முடைய பிடிவாதத்தையும், முரட்டுத்தனத்தையும், மூர்க்கத்தனத்தையும் விடவேயில்லை. அவர் பள்ளிக் கூடத்தில் உபாத்தியாயர்களிடம் எவ்வாறு நடந்து கொண்டாரோ அவ்வாறே தமக்கு மேற்பட்ட உத்தி யோகஸ்தரிடமும் நடந்து கொண்டமையால், அந் நடக்கை அநேக சந்தர்ப்பங்களில் உத்தியோகத்திற்கே கேடுண்டாக்குமோ என்று அஞ்சத்தக்கதா யிருந்தது. குமாஸ்தாக்களுக்கென ஏற்பட்டிருந்த இடத்தில் வசித் துக்கொண்டிருந்தபோது, அவர் இரண்டு முறை தமது உயிரையே மாய்த்துக்கொள்ள எண்ணித் துப்பாக்கி யால் தம்மைச் சுட்டுக்கொண்டார். இரண்டு தடவை களிலும் குறி தவறிப் போய்விட்டது. அதன்மேல்

துப்பாக்கியைச் சரிவரப் பார்த்துவிட்டு அதில் ஒருவிதத் தவறும் இல்லாதிருந்ததைக் கண்டு, அவர் "ஏதோ அரிய பெரிய காரியம் என்னால் நடக்கவேண்டி யிருக்கலாம் ; அதனாலேயே கடவுள் என்னை உயிருடன் வைத்திருக்கிறார்போலும்" என்று வியப்புற்றார்.

## அத்தியாயம் 3.

### கிளைவ் போர்வீரராதல்.

கிளைவின் நிலைமை இவ்வாறிருக்க, அவரது வாழ்வின் எண்ணங்களை யெல்லாம் கவிழ்ப்பதுபோலக் காணப்பட்ட ஒரு சம்பவம் அவரது முன்னேற்றத் திற்குச் சாதகமாக ஏற்பட்டது. ஐரோப்பாவிலுள்ள ஆஸ்திரியா நாட்டின் அரசராகிய ஆறுவது சார்லஸ் என்பவர் தாம் இறக்கு முன், தம்முடைய குமாரத்தி யாகிய மேரியா தேரீஸா என்பவளுக்குத் தமக்குப் பின் னுல் இராஜ்யம் கிடைக்கவேண்டுமென்று ஓர் ஏற்பாடு செய்திருந்தார். அவ்வேற்பாட்டை ஐரோப்பிய அரசர் களிற் பலர் ஆதரித்தார்கள். பின்னர் சார்லஸும் இறந்துவிட்டார். அவர் இறந்துவிடவே அப்பட்டம் தமக்குக் கிடைக்கவேண்டு மென்று பவேரியா நாட்டு அரசர் கிளர்ச்சி செய்தார். தம்முடைய தகப்பனுர் ஏற் பாட்டின்படி அப்பட்டம் தமக்கே கிடைக்கவேண்டு மென்று மேரியா தெரீஸாவும் கிளர்ச்சி செய்யலானுர். இங்கிலாந்து மேரியா தெரீஸாவுக்கு உதவி புரிந்தது. பிரான்சும் ஸ்பெயினும் பவேரியா அரசருக்குத் துணை புரிந்தன. அப்போது இங்கிலாந்து தேசமானது கப் பற் படையில் முதன்மை பெற்றிருந்தாலும் பிரான்சும் ஸ்பெயினும் ஒன்று சேர்ந்து தாக்கியதால் அது சிறிது கஷ்டப்படவேண்டி யிருந்தது. கிழக்குச் சமுத்திரங் களில் பிரென்சு தேசத்தின் கடற் படை பலமாயிருந் தது. ஆகவே, மொரீஷஸ் நாட்டின் கவர்னராகிய லாபார்டினே பிரிட்டிஷ் கடற் படையின் பலமான எதிர்ப்பையும் பொருட்படுத்தாது இந்தியாவின்மீது

படையெடுத்துச் சென்னை வந்து சேர்ந்தார். சேர்ந்தவர் ஒரு படையைத் திரட்டிக்கொண்டு செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் வாயிற்படியில் வந்து ஆங்கிலேயரைச் சரண்புகும்படி செய்தார். செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் அதிகமான இராணுவம் இல்லாமற் போனபடியால் அவர்கள் லாபார்டினேயிடம் சரணடைந்தார்கள். செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் பிரென்சுக்காரருடைய கொடி நாட்டப்பட்டது. கோட்டையிலிருந்த சரக்குகளையெல்லாம் ஜயம்பெற்ற பிரென்சுக்காரர்கள் கைவசமாக்கிக்கொண்டார்கள். அதன்மேல் லாபார்டினே, ஆங்கிலேயர்கள் சண்டைக் கைதிகளாய்ச் சில சுதந்தரங்களுடன் நடத்தப்படுவார்களென்றும், அவர்கள் பணங்கொடுத்து மீட்டுக் கொள்ளும் வரை சென்னையானது பிரென்சுக்காரரிடமே இருக்கவேண்டுமென்றும் நிபந்தனைகளைப் பிறப்பித்தார். லாபார்டினே ஆங்கிலேயரிடம் சொற்ப பணமே எதிர்பார்ப்பதாகவும் வாக்களித்தார்.

அப்போது இந்தியாவில் பிரென்சுக்காரருக்குச் சொந்தமான புதுச்சேரிக்கு டியூப்ளே என்பவர் கவர்னராயிருந்தார். அவர் இந்தியா முழுவதையும் ஜயித்துவிட வேண்டுமென்ற எண்ணங்கொண்டிருந்தார். ஆகலால், அவர் செயின்ட் ஜார்ஜ் கோட்டை பிடிபட்டதைக் கேட்டுச் சந்தோஷங் கொண்டவராய், இந்தியாவில் பிரென்சுப் படையைக்கொண்டு கைப்பற்றிய நாடுகளைப் பொறுத்த அதிகாரம் கவர்னருக்கே உரியதென்றும், லாபார்டினேயின் நிபந்தனைகள் செல்லாவென்றுங் கூறி, செயின்ட் ஜார்ஜ் கோட்டையை இடித்துத் தள்ளி விடும்படி லாபார்டினேக்குக் கட்டளையிட்டார்.

லாபார்டினேயும் தம்முடைய வாக்குறுதிகளுக்கு மாறு கக் கோட்டையை இடித்துத் தள்ளவேண்டியவரானர். டியூப்ளே கோட்டையை இடித்துத் தள்ளக் கட்டளை யிட்டதுடன் நில்லாமல், சிறைப்பட்ட ஆங்கிலேய கவர்னரையும், பிரதான உத்தியோகஸ்தர்களையும் தக்க பந்தோபஸ்தோடு புதுச்சேரிக்கு அழைத்துச் சென்று, ஐம்பதினயிரம் ஜனங்களின் முன்னிலையில் தெருத் தெருவாக இழுத்தடித்தார். அதனல் ஆங்கிலேயர் களுக்குப் பிரென்சுக்காரர்கள் மீது விசேஷ வருத்த மும் வெறுப்பும் எற்பட்டன.

இங்ஙனம் சிறையானவர்களில் கிளைவும் ஒருவர். அவர் ஒருநாள் இரவில் மகம்மதியனைப் போல் மாறு வேடம் பூண்டு புதுச்சேரியிலிருந்து தப்பித்துக் கட லூருக்கருகில் ஆங்கிலேயருக்குச் சொந்தமான செயின்ட் டேவிட் என்ற கோட்டையை அடைந்தார். இச்சமயத்தில்தான் அவருக்கு குமாஸ்தா வேலையை விட்டுவிட்டு சேனபதி என்று பெயர் பெறுவதற்கு எற்ற சந்தர்ப்பம் வாய்த்தது.

சென்னை பிரென்சுக்காரர் வசம் சிக்குண்டதையும், தம்முடைய நாட்டினருக்குப் புதுச்சேரியில் நேரிட்ட அவமானத்தையும் கண்ட கிளைவ், குமாஸ்தா வேலையை விட்டு, இராணுவத்தில் சேர முயற்சிசெய்து, ஓர் உத்தி யோகத்தையும் பெற்றுர். கிளைவ் குமாஸ்தாவாயிருக் கும்போதே செயின்ட் டேவிட் கோட்டையிலிருந்த குத்துச்சண்டைக்காரன் ஒருவனை மல்யுத்தத்தில் தோற் கடித்துத் தைரியசாலி என்ற பெயரோடு அங்கே இருந்த இராணுவ வீரர்களின் நன் மதிப்பையும் பெற்

திருந்தார். இராணுவ உத்தியோகத்தில் அவரிடம் முன்பு வெளிப்படையாகத் தோன்ருத குணங்களான புத்தி சாதுரியம், நியாயமான வரம்புகளுக்கு அடங்கி நடக்கும் பான்மை, திர்க்காலோசனை முதலியன காணப்பட்டன. பிரென்சுக்காரர்களுடன் ஏற்பட்ட சச்சாவுகளில் அவர் தம்முடைய வீரதீரத்தைக் காட்டி, அப்போது இந்தியாவில் திறமை வாய்ந்த பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் என்று கருதப்பட்டு வந்த மேஜர் லாரேன்ஸ் என்பவரின் நன்மதிப்பையும் அடைந்தார். அந்த உத்தியோகஸ்தர் அவருடைய வீரச் செய்கைகளைக் கண்டு சந்தோஷித்தார்.

கிளைவ் இராணுவத்தில் சேர்ந்த சில மாதங்களுக்குள் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் சமாதானம் ஏற்பட்டுவிட்டது. அதனுல் பிரென்சுக்காரர் சென்னையை ஆங்கிலேயருக்குக் கொடுத்துவிடும்படி நேரிட்டது. அதன் மேல் கிளைவும் இராணுவத்தை விட்டுக் குமாஸ்தா வேலையில் திரும்பவும் வந்து சேரவேண்டியதாயிற்று. குமாஸ்தா வேலையில் அவர் கொஞ்ச காலமிருந்தார். அதற்கு மேல் சுதேசிகளுடன் ஏற்பட்ட சண்டையில் மேஜர் லாரன்ஸுக்கு உதவியாகச் சென்றிருந்தார். அச்சண்டை முடிந்தவுடன் குமாஸ்தா வேலைக்கே அவர் மறுபடியும் வரவேண்டியதாயிற்று. அவர் இராணுவ வேலையிலும், குமாஸ்தா வேலையிலும் மாறி மாறி யிருந்து காலங்கழித்து வருகையில் அவருக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டது. அதன் பயனுக அவர் குமாஸ்தா வேலையை அடியோடு விட்டுவிட்டு இராணுவத்திலேயே இருக்கக்கூடிய பாக்கியம் அவருக்குண்டாயிற்று. அது என்ன வென்பதைப் பற்றிச்

சிறிது ஆராய்வோம். இந்தியாவின் அரசியலில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டது. பிரிட்டிஷ் இராஜ்யமும், பிரென்சு இராஜ்யமும் சண்டையை நிறுத்தி விட்டுச் சமாதானம் செய்து கொண்டாலும் இந்தியாவில் வியாபாரஞ் செய்துகொண்டிருந்த ஆங்கில வர்த்தகர்களும், பிரென்சு வர்த்தகர்களும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். அச்சண்டை மிகவும் முக்கியமானது. அச்சண்டையால்தான் ஆங்கிலேயருக்கு இந்தியாவில் ஆதிக்கம் வலிமை யடையச் சந்தர்ப்பங்கள் வாய்த்தன.

## அத்தியாயம் 4.

### மோகலாய இராஜ்யத்தின் நிலைமை.

பதினாறாவது நூற்றாண்டில் பாபரால் (Baber) ஸ்தாபிக்கப்பட்டு அவருக்குப் பின்னால் அவருடைய சந்ததியாரால் விருத்தியாக்கப்பட்ட மொகலாய இராஜ்யமானது நீண்ட நிலப் பரப்பினைக் கொண்டு உலகத்தினரால் மெச்சத்தக்கதாக இருந்துவந்தது. அந்த இராஜ்யத்தில் இருந்த ஜனத்தொகை எந்த ஐரோப்பிய இராஜ்யத்திலும் இருந்ததில்லை; அதன் வருமானமும் வேறெந்த இராஜ்யத்திற்குங் கிடையாது. மொகலாய அரசர்களால் கட்டப்பட்ட கட்டிடங்கள் கண்ணைக் கவரத்தக்கன; ஐரோப்பியப் பிரயாணிகளும் அவைகளின் வனப்பைக் கண்டு ஆச்சரியப்பட் டிருக்கின்றனர். மொகலாய அரசர்களின் தலைநகராகிய டில்லியில் ஆடம்பரங்களும், வேடிக்கைகளும், அலங்காரங்களும் அதிகமா யிருந்துவந்தன. மொகலாய அரசர்களிடமிருந்து உத்தரவு பெற்று மாகாணங்களை அவர்களுடைய பெயரால் ஆண்டுகொண்டிருந்த இராஜப்பிரதிநிதிகள்கூட வெளிநாட்டு அரசர்களைக் காட்டிலும் மேம்பட்டவர்களாய் அதிகப் பிரதேசங்களை ஆண்டுவந்தார்கள்.

மொகலாய இராஜ்யம் இத்தகைய பெருமை பொருந்தியதாகக் காணப்பட்டாலும், அதன் உன்னத நிலையில் கூட நிர்வாக முறையில் கொடுங்கோன்மையின் பாற்பட்ட அநேக ஊழல்கள் மலிந்து கிடந்தன. ஜாதிச் சண்டைகள் அளவுக்குமீறி நடந்தன. இராக

வம்சங்களைச் சேர்ந்தவர்களுங்கூட தங்களுக்குள் சண்டைபோட்டு அநியாயமான காரியங்களை நடத்திக் கொண்டு போனார்கள். பேராசைகொண்ட தளகர்த்தர்கள் சுதந்தரம் அடைந்துவிட முயன்றார்கள். இந்துக்களில் தைரியமும் பலமும் வாய்ந்த இனத்தினர், அந்நிய ஆட்சியை வெறுத்துப் பல தடவைகளில் அரசிறையைக் கொடாமலிருப்பதும், மலைச் சரிவுகளில் ஒளிந்துகொண்டு மொகலாயப்படைகளைப் பின் வாங்கும்படி தோற்கடிப்பதும், பள்ளத்தாக்குகளில் புகுந்து கொள்ளை யடிப்பதுமாகிய காரியங்களைச் செய்ய வாரம்பித்தார்கள். அப்படி யெல்லாம் இருந்துங்கூட ஒன்றரை நூற்றாண்டுக்கு மேல் மொகலாய இராஜ்யமானது இந்தியாவில் வேரூன்றி யிருந்தது. ஆனால் ஔரங்கசிப் பட்டத்திற்கு வந்தது முதல் இராஜ்யமானது கொஞ்சம் கொஞ்சமாகச் சீர்குலைய வாரம்பித்தது. கடைசியில், அவருடைய மரணத்திற்குப் பின் அதனுடைய சீர்கேடு அளவுக்கு மீறிப் போயிற்று. அவர் காலத்திற்குப் பின் ஒருவர் பின் ஒருவராய் அநேக அரசர்கள் அந்த இராஜ்யத்தை ஆண்டார்கள். அவர்கள் அனைவரும் சோம்பேறிகளாயும், துர் நடத்தைகள் கொண்டவர்களாயும் இருந்தார்கள். அவர்கள் அவ்வண்ணம் இருந்ததனால், நாதர் ஷா (Nadir Shah) என்னும் பாரஸீக நாட்டரசன் சிந்து நதியைக் கடந்து டில்லிக்குள் பிரவேசித்துத் தன் எதிரில் அகப்பட்டவர்களை யெல்லாங் கொல்லவும், அவனுடைய இராணுவ வீரர்கள் தங்கள் எதிரில் அகப்பட்ட பொருள்களை யெல்லாங் கொள்ளை யடிக்கவும் சாத்தியமா யிருந்தது. எங்கும் நெருப்புப் புகையும் கூச்சலுமே குடிகொண்டிருந்தன. நாதர் ஷா இந்தி

யாவின் மீது படை யெடுத்துச் சென்று, பின்பு காபூல் நகரின் மன்னனுன ஆமத் ஷா (Ahmed Shah) என்னும் ஆப்கானிய வீரன் இந்தியாவின் மீது படை யெடுத்து டில்லியில் பிரவேசித்தான். அவனும் அவ னுடைய படை வீரர்களும் தங்கள் மனம் போன வாறு கொள்ளையடித்தார்கள். இராஜபுதனத்திலிருந்த இராஜபுத்திரர்கள், மொகலாய ஆதிக்கத்தை யொழித்து விட்டுச் சுதந்தரம் பெற்றவர்க ளாகிவிட்டார்கள். ரோயில்லாஸ் (Robillas) என்ற ஒருவகை ஜாதியார் ரோயில்கண்ட் பிரதேசத்தைக் கைப்பற்றிக்கொண்டார் கள். சிக்கியர் (Sikhs) என்ற ஒருவகை ஜாதியார் கிளம்பி, சிந்துநதிப் பிரதேசமாகிய பஞ்சாபில் ஓர் இராஜ்யத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். ஜாட்ஸ் (Jats) என்ற ஒருவகை ஜாதியார், யமுனை நதிக்கரை நெடுகக் கொள்ளையடித்துக் குழப்பஞ்செய்துகொண் டிருந்தார்கள். இந்தியாவின் மேற்குக் கடற்கரை யோரத் தில் மஹாராஷ்டிரர் கிளம்பி, பலத்தாலும், புத்தி சாதுரி யத்தாலும், தந்திரங்களாலும் பல பாகங்களை வென்று இராஜ்யங்களை ஸ்தாபித்துக்கொண்டார்கள். அவர் களைக் கண்டால் எல்லாருக்கும் நடுக்கமாகவே யிருந் தது. அவர்களுடைய இராஜ்யமானது அரபிக் கடலி லிருந்து வங்காளக்குடாக்கடல் வரை வியாபித்திருந் தது. மஹாராஷ்டிரர்களின் தலைவர்கள் பூனு, குவாலி யர், கூர்ஜ்ஜரம், தஞ்சாவூர் ஆகிய விடங்களில் இராஜ் யங்களை ஸ்தாபித்துக் கொண்டு அரசாண்டு வந்தார்கள். அநேக மாகாணங்கள் மஹாராஷ்டிர அரசர்களுக்கு வருடந்தோறும் கப்பங் கட்டிக்கொண்டு வந்தன. பேரளவில் மொகலாய சக்கரவர்த்தி என்ற பெயரைக் கொண்ட மகமத் ஷாவும் அத்தகைய கப்பங் கட்டி

வந்தார் என்றால் அவர்களுடைய ஆதிக்கத்தைச் சொல்லவும் வேண்டுமோ?

மொகலாய சக்கரவர்த்திகளுக்குக் கீழ்பட்டிருந்த அநேக இராஜப் பிரதிநிதிகள் சுதந்தரம் பெற்றுவிட்டார்கள். பேருக்கு மாத்திரம் மொகலாய இராஜ்யத்திற்குக் கீழ்பட்டவர்களென்று அவர்கள் சொல்லிக் கொண்டார்கள். எப்போதாகிலும் அவர்கள் டில்லியிலுள்ள அரசனுக்குச் சன்மானங்கள், வெகுமதிகள் கொடுத்து அனுப்புவது வழக்கம். அதற்குப் பிரதிபலனாக டில்லி சக்கரவர்த்தி சில பிருதுகளை அவர்களுக்கு வழங்குவது மரபாயிருந்து வந்தது. மொகலாய அரசாட்சிக்குக் கீழ்பட்டிருந்த வங்காள நவாபும், நைஜாமும், கர்நாடக நவாபும் சுதந்தரம் பெற்ற அரசர்களாகிவிட்டனர். மகமதியர்களும், மஹாராஷ்டிரர்களும் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொண்டிருந்தார்களாகையால் இந்தியாவை ஆளக் கூடியவர் மகமதியரா அல்லது மஹாராஷ்டிரரா என்பதை வரையறுத்துக் கூற வகையில்லாமலிருந்தது. ஆனால், இந்தியாவுக்கு வியாபாரத்திற்காகப் போந்த பிரிட்டிஷார் இறுதியாக இந்தியாவைத் தங்களுடைய ஆளுகையின் கீழடக்கிக்கொள்வார் என்பது எதிர்பார்க்கக்கூடாததா யிருந்தது.

க்ஷீணித்துப்போன மகமதிய இராஜ்யத்திற்குப் பதிலாக ஐரோப்பிய இராஜ்யத்தை இந்தியாவில் ஏற்படுத்தக் கூடுமென்று முதல் முதலாக எண்ணியவர் டியூப்ளே யாவர். இந்திய சிப்பாய்களை ஐரோப்பிய முறையில் பழக்கினால் அவர்கள் நன்றாகச் சண்டை போடுவார்களென்பதைக் கண்டுபிடித்தவரும் அவரே.

அப்படிச் செய்துவிட்டால் இந்திய மன்னர்களின் எண்ணிறந்த படைகளும் பிரயோஜனமற்றுப் போய் விடுமென்று அவர் கருதினர். இன்னும் முன்னேற்றத் திற்கான மற்றொரு வழியையுங் கண்டுபிடித்தார். தாம் சொல்லுகிறபடி நடக்கும் ஒரு சுதேச அரசரைக் கைக் குள் போட்டுக்கொண்டு அவர் மூலமாகக் காரியங்களைச் செய்துகொண்டு போனல் அது நன்மை பயக்குமென் றுந் தெரிந்துகொண்டார். அத்தகைய எண்ணங்களை யும், செய்கைகளையும் அநுபவத்தில் கொண்டுவந்து காரியங்களை நடத்தியவரும் அவரே.

## அத்தியாயம் 5.

### டியூப்ளேயின் வெற்றி-தக்காணத்தில் பிரேன்சுக்காரரின் ஆதிக்கம்

டியூப்ளே தென்னிந்தியாவில் பிரென்சு இராஜ்யத்தை ஸ்தாபிக்க எண்ணிக்கொண் டிருக்கையில் தக்காணத்தின் கவர்னரான நிஜாம்-அல்-முல்க் (Nizam-Ul-Mulk) 1748-ம் ஆண்டில் காலஞ்சென்ருர். அவருக்குப் பின்னுல் அவருடைய குமாரராகிய நாசர் ஜங் என்பார் பட்டத்திற்கு வந்தார். அந்த இராஜ்யத்தைச் சேர்ந்த கர்நாடகப் பிரதேசத்தை அன்வார்-உதீன் கான் (Auwar-ud-din Khan) என்னும் ஒரு மகமதியர் பரிபாலித்து வந்தார். அது அப்படியிருக்க, நிஜாம்-அல்-முல்கின் பேரராகிய முசபர் ஜங் என்பவர் தக்காணம் தமக்குச் சேரவேண்டுமென்றும், தம்மைத் தவிர வேறு ஒருவருக்கும் அதில் பங்கு கிடையாதென்றுங் கூறினுர். அன்வார்-உதின்-கானுக்கு முன்னிருந்த நவாபின் மருமகராகிய சந்தா சாஹிப் என்பவர் கர்நாடகப் பிரதேசத்தின் பரிபாலனம் தம்மைச் சார்ந்ததென்றும், அன்வார்-உதீன் கானுக்கு ஒருவித பாத்தியதையும் இல்லையென்றுங் கூறினுர். அதன் மேல் முசபர் ஜங்கும் சந்தா ஸாஹிபும் ஒன்று சேர்ந்துகொண்டு கர்நாடகத்தின்மீது படையெடுத்தார்கள். படையெடுத்தவர்கள் பிரென்சுக்காரரைத் துணைக்கு அழைத்தார்கள். சமயம் எப்போது வாய்க்குமென்று இரவும் பகலும் எண்ணியிருந்த டியூப்ளே தம்முடைய எண்ணங்களை நிறைவேற்றத் தக்கச் சந்தர்ப்பங் கிடைத்ததென்று மகிழ்ந்து முசபர் ஜங்குடனும், சந்தா ஸாஹிபுடனும் சேர்ந்து

கொண்டார். அவர்களுக்குத் துணைபுரிய அவர் நானூறு பிரெஞ்சு சிப்பாய்களையும், இரண்டாயிரம் இந்தியச் சிப்பாய்களையுங் கொடுத்து உதவினார். முசபர் ஜங் சந்தா ஸாஹிபு ஒரு புறமும், அன்வார்-உதீன் கான் இன்னொரு புறமும் இருந்து சண்டை போட்டார்கள். சண்டை ஆம்பூர் என்னுமிடத்தில் நடந்தது. அச்சண்டையில் பிரென்சுக்காரர்கள் அதிக வீராவேசத்துடன் போர் புரிந்தார்கள். அன்வார் உதீன் கான் தோல்வியடைந்தார்; பின்னர் கொல்லையுண்டார். அன்வார்-உதீன் கானின் குமாரராகிய மகமது அலி என்பவர் ஒரு சிறு படையுடன் திருச்சிராப்பள்ளிக்கு ஓடினார். அதன்மேல் கர்நாடகம் முழுமையும் முசபர் ஜங், சந்தா ஸாஹிபு வசம் வந்துவிட்டது.

இதனால் டியூப்ளேயின் புகழ் அதிகமாகப் பரவ ஆரம்பித்தது. அப்படியிருக்க, நாசர் ஜங் என்பவர் தம்முடைய கூட்டாளிகளாலேயே கொல்லப்பட்டார். அதன்பின் முசபர் ஜங் ஒருவிதத் தடங்கலுமின்றித் தக்காணத்தின் அரசரானார். பிரென்சு இராணுவ வீரர்களின் வெற்றியும், பிரென்சுக்காரரின் இராஜ தந்திரமும் எண்ணிய அளவுக்குக் காரியங்களைச் செய்து முடித்தன. புதுச்சேரி தெய்வலோகம்போல் விளங்கியது. அங்கு வெற்றியின் அறிகுறியை முன்னிட்டுக் குண்டுகள் போடப்பட்டன. மாதா கோயில்களில் பிரார்த்தனைகள் செலுத்தப்பட்டன. புதிய நிஜாமான முசபர் ஜங் தாமே நேரில் புதுச்சேரிக்குச் சென்று அங்கே பெருத்த சடங்குகளுக்கிடையே பட்டஞ்சூட்டிக் கொண்டார். டியூப்ளேயும் ஒரு மகமதிய அரசனைப் போல் உடை தரித்துக்கொண்டு நிஜாம் ஏறிச் சென்ற

பல்லக்கிலேயே உடன் சென்ருர். கிருஷ்ணுநதி முதல் கன்னியாகுமரி வரையிலுள்ள நாடுகளுக்கு டியூப்ளே யைக் கவர்னராக நியமித்தார். சந்தா ஸாஹிபும் அவ ருக்குக் கீழ்ப்படிந்தே இருக்கவேண்டியவ ரானுர். அநேக ஆயிரம் ஜனங்களைக் கொண்ட குதிரைப் படை களும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டன. புதுச்சேரி யில் தவிர, கர்நாடகத்தைச் சேர்ந்த மற்ற எந்த நாட்டி லும் நாணயச் சாலைகள் இருத்தல் கூடாதென்று நிஜாம் கட்டளை பிறப்பித்தார். தமக்கு முன்னிருந்த இராஜப்பிரதிநிதிகள் சேர்த்து வைத்திருந்த தொகை யில் பெரும் பாகத்தை டியூப்ளேக்குக் கொடுத்தார். அநேக விலையுயர்ந்த நகைகளுடன் டியூப்ளே இரண்டு லட்சம் பவுன்களைக் காசாகவே பெற்றுக்கொண்டா ரென்னும் ஒரு வர்த்தமானமும் பலரால் சொல்லப்ப டது. கர்நாடகம் முழுமையிலும் அவர் அதிகாரத் தைச் செலுத்தி வந்தார். அவருடைய தயவில்லாமல் அரசாங்கத்தினிடமிருந்து பணத்தையோ வேறு வித மான நன்மையையோ பெறுவது ஒருவருக்கும் முடியா மற் போயிற்று. அவர் கையெழுத்துப் போடாத ஒரு கடிதத்தையும் நிஜாம் ஏற்றுப் பார்ப்பதில்லை.

நிஜாமான சில மாதங்கள் வரைதான் முசபர் ஜங் உயிருடனிருந்தார். அவர் இறந்த பின் சலபட் ஜங் என்பவர் பிரெஞ்சுக்காரர்களின் உதவி பெற்று நிஜா மானுர். அவர், முசபர் ஜங் பிரெஞ்சுக்காரருடன் செய்து கொண்ட உடன்படிக்கைகளை யெல்லாம் அங்கிகாரஞ் செய்துகொண்டு அவர்களுடன் சிநேகமாயிருந்தார். டியூப்ளே அக்காலத்தில் இந்தியாவில் பிரசித்தி பெற் றிருந்தார். நான்கு வருட காலத்தில் அவர் இந்தியா

வில் நடத்திய காரியங்களைக் கண்டு, இந்தியர்கள் ஆச்சரியப்படலானார்கள். அளவுக்கு மீறிய அதிகாரத்தைப் பெற்ற அவர் அதனுடன் நிற்காமல் தம்முடைய ஆட்சியின் கீழிருந்த ஜனங்களையும் அவமதிக்கலானார். தாம் ஜயம் பெற்ற இடத்தில் பெரிய தூண் ஒன்றை நிறுத்தி, அதன் நான்கு பக்கங்களிலும் தம்முடைய வெற்றிப் பிரதாபங்களைச் செதுக்கி வைக்க எண்ணங் கொண்டார். அதன்படியே அதைச் செய்து முடித்தார். அந்தத் தூணைச்சுற்றி நகரம் ஒன்று ஏற்பட்டது. அதற்கு 'டியூப்ளே பாதியாபாத்' அல்லது 'டியூப்ளேயின் வெற்றிக்கு அறிகுறியான நகரம்' என்று பேர்.

பிரென்சு ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் முன்னேற்றத்தைத் தடுக்க ஆங்கிலேயர்கள் தங்களாலான சில முயற்சிகளைச் செய்தார்கள். அதோடு மகமது அலியைக் கர்நாடக நவாபாகவும் அவர்கள் அங்கிகரித்தார்கள். மகமது அலிக்குத் திருச்சிராப்பள்ளி ஒன்று மாத்திரம் சொந்தமா யிருந்தது. சந்தா ஸாஹிபும், பிரென்சுக்காரரும் திருச்சிராப்பள்ளிக்குச் சென்று அக் கோட்டையை முற்றுகை செய்தார்கள். அவர்களைத் தடுக்க மகமது அலியாலும் ஆங்கிலேயர்களாலும் முடியவில்லை. சென்னையிலிருந்த பிரிட்டிஷ் படையும் சிறிதாகவே யிருந்தது. அப்படையை நடத்தக்கூடிய தளகர்த்தரும் இல்லை. மேஜர் லாரென்ஸூம் இங்கிலாந்துக்குச் சென்றுவிட்டார். யுத்த சாகசங்களில் தேர்ச்சி பெற்ற ஒரு உத்தியோகஸ்தரும் சென்னையில் இல்லை. சென்னையைச் சுற்றியிருந்த இந்தியர்களுக்கும் ஆங்கிலேயரிடம் வெறுப்பு ஏற்பட்டிருந்தது. பிரென்சுக்கொடி சென்னைக் கோட்டையில் பறந்துகொண்டு இருந்த

தையும், ஆங்கிலேயப் பிரமுகர்கள் புதுச்சேரிக்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்கே தெருக்களின் வழியாய் நடத்தப்பட்டு ஜனங்கள் பார்த்துப் பரிகசிக்கும் நிலைமை யடைந்ததையும் அவர்கள் அறிந்திருந்தார்களாகையால் அவர்களிடங் கொண்டிருந்த மதிப்பினின்று அவர்கள் பிறழலானார்கள். டியூப்ளேயின் செல்வாக்கு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு போனதையும், பிரிட்டிஷார் பிரெஞ்சுக்காரரை ஒடுக்கச் செய்த முயற்சிகள் பலனளிக்காமல் போனதையும் இந்தியர்கள் கண்டு அவர்களை அசட்டை செய்யவும் ஆரம்பித்துவிட்டார்கள். அச்சந்தர்ப்பத்தில்தான் ராபர்ட் கிளைவுக்கு, குன்றி வரும் ஆங்கிலேயரின் மதிப்பையும், கௌரவத்தையும் தம் தைரியத்தாலும், புத்தியாலும், பெருக்கி அவர்களின் அதிகாரத்தை நிலை நிறுத்தச் சமயம் வாய்த்தது.

# அத்தியாயம் 6.

## ஆற்காட்டு முற்றுகையும்-கிளைவின் வீரச் செயல்களும்

இனி, கிளைவ் பிரிட்டிஷாரின் மேன்மையை எங்ஙனம் பிரகாசிக்கச் செய்தாரென்பதைச் சிறிது கவனிப்போம். வியாபாரத் துறையில் சிறிது காலமும், இராணுவத் துறையில் சிறிது காலமுமாக உழன்றுகொண்டிருந்த கிளைவ் கடைசியாக இச்சமயத்தில் இராணுவ வீரர்களுக்கு ஆகாரம், உடை முதலானவை கொடுப்பதற்கு ஏற்பட்ட உத்தியோகத்தை அடைந்தார். அதனுல் அவர் இரண்டு விஷயங்களிலும் தம் திறமையைக் காட்ட அவருக்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. அச்சந்தர்ப்பத்தில் அவர் பெரிய உத்தியோகஸ்தர்களிடஞ் சென்று, எப்படியாவது மகமது அலிக்கு உதவி செய்ய வேண்டுமென்றும், அப்படிச் செய்யாவிட்டால் திரிச்சிராப்பள்ளி சந்தா ஸாஹிபுக்குக் கிடைத்துப் பிரென்சுக்காரர்களின் ஆதிக்கம் ஓங்கி வளர்ந்து விடுமென்றும், அதனுல் பிரிட்டிஷாருக்கு இன்னும் அதிகமான நஷ்டங்கள் சம்பவிக்குமென்றும் ஆலோசனை கூறினர். அத்துடன் நில்லாமல் சந்தா ஸாஹிபின் தலை நகராகிய ஆற்காட்டை முற்றுகை செய்தால், சந்தா ஸாஹிபானவர் அதைக் கேள்விப்பட்டுத் தம் தலை நகரைக் காக்க ஆற்காட்டுக்குத் திரும்புவார் என்றும், அப்போது மகமது அலிக்கு உதவி செய்யக் கூடுமென்றுங் கூறினர். அதைக் கேட்ட உத்தியோகஸ்தர்களும் அவருடைய ஆலோசனை உயர்ந்ததென்று கருதி, திரிச்சிராப்பள்ளியின் பாதுகாப்பை அவரிடம் ஒப்படைத்தார்கள். ஐரோப்பிய யுத்த முறைகளில் தேர்ச்சியடைந்த இருநூறு ஆங்கில இராணுவ வீரர்களையும், முந்நூறு இந்தி

யச் சிப்பாய்களையும் கொண்ட ஒரு படையை அவர் வசம் ஒப்படைத்து அப்படையின் தலைவராக அவரையே நியமித்தார்கள். அவருக்கு உதவியாக எட்டு உத்தியோகஸ்தர்களும் நியமிக்கப்பட்டார்கள். அவர்களில் இருவர் தவிர மற்றவர்களுக்குச் சண்டையைப் பற்றிய உணர்ச்சி கொஞ்சமும் கிடையாது. அவர் புறப்பட்டபோது இடியும், மின்னலும், மழையுமாகவே இருந்தன. அவற்றிற்கெல்லாம் இளைக்காமல் அவர் படைவீரர்களை ஆற்காட்டுக்கு அழைத்துச் சென்றார். அப்படையைக் கண்டவுடன் ஆற்காட்டிலிருந்த நவாபின் படைவீரர்கள் இன்னது செய்வதென்று தோன்றாமல் திகைப்புண்டு கோட்டையை விட்டுவிட்டு ஓடினார்கள். அதனால் கிளைவ் ஒருவிதத் தடையுமில்லாமல் ஆற்காட்டிற்குள் பிரவேசித்தார்.

ஆற்காட்டிற்குள் பிரவேசித்த கிளைவ் காலத்தை வீணாக்காமல் சந்தா ஸாஹிபின் தாக்குதல்களுக்கு எதிர்த்துத் தாக்குவதற்கான வேலைகளையே செய்து கொண்டு போனதுடன், எதிரிகளின் முற்றுகை நீண்ட நாள் இருந்தாலுங்கூடத் தம் படைகள் இளைக்காமல் இருப்பதற்கு வேண்டிய ஆகாராதிகளையும், பிறவற்றையுஞ் சேகரித்துக் கொண்டிருந்தார். அவர் அப்படிச் செய்துகொண்டிருக்கையில், ஓடின படைவீரர்கள் ஒருவாறு மனந் தெளிந்து அக்கம் பக்கத்திலிருந்த படைவீரர்களை ஒன்று சேர்த்துக் கொண்டு நகருக்கு அருகாண்மையில் போந்து ஓரிடத்தில் தங்கி யிருந்தார்கள். அவர் அங்ஙனம் இருந்ததைக் கண்ட கிளைவ் யாருக்குந் தெரியாமல் திடீரென இராக்காலத்தில் தம் படையைத் திரட்டிக் கொண்டு போய், அப் படைவீரர்

களைத் தாக்கினர். அச்சண்டையால் சந்தா ஸாஹிபின் படை வீரர்களில் அநேகர் மாண்டனர். எஞ்சியிருந்தவர்களை அடித்துத் துரத்திவிட்டார். அவர் அழைத்துச் சென்ற இராணுவ வீரர்களில் ஒருவரும் இறக்கவில்லை.

ஆற்காட்டில் கிளைவ் நடத்திய காரியங்கள், திரிச்சிராப்பள்ளியிலிருந்த சந்தா ஸாஹிபுக்கும், அவருக்குத் துணைபுரிந்துகொண்டிருந்த பிரென்சுக்காரர்களுக்கும் எட்டின. அவர்கள் அவ்விஷயத்தைக் கேட்டுத் தங்களுடைய படைவீரர்களில் நாலாயிரம் பேரை உடனே ஆற்காட்டிற்கு அனுப்பினார்கள். அவர்கள் தமக்கு முன் கிளைவால் முறியடிக்கப்பட்ட படைவீரர்களுடன் சேர்ந்துகொண்டார்கள். அவர்களுக்கு உதவியாக வேலூரிலிருந்து இரண்டாயிரம் படைவீரர்கள் வந்து சேர்ந்தார்கள். அதற்குமேல் டியூப்ளே என்பவரும் நூற்றைம்பது பிரென்சு வீரர்களைப் புதுச்சேரியினின்று ஆற்காட்டிற்கு அனுப்பினர். மொத்தத்தில் அவர்களின் தொகை ஏறக்குறையப் பத்தாயிரம் வரையிருந்தது. அவர்களுக்கெல்லாந் தலைவராய் சந்தா ஸாஹிபின் மகனாகிய இராஜா ஸாஹிபு நியமிக்கப்பட்டார்.

பத்தாயிரம் இராணுவ வீரர்களைத் தம் அதிகாரத்தின் கீழ்க்கொண்ட இராஜா ஸாஹிபு, அவர்களுடன் ஆற்காட்டிற்குப் போந்து அதை முற்றுகை செய்தார். ஆற்காட்டுக் கோட்டையின் சுவர்கள் எல்லாம் க்ஷீணித்து இருந்தன; அகழிகள் வறண்டிருந்தன; கொத்தளங்களில் பிரங்கிகள் வைக்கக்கூடவில்லை; கொத்தளங்கள் தாழ்ந்திருந்தமையால் இராணுவ வீரர்

களுக்குப் போதுமான பாதுகாப்பை யளிக்கவில்லை. நோய் முதலியவைகளினால் கிளைவின் பட்டாளத்தைச் சேர்ந்த அநேக இராணுவ வீரர்கள் இறந்துவிட்டார்கள். போனவர்களெல்லாம் போக அவருடைய பட்டாளத்தில் நூற்றிருபது ஆங்கிலேய இராணுவ வீரர்களும், இருநூறு இந்தியச் சிப்பாய்களுமே மீதியாயிருந்தார்கள். உத்தியோகஸ்தர்களில் நான்குபேரே மீதியாயிருந்தனர். ஆகாராதிகளும் குறைவாகவே இருந்தன. அத்தகைய சந்தர்ப்பத்தில் ஆற்காட்டைக் காக்க முன் வந்தவர் ஆதியில் குமாஸ்தா வேலைக்குப் பழக்கப்பட்டவரும், இருபத்தைந்து வயதினருமான ராபர்ட் கிளைவ் என்னும் சிங்கக் குட்டியே யாவர்.

ஆற்காட்டு முற்றுகை ஐம்பது நாள் வரை நடைபெற்றது. அந்த ஐம்பது தினங்களிலும் கிளைவ் அதிக புத்திசாதுரியத்துடனும், முன் நோக்குடனும், விடாப்பிடியுடனும், தீரத்துடனுங் காரியங்களைச் செய்து கொண்டு போனார். இராஜா ஸாஹிபின் படைகள் ஆற்காட்டுக் கோட்டையைப் பீரங்கிகளால் தாக்கவே, சுவரில் வழி ஒன்று ஏற்பட்டு நாளுக்கு நாள் அகலமாய்க் கொண்டே போயிற்று. கிளைவின் படைவீரர்களுக்குச் சாப்பாட்டுக் கஷ்டம் ஏற்பட்டது. அப்படியெல்லாம் கஷ்டங்கள் ஏற்பட்டுங்கூட, படைவீரர்கள் சோர்வடையாமல் திடசித்தத்துடனும், வீராவேசத்துடனும் சண்டைசெய்து வந்தார்கள். அப்படி யிருக்குஞ் சந்தர்ப்பத்தில் சுதேச இராணுவ வீரர்கள் அவரிடஞ் சென்று ஆங்கிலேய இராணுவ வீரர்களுக்குச் சாதம் இன்றியமையாததென்றும், தங்களுக்குச் சாதத்தினின்று விழும் கஞ்சியே போதுமானதென்

றும், அதைக் குடித்துத் தாங்கள் ஜீவித்திருக்க முடியு மென்றும் விண்ணப்பித்துக் கொண்டார்கள். சரித் திரத்தில் இதைப்போலொத்த சம்பவம் வேறு எங்குங் கிடையாதென்றே கூறலாம். அவர்கள் அங்ஙனம் கூறியது அவர்களுடைய இராஜ பக்தியையும், அவர் கள் அவரிடங் கொண்டிருந்த அளவிலா அன்பையும் வெளிப்படையாகக் காட்டுகின்றது.

கிளைவுக்குத் துணைபுரியச் சென்னை அரசாங்கத் தார் எண்ணிய எண்ணமும் பலனளிக்காமல் போய் விட்டது. மகமது அலிக்குத் துணைபுரிய 'மோராரி ராவ் என்ற மஹாராஷ்டிர வீரர் பணங்கொடுத்து நியமிக்கப் பட்டும், அவர் பிரென்சுக்காரரை எதிர்ப்பது சாத்திய மில்லை யென்றும், சந்தா ஸாஹிபே வெற்றி யடைவார் என்றும் எண்ணினவராய் ஆங்கிலேயர்களுக்கு ஒத் தாசை செய்யாமல் சும்மா இருந்துவிட்டார். ஆற்காட் டில் கிளைவ் நடத்திக் காட்டிய வீரதீரச் செயல்களைக் கேட்டபின் அம்மோராரி ராவ் அவர்களுக்குத் துணை புரிய முன் வந்தார். அவ்விஷயம் ராஜா ஸாஹிபுக்கு எட்டவே, அவர் சந்தர்ப்பத்தை வீணாக்காமல் மத்தி யஸ்தத்திற்கு முயற்சிசெய்து கிளைவைத் தம் பக்கத்தில் சேர்த்துக் கொள்ளும் எண்ணத்துடன் அவருக்கு இலஞ்சங் கொடுக்கவும் முன் வந்தார். ஆனால், அவர் இலஞ்சத்தை ஏற்கமாட்டேனென்று கூறிவிட்டார். அதைக் கேட்ட ராஜா ஸாஹிபு, ஆற்காட்டுக் கோட் டையைக் கடைசிவரை முற்றுகை செய்து ஆங்கிலேயர் களையும், அவர்களைச் சார்ந்தவர்களையும் அடியோடு கொன்று விடுவதாகச் சபதஞ் செய்தார். அப்போது கிளைவ் ராஜா ஸாஹிபைப் பார்த்து, 'உன்னுடைய தகப்

பன் ஓர் அநியாயக்காரன்; உன்னிடத்தில் இருக்கும் இராணுவ வீரர்கள் ஒழுங்குக்குக் கட்டுப்படாத கீழ்மக்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்; நீ உன்னுடைய இராணுவ வீரர்களைக் கோட்டைக்குள் அனுப்புவதற்கு முன் ஒரு தடவைக்கு இரண்டு தடவை ஆலோசனை செய். முன் ஆலோசனை யில்லாமல் எதையுஞ் செய்து விடாதே, பத்திரம்' என்று கூறினர்.

கிளைவ் அங்ஙனம் கூறவே, முகரம் பண்டிகை யன்று ஆற்காட்டைத் தாக்கி, ஆங்கில இராணுவ வீரர்களையும், அவர்களைச் சார்ந்தவர்களையும் தாம் செய்து கொண்ட சபதத்தின்படி கொன்று தீர்த்துவிடுவ தென்று ராஜா ஸாஹிபு ஏற்பாடு செய்தார். மற்ற நாட்களை விட்டுவிட்டு, அந்த நாளை அவர் நன்னாளாகக் கொண்டதற்குக் காரணம், அந்நாளில் சண்டைசெய்து உயிரிழக்கிறவர்கள் வீரசுவர்க்கம் போய்ச் சேர்வார்க ளென்றும், அச்சுவர்க்கத்தில் அவர்கள் தேவப்பெண் களால் உபசரிக்கப்படுவார்க ளென்றும், ஒரு நம்பிக்கை மகமதியர்களுக்குள் இருப்பதால், அன்று சண்டை யென்றால் மகமதிய இராணுவ வீரர்கள் எதற்கும் அஞ்சாது வீராவேசத்துடன் எதிராளிகளைக் கடைசி வரை எதிர்ப்பார்களென்று உண்மையில் அவர் எண் ணியதேயாம். அத்தினத்தில், அவர்களுக்கு இயற்கை யாக ஏற்படும் மதவெறிக்குத் துணைபுரிய வீரத்தைக் கிளப்பக்கூடிய பானங்களும், லாகிரி வஸ்துக்களும் கொடுக்கப்பட்டன. அத்தகைய லாகிரி வஸ்துக்களை உட்கொண்ட இராணுவ வீரர்கள் வீராவேசத்துடன் கோட்டையைத் தாக்க ஆரம்பித்தார்கள்.

அவர்கள் செய்த ஏற்பாடு கிளைவுக்கு எட்டிற்று. அவர் சண்டைக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்துவிட்டு, எதிரியின் படை வரவை எதிர்பார்த்த வாய்ப் படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தார். அச்சந் தர்ப்பத்தில் எதிரிகள் கோட்டையை நோக்கி வந்தார் கள். அவர், அவ்வெதிரிகளின் வருகையைக் கண்டு தம்முடைய வேலையில் தயாராய் நின்றுகொண்டிருந் தார். எதிரியான ராஜா ஸாஹிபின் படையைச் சேர்ந்த யானைக் கூட்டங்கள் கோட்டையின் கதவுகளைத் தலை யாலும், தந்தங்களாலும் முட்டின. அவைகள் அவ் வண்ணம் செய்தது, கோட்டையின் கதவுகள் உடைந்து விடு மென்றும், எதிராளிகள் உள்ளே நுழைந்துவிடு வார்க ளென்றும், உள்ளிருந்தவர்கள் பயப்பட ஏதுவா யிருந்தது. அப்போது ஆங்கிலேயருடைய பீரங்கிகளி லிருந்து கிளம்பிய குண்டுகள் யானைகளின்மீது பட் டன. உடனே அவைகள் பயங்கொண்டு தங்களை ஏவிய கூட்டத்தார்மீது பாய்ந்து அவர்களில் அநேகரை நாசப்படுத்தின. யானைகள் அம்மாதிரி செய்துகொண் டிருக்கையில் ராஜா ஸாஹிபின் படை வீரர்களிற் சிலர், அகழியில் சிறு சிறு கட்டுமரங்களை விட்டு அவை களின் மூலமாக அகழியைத் தாண்டிச் சுவரின்மேல் ஏற முயற்சித்துக்கொண்டிருந்தார்கள். அவ்விடத்தி லிருந்த ஆங்கில வீரர்கள் அதைத் தடுப்பதற்குரிய வேலைகளைச் செய்யாமல் திகைத்துக்கொண்டிருந்தார் கள். அதைக் கண்ட கிளைவ் தாமாகவே அவ்விடத்திற் குச் சென்று அங்கே இருந்த இராணுவ வீரர்களுக்குத் தலைமை பூண்டு அவர்கள் காரியங்களை இன்னவிதமாகச் செய்யவேண்டுமென்பதை நேரில் செய்து அவர்களுக் குக் காட்டி, கூடிய சீக்கிரத்தில் கட்டுமரங்களில் ஏறி

யிருந்த ராஜா ஸாஹிபின் இராணுவ வீரர்களை அங்கிருந்து ஓடும்படி செய்தார். அகழியில் தண்ணீர் இல்லாத இடம் பார்த்து அதன் வழியாகக் கோட்டைக்குள் நுழைய ராஜா ஸாஹிபின் இராணுவ வீரர்கள் தீவிரமான முயற்சிகள் செய்துகொண்டிருந்தார்கள். அதைக் கண்ட ஆங்கில இராணுவ வீரர்கள் கோட்டையி லிருந்துகொண்டே குறிபார்த்து எதிரிகளின் மீது குண்டுகளைச் சொரிந்தார்கள். குண்டுகள் மேலே வந்து பாய்ந்ததினால், மத வெறியுடனும் லாகிரி வஸ்துக்களான பானங்களின் மயக்கத்துடனும் கூடியிருந்த எதிரிகளாகிய இராணுவ வீரர்கள் ஒன்றுஞ் செய்யக் கூடாமல் தைரியத்தை இழந்து திகைப்புக்கொள்ளலானார்கள். மேலும் கோட்டையிலிருந்த ஆங்கிலேய இராணுவ வீரர்கள் இடைவிடாது குண்டுகளை ராஜா ஸாஹிபின் படைகளின் மீது சொரிந்துகொண்டிருந்தபடியால் அவருடைய படைகளில் உயிர்ச் சேதமும் அதிகமாக ஏற்பட்டது. அதையும் பொருட்படுத்தாமல் ராஜா ஸாஹிபின் படைகள் தைரியத்தோடு சண்டை போட்டுக்கொண்டிருந்தன. அப்படி அவருடைய படைகள் மூன்று முறை அதிக வீராவேசத்துடன் எதிர்த்தும் தோல்வியடைந்தன. இறுதியில் அகழிக்குப் பின்னாலும் அவர்கள் வந்துவிட்டார்கள். சண்டை சுமார் ஒருமணி நேரம்வரை நடந்தது. ராஜா ஸாஹிபின் படையில் நானூறு பேர் இறந்தார்கள். ஆங்கிலேயப் படையில் ஐந்தாறு பேர்தான் இறந்தார்கள். இரவு வந்துவிடவே சண்டையும் நின்றுவிட்டது. ஆங்கிலேயர்கள் மறுநாளைய யுத்தத்தைப் பற்றிக் கவலை கொண்டவர்களாய் அன்றைய இரவை யெல்லாங் கழித்தார்கள். ஆனாலும், அவர்கள் பொழுது விடிந்து

3

பார்த்தபோது எதிரிகள் காணப்படவில்லை. எல்லாரும் ஓடிவிட்டார்கள். அவர்கள் ஓடிப்போன அவசரத்தில் தங்கள் துப்பாக்கிகளையும், மற்ற யுத்த தளவாடங்களை யும் அவ்விடத்திலேயே போட்டுவிட்டுச் சென்றார்கள்.

கிளைவ் ஆற்காட்டில் அடைந்த வெற்றி செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்கு எட்டியது. அதைக் கேட்டவர் கள் அனைவரும் ஆனந்தக் கடலில் மூழ்கினார்கள். அவர் எந்த வேலைக்குந் தகுதியானவர் என்று பலரா லும் மதிக்கப்பட்டார். அவருக்கு உதவிசெய்ய இரு நூறு ஆங்கில இராணுவ வீரர்களும், எழுநூறு இந்தியச் சிப்பாய்களும் செயின்ட் ஜார்ஜ் கோட்டையி லிருந்து ஆற்காட்டிற்கு அனுப்பப்பட்டார்கள். அவர் களைத் துணைக்கொண்டு அவர் எதிராளிகளை இன்னும் நசுக்க ஆரம்பித்து முன் நோக்கிச் சென்றார். சென்ற வர், ஆற்காட்டிற்கும் ஆரணிக்கும் மத்தியிலுள்ள ஒரு கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டார். அச்சந் தர்ப்பத்தில் மோராரி ராவின் படையின் ஒரு பகுதியும் அவ்விடத்தில் வந்து சேர, அதையும் தம்முடைய படையுடன் சேர்த்துக்கொண்டு ராஜா ஸாஹிபைத் துரத்திக்கொண்டு போய் அவரை யுத்தத்தில் தோற் கடித்தார். ராஜா ஸாஹிபின் பணப் பெட்டி (இராணுவ வீரர்களின் சம்பளத்துக்காகப் பணம்போட்டு வைக்கப் பட்டிருந்த பெட்டி) மஹாராஷ்டிரார்களிடம் சிக்குண் டது. அவருடைய படையிலிருந்த அறுநூறு இந்தியச் சிப்பாய்கள் கிளைவ் இருந்த விடத்திற்கு வந்துவிட்டார் கள். ஆதலின், அவர்களும் ஆங்கிலப் படையில் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள். ஒருவிதச் சண்டை சச்சரவில்லாமல் காஞ்சிபுரம் ஆங்கிலேயருக்குக் கிடைத்

தது. ஆரணியின் கவர்னர் சந்தா ஸாஹிபை விட்டு விட்டுப் பிரிட்டிஷாரின் பக்கம் சேர்ந்துவிட்டார். அத்துடன் மகமது அலியைக் கர்நாடகத்தின் உண்மை யான நவாப் என்றும் அவர் அங்கீகரித்துக்கொண் டார்.

சண்டையைப்பற்றிய விஷயங்களை யெல்லாம் கிளைவிடமே ஒப்படைத்திருந்தால் சண்டை விரை விலேயே முடிந்திருக்கும். அப்படி யில்லாமல் போகவே அவர் இருந்த இடங்கள் தவிர மற்ற விடங்களில் இருந்த நிர்வாகிகள் தைரியத்துடன் காரியங்களைச் செய்யாமல் சோர்வுகொண்டிருந்தமையால், சண்டை யானது சிறிது நீடித்துப்போயிற்று. அதனுடன் கூட மஹாராஷ்டிரர்களும் சிறிது முணுமுணுக்க வாரம்பித் தார்கள். அத்தகைய நிகழ்ச்சிகளினால் ராஜா ஸாஹிபு மீண்டும் தைரியங் கொண்டவராய் செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்குச் சமீபத்தில் வந்து பங்களாக்களையும், தோட்டங்களையும் பாழ்படுத்தினர். அதற்குள் கிளைவ் வந்து அவரைக் காவேரிப்பாக்கம் என்னுமிடத்தில் சந் தித்துத் தோற்கடித்தார். அச்சண்டையில், அவருக் குத் துணையாய் வந்த பிரென்சு இராணுவ வீரர்களில் நூறுபேருக்கு மேற்பட்டவர் இறந்தும், கைதிகளா யும் போய்விட்டார்கள். அதற்கு மேல் கிளைவானவர் வெற்றியடைந்த படைகளைக் கூட்டிக்கொண்டு செயின்ட் டேவிட் கோட்டையை யடைந்தார். அவர்கள் போன வழியில் டியூப்ளேயின் வெற்றிக்கு அறிகுறியான பட் டணமிருந்தது. அதில் டியூப்ளேயின் வெற்றிகளைக் காட்டும் ஸ்தம்பம் ஒன்றும் நாட்டப்பட்டிருந்தது என்று முன் சொன்னோமல்லவா? அவை இரண்டையும்

அடியோடு இடித்துத் தள்ளிவிடும்படி கிளைவ் தம்முடைய வீரர்களுக்குக் கட்டளையிட்டார். அவர்களும் அவ்வண்ணமே அக்காரியத்தைச் செய்து முடித்தார்கள். அது முதற்கொண்டுதான் ஆங்கிலேயர் இந்தியர்களால் முதன்மையானவர்கள் என்று மதிக்கப்பட்டும், பிரெஞ்சுக்காரர்களைவிடச் சமர்த்தர்கள் என்று கருதப்பட்டும் வந்தார்கள்.

# அத்தியாயம் 7.

## கிளைவின் வெற்றிகளும் திருமணமும்

மேற்கூறிய வெற்றிகளைக் கண்ட சென்னை அரசாங்கத்தார், கிளைவின் தலைமையில் ஒரு படையைத் திருச்சிராப்பள்ளிக்கனுப்பி மகமது அலிக்கு உதவி செய்ய வேண்டுமென்று தீர்மானித்தார்கள். அச்சந்தர்ப்பத்தில் இங்கிலாந்து சென்றிருந்த மேஜர் லாரென்ஸ் என்பவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்து ஆங்கில இராணுவ தளகர்த்தர் பதவியை ஒப்புக்கொண்டார். கிளைவ் அவருக்குக் கீழ் இருந்து காரியங்களைச் செய்வது தகாத காரியமென்று எண்ணாமல் அவருடன் இருந்து இராணுவ விஷயங்களில் அவருக்குப் பலவிதத்திலும் துணைபுரிந்து வந்தார். லாரென்ஸும் அவருடைய புத்திசாதுரியத்தைக் கண்டு அவரைத் தக்கவிதமாய் நடத்திக்கொண்டு போனார். முறையாய் ஒவ்வொரு துறையிலும் அநுபவப்படாதவர்களைக் கண்டால் மேஜர் லாரென்ஸு கொண்டாடமாட்டார். அநுபவசாலிகளையே கொண்டாடுவார். ஆதலின், கிளைவினிடத்தில் இயற்கையிலேயே அமைந்திருந்த இராணுவ சாகசங்களைக் கண்டு அவரை மிகவும் கொண்டாடினார். அவர் கிளைவைப் பற்றி எழுதிய கடிதமொன்றில், "சிலர் காப்டன் கிளைவ் அதிர்ஷ்டசாலி யென்று சொல்லுகிறார்கள். எனக்குத் தெரிந்த வரையில் அவர் எல்லா விதமான கௌரவங்களையும், சன்மானங்களையும், வெகுமதிகளையும் பெறத்தகுதியுடையவரே. எதற்கும் பயப்படாத ஒப்பற்ற மனோதிடத்தைக் கொண்டவர்; முரட்டுக் குணம் இல்லாத நேர்மையாளர்; எத்தகைய ஆபத்திலும் மனக்கலக்கம் கொள்ளாத தீர நெஞ்சம் படைத்த

வர்; அவரை ஓர் இயற்கை இராணுவ வீரரென்றே சொல்ல வேண்டும்; ஏனெனின், அவர் போதுமான கல்வியும், இராணுவப் பயிற்சியும் பெறுமலிருந்தும், பெரிய அநுபவமுள்ள ஒரு தளகர்த்தனைப் போல் முன் ஆலோசனையுடனும், புத்தி சாதுரியத்துடனும் வெற்றி பெறத்தக்க விதத்தில் ஒரு சைனியத்தைச் சாமர்த்திய மாய் நடத்தக்கூடியவர்" என்று கூறி யிருக்கிறார்.

மேஜர் லாரென்ஸையும், காப்டன் கிளைவையும் எதிர்க்கக்கூடிய இராணுவ தளகர்த்தர்கள் பிரெஞ்சுப் படையில் இல்லை. டியூப்ளே ஆட்களைச் சண்டைக்கு ஏவுவதிலும், தந்திரமாய்க் காரியங்களைச் செய்வதிலும், தூதர்களை அனுப்பி எதிராளிகளை ஏமாற்றுவதிலும் மகா கெட்டிக்காரர். ஆனால் ஒரு படைக்குத் தலைமை வகித்து அதைத் தாமாகவே நடத்தும் திறமை அவரிடம் கிடையாது. அவர் இராணுவத் தொழிலில் பழகவில்லை. அவருக்கு இராணுவத்தில் சேர்ந்து இராணுவ வீரராகப் பிரியமுமில்லை. அவருடைய பகையாளிகள் அவரைக் கோழை யென்றும், பயங்கொள்ளி யென்றும் கூறி ஏசி வந்தார்கள். தம்முடைய அறிவாற்றல்களுக்கும், ஆலோசனைகளுக்கும் ஏகாந்தம் அத்தியாவசியமென்றும், போர் முகத்திற்குச் சென்று தாம் சண்டையில் கலந்துகொண்டால் தம்முடைய முயற்சிகளெல்லாம் வீணுய்விடுமென்றும் அவர் கூறி வந்தார். போர்முனையைப் பற்றிய விஷயங்களை அவர் பிறரிடமே ஒப்படைத்து வந்தார். அவரால் நியமிக்கப்பட்டவர்கள் அவர் கருத்துக்களை உணர்ந்து காரியங்களைச் செய்யாமையால் அவருடைய ஏற்பாடுகளெல்லாம், அவர் எண்ணியபடி நடைபெறுமல் போய்விட்டன. இராணுவ

விஷயங்களில் அவர் எண்ணத்துக்கு மாறுபடாமல் துணை புரிந்துவந்தவர் மகா கீர்த்தி வாய்ந்த புஸ்ஸி (Bussy) என்னும் தளகர்த்தர் ஒருவரே. புஸ்ஸி என்பவர் முசபர்ஜங் வெற்றி பெற்றுப் புதுச்சேரியில் பட்டங் கட்டிக்கொண்டு தம்முடைய வாசஸ்தானமாகிய ஐதராபாத்துக்குச் சென்ற காலத்தில் டியூப்ளேயினால் அவருடன் அனுப்பப்பட்டிருந்தார். அவ்வாறு நிஜாமுடன் சென்றிருந்த அவர் தம்முடைய காலத்தையெல்லாம் சொந்த விஷயங்களிலும், பிரான்சின் நன்மைக்கான விஷயங்களிலும் கழித்து வந்தார். நிஜாமுடைய அரண்மனையில் பிரெஞ்சு தேசத்து மந்திரி என்ற ஹோதாவில் இருந்து காரியங்களை நடத்திக் கொண்டு போனார். டியூப்ளேயுடன் இருந்த மற்ற இராணுவ தளகர்த்தர்களுக்குப் போதுமான திறமையும், ஆற்றலும் இல்லாமற் போயின. அவர்களில் அநேகர் யுத்த அநுபவமற்ற சிறுவர்கள். அவர்களின் அறிவின்மையையும், தவறுகளையுங் கண்டு சாதாரண இராணுவ வீரர்கள் கூட நகைத்தார்கள். இதைக் கொண்டே அவர்களின் தாழ்ந்த நிலைமை உணரப்படும்.

ஆங்கிலேயர்கள், சென்ற விடங்களிலெல்லாம் சிறப்புற்றே விளங்கினார்கள். திரிச்சிராப்பள்ளிக் கோட்டையிலிருந்த மகமது அலியை வளைத்துக்கொண்டிருந்த சந்தா ஸாஹிபின் துருப்புகள், ஆங்கிலேயத் துருப்புகளால் வளைத்துக்கொள்ளப்பட்டன. கடைசியில் சந்தா ஸாஹிபின் இராணுவ வீரர்கள் எதிரிகளிடம் சரண்புகலானார்கள். சந்தா ஸாஹிபும் மஹாராஷ்டிரர்களிடம் சிக்குண்டார். மகமது அலியின் கட்டளைப்படி பின்னர் அவர் சிலரால் கொல்லப்பட்டார் என்பது தெரி

கிறது. நிகழ்ச்சிகள் இவ்வாறெல்லாம் இருந்துங்கூட டியூப்ளேயின் வீரம் குறையவேயில்லை. அவர் மேலும் மேலும் புதிய யோசனைகளைச் செய்துகொண்டே யிருந் தார். அப்படி யிருந்தும் ஐரோப்பாவிலிருந்த அவருடைய எஜமானர்கள் அவருக்குப் போதுமான உதவி புரியாம லிருந்ததல்லாமல், அவருடைய செயல்களை ஆதரித்து, அவரைப் பாராட்டவுமில்லை. அவருடைய கொள்கையை அவர்கள் கண்டிக்கவும் தலைப்பட்டார்கள். அவருக்குப் பண உதவியும் செய்யவில்லை. துருப்புகளுக்குப் பதி லாகக் கப்பல்களில் வேலை செய்யும் கீழ்த்தர வேலையாட் களை இந்தியாவுக்கு அனுப்பினர்கள். இவ்வாறு பிரென்சு ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் அவருடைய முன்னேற் றத்திற்குப் பல தடைகளை யுண்டாக்கிக்கொண்டே யிருந்தார்கள். அப்படி யிருந்துங்கூட, அவர் ஒன்றுக் கும் இளைக்காமல் மனோதைரியத்துடன் தம்முடைய சொந்தப் பணத்தையும் செலவழித்துக் காரியங்களை நடத்திக்கொண்டு வந்தார். ஆங்கிலேயர்களுக்குப் பல வழிகளிலும் புதிய பகைவர்களை அவர் உண்டாக்கினர். பிரிட்டிஷாரின் துணைவர்களிடமிருந்தே தம்முடைய காரியங்களுக்கு அவர் அநுகூலந் தேடிக்கொண்டார். அப்படி யெல்லாம் செய்தும் கூட அவருக்கு ஒருவிதப் பயனும் ஏற்படவில்லை. பிரிட்டிஷாரின் ஆதிக்கமானது மெதுவாகவும், படிப்படியாகவும் விருத்தியாகிக் கொண்டு வந்தது; பிரென்சுக்காரரின் ஆதிக்கம் குறைந்து கொண்டே போயிற்று.

கிளைவ், இந்தியாவுக்கு வந்தது முதல் அவருடைய தேக ஆரோக்கியம் குறைவாகவே யிருந்தது. அப்படி யிருந்தும், அவர், சந்தர்ப்பங்களுக் கேற்றவாறு சகிப்

புடன் இந்தியாவில் இருந்து மேற்கூறிய காரியங்களை யெல்லாம் செய்துகொண்டு போனார். ஆயினும் நாளாக ஆக அவருடைய தேக சுகம் மிகவும் கெடவே அவர் இங்கிலாந்துக்குச் செல்லத் தீர்மானித்தார். அப்படி யிருக்குஞ் சந்தர்ப்பத்தில் பிரென்சுக்காரர்கள் கோவளம், செங்கற்பட்டு என்னு மிடங்களில் இருந்த கோட்டைகளைக் கைப்பற்றிக்கொண்டிருந்தார்கள். அக் கோட்டைகளைப் பிரென்சுக்காரரிட மிருந்து கைப்பற்றிக்கொள்ள ஆங்கிலேயர்கள் எண்ணினார்கள். என்றாலும், அவர்களிடம் அதற்கு இராணுவப் படை இல்லை. இருந்த இராணுவ வீரர்களிலும் அநேகர் அப்போதுதான் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்தவர்களா யிருந்தார்கள். அவர்களுக்குப் போதிய இராணுவப் பயிற்சியும் இல்லை. அம்மாதிரியான நிலையில் இருந்த படையைக் கொண்டு காரியங்களைச் செய்ய கிளைவைத் தவிர வேறெவரும் தகுதியுடையவ ராகமாட்டார்கள் என்று சென்னை அரசாங்கத்தார் கருதி, அவரையே அப்படைக்குத் தளகர்த்தராக நியமித்து எதிரிகள்மீது படையெடுக்குமாறு அவருக்குக் கட்டளை யிட்டார்கள். அவர் அக் கட்டளையை ஏற்று இராணுவப் பயிற்சி சிறிது மில்லாத அவர்களைப் படைத்துணையாகக் கொண்டு கோவளத்திற்குச் சென்றார். ஆங்குச் சென்றவுடன் அங்கே யிருந்த இராணுவ வீரர்கள் அவருடைய பட்டாளத்தின்மீது குண்டுகளைச் செலுத்தினார்கள். அக்குண்டுகளில் ஒன்று அவருடைய பட்டாளத்தைச் சேர்ந்த ஒருவரைக் கொன்றுவிட்டது. அதைக் கண்ட மற்றவர்கள் நாலா பக்கங்களிலும் ஓடலானார்கள். அதன் மேல் அவர் மிகவும் கஷ்டப்பட்டு, ஓடிய அப்படைவீரர்களைத் தடுத்து நிறுத்தி அவர்களுக்குத்

தைரியங் கூறினர். இன்னுமொரு சந்தர்ப்பத்தில் அவருடைய படையைச் சேர்ந்த காவலாளிகளில் ஒருவன் குண்டுச் சத்தத்தைக் கேட்டு வெருண்டவனாய் அருகிலிருந்த கிணறொன்றில் ஒளிந்துகொண்டான். கிளைவ் அவனையுந் தேற்றியதோடு பின்னரும் அவ்வாறு தைரிய மிழந்தவர்களுக்கெல்லாம் படிப்படியாகத் தைரியங் கூறி அவர்களுடைய பீதிகளை யெல்லாம் அகற்றினர்; தாமே அடிக்கடி அதிக ஆபத்தான காரியங்களில் சிக்கியும் அவர்களுக்குத் தைரியம் பிறக்கும்படி செய்தார். அவருடைய அஞ்சாமையையும், வீரத்தையும் கண்ட இராணுவ வீரர்கள் பயங்கொள்ளித்தனத்தைப் போக்கிக்கொண்டு சண்டைசெய்ய ஆயத்தமாயிருந்தார்கள். அதன்மேல் கோவளம் ஆங்கிலேயர் வசப்பட்டது. அச் சந்தர்ப்பத்தில் செங்கற்பட்டிலிருந்து பலத்த பிரெஞ்சுப் படையொன்று கோவளத்தை நோக்கி வந்துகொண்டிருந்தது. அதைக் கிளைவ் தெரிந்து கொண்டு அப்படையிலுள்ளவர்களுக்குக் கோவளம் ஆங்கிலேயரால் பிடிக்கப்பட்டுவிட்டது என்பது தெரியாமலிருக்கும் பொருட்டு, அவர்கள் வந்த சாலையின் ஒரு பக்கத்தில் மறைவா யிருந்து அப்படையைத் தாக்கினர். அதன் பயனாய் எதிரியினுடைய படையில் முந்நூறு பேர் கைதிகளானார்கள். எஞ்சியிருந்தவர்களை அவர் துரத்திக்கொண்டு செங்கற்பட்டுக்குப் போனார். அவ்விடத்துக் போய் கோட்டையை முற்றுகை செய்து, அதில் ஒரு வழியை யுண்டாக்கி அதன் மூலமாக அங்கிருந்தவர்களை நாசப்படுத்த எண்ணி யிருந்தார். அச் சந்தர்ப்பத்தில் பிரெஞ்சு இராணுவ தளகர்த்தன் அவரிடம் சரணடைந்து தன் னிருப்பிடத்திற்குச் சென்றுவிட்டான்.

கிளைவ் வெற்றி முரசுடன் சென்னைக்குத் திரும்பி வந்தார். அப்போது அவருடைய தேகநிலை இந்தியா வில் அவர் இருக்க இடங் கொடுக்கவில்லை. இச் சந் தர்ப்பத்தில் அவர், பெரிய கணித சாஸ்திரியான டாக் டர் நெவில் மாஸ்கிலையன் என்பவருடைய சகோதரி யைக் கலியாணஞ் செய்துகொண்டார். அம்மாது அழகும், நற்குணமும் வாய்ந்தவள். அவர், அவளி டத்தில் மிக்க அன்பு பாராட்டி வந்தார் என்பது அவ ருடைய கடிதங்களால் தெரியவருகிறது.

## அத்தியாயம் 8.

### கவர்னராக இந்தியாவுக்குத் திரும்பியது.

கிளைவ் கலியாணம் செய்து கொண்டவுடன் தம் மனைவியோடு இங்கிலாந்துக்குப் பிரயாணமானார். பத்து வருடங்களுக்கு முன் அவர் இந்தியாவுக்கு வந்தபோது இருந்ததைக் காட்டிலும் அதிகமான மாறுதல்களை அப்போது அடைந்திருந்தார். அவர் இந்தியாவுக்கு வந்த போது வயது பதினெட்டு ; இந்தியாவினின்று இங்கிலாந்துக்குப் போகும் போது வயது இருபத்தேழு. அவர் இங்கிலாந்து சேர்ந்ததும், அத் தேசத்தினர் அவரைச் சிறந்த இராணுவ வீரரென மதிக்க ஆரம்பித்தனர். டியூப்ளேயின் அபாரமான செயல்களைக் கண்டு மனக்கவலை கொண்டிருந்த ஆங்கில ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் நிர்வாகிகளுக்குக் கிளைவ் செய்த அபாரமான காரியங்களால் மனக்கவலை யொழிந்து மகிழ்ச்சி யுண்டாயிற்று. அதனால் அவ்விந்தியக் கம்பெனியின் விஷயங்களைக் கவனிக்கும் சபையில் (India House) இருந்தவர்கள் அவரை வேடிக்கைக்காக 'ஜெனரல் கிளைவ்' என்று கூப்பிட்டுவந்தார்கள். ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் தாங்கள் பிறருக்கு நடத்தும் விருந்துகளிலும் அவரை 'ஜெனரல் கிளைவ்' என்றே அழைத்து அவருக்கு நன்மை பெருக வேண்டுமென்று வாழ்த்தினார்கள். அவர் இந்தியாவில் செய்த காரியங்களுக்காக அக் கம்பெனியார் அவருக்கு மனப்பூர்வமான வந்தனங்களைச் செலுத்தியதுடன் நவரத்தினங்கள் இழைத்த கத்தி (Sword) ஒன்றையும் வெகுமதியாக அளித்தார்கள். அப்போது மேஜர் லாரென்ஸுக்கும்

அத்தகைய வெகுமானம் கொடுத்தால்தான் தமக்குக் கொடுத்த வெகுமதியைத் தாம் எற்றுக் கொள்ள முடியுமென்று அவர் கம்பெனியின் நிர்வாகிகளுக்குக் கூறினார். அதனால் அவருடைய பெருந்தன்மையும், அவர் உத்தியோக முறையில் காட்டிய மரியாதையும் தெளிவாய் விளங்குகின்றன.

கிளைவின் குடும்பத்தாரும் அவரை அன்புடன் வரவேற்று அவருடைய வீரச்செயல்களைக் கண்டு அதிகமான பெருமையும் கொள்ளலானார்கள். ஆனால் முன்னே மிகவும் துஷ்டராயிருந்த அவர், இந்தியாவிலிருந்த காலத்தில் அத்தகைய அசாதாரணமான காரியங்களைச் செய்து முடித்திருத்தல் கூடுமா வென்று அவருடைய பெற்றோர்கள் முதலில் சிறிது சந்தேகங் கொண்டார்கள். ஆற்காட்டு முற்றுகைக்குப் பின்னர் தான் அவருடைய தகப்பனார் அவரைப்பற்றி நல்ல அபிப்பிராயங்கொள்ள ஆரம்பித்தார். வரிசைக் கிரமமாய்ப் பிள்ளையினுடைய வீரச் செயல்கள் இங்கிலாந்துக்கு எட்ட எட்ட அவருக்கு ஆனந்தம் அதிகரித்துக் கொண்டேயிருந்தது. ஆதலால், இப்பொழுது கிளைவை நேரில் கண்டவுடன் அவர் முன்னையினும் பெருங் களிப்புற்றார். அவருடைய உறவினரும், அவரிடம் ஏற்பட்டிருந்த மாறுதல்களைக் கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டார்கள். அவருக்குச் சண்டைகளில் அதிகப் பணமும் கிடைத்திருந்தது. அவர் இங்கிலாந்துக்குச் செல்லும்போது பெருந் தொகையான பணத்தை இந்தியாவினின்று எடுத்துச் சென்றார். அதன் ஒரு பாகத்தைக் கொண்டு தம் தகப்பனாரின் கடன்களைத் தீர்த்தார். அடைமானத்திலிருந்த அவருடைய சொத்துக்

களை அதினின்றும் மீட்டார். மற்றப் பணத்தைத் தம் மிஷ்டப்படி இரண்டு வருடகாலம் வரை செலவு செய்தார். கௌரவமாய் வாழத்தொடங்கி, டம்பமான ஆடைகளை அணிந்து வந்தார்; வண்டி ஒன்றும் வைத்துக்கொண்டார்; சவாரிக் குதிரைகளையும் வாங்கினர். அவற்றுடன் நில்லாமல் அவர் பார்லிமெண்டு அங்கத்தினர் பதவியை அடைய முயன்று, அதன் பொருட்டுத் தம்முடைய பணத்தை யெல்லாம் செலவழித்தார். ஆனால் பார்லிமெண்டில் ஸ்தானம் கிடைக்காமற் போய் விட்டது.

அதன் மேல் இந்தியாவுக்குத் திரும்பலாமா வென்று அவர் எண்ணிக்கொண்டிருந்தார். அச்சந்தர்ப்பத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியாரும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும் அவரை வேலையில் அமர்த்திக் கொள்ள ஆவலுடையவர்களா யிருந்தனர். அதற்குள் ஆங்கிலேயருக்குச் சாதகமாக அவர்களுக்கும் பிரென்சுக்காரர்களுக்கு மிடையில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது. டியூப்ளேயும் பிரான்சுக்குத் திரும்பவேண்டியதாயிற்று. அவர் பிரான்சுக்குச் சென்று கஷ்டத்திலும் துக்கத்திலும் உழன்று ஆறுதலின்றி உயிர் துறந்தார். ஆனல் மேற்கூறிய ஒப்பந்தம் நீடித்திருக்கவில்லை. பிரான்சுக்கும் இங்கிலாந்துக்கும் மறுபடியும் சண்டை ஏற்படுவதற்குரிய அறிகுறிகள் காணப்பட்டன. ஆகவே, ஆங்கில ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் திறமைவாய்ந்த ஒரு தளகர்த்தரை இந்தியாவிலுள்ள ஸ்தலங்களுக்கு அனுப்பத் தீர்மானித்து, இந்தியாவுக்கு மீண்டும் செல்ல விரும்பி யிருந்த கிளைவைச் செயின்ட் டேவிட் கோட்டையின் கவர்னராக நியமித்

தனுப்பினார்கள். அப்போதிருந்த பிரிட்டிஷ் மன்னர் பிரான் அவருக்கு 'லெப்டினன்ட் கர்னல்' என்னும் உத்தியோகத்தையும் அளித்தார். அதனை ஏற்றுக் கொண்ட அவர் 1754-ம் வருஷத்தில் இந்தியாவுக்குப் பிரயாணமானார்.

கிளைவ் இந்தியாவுக்குத் திரும்பி வந்தவுடன் முதல் முதலாகக் கைக்கொண்ட வேலை கேரியா (Gheriah) என்னும் கோட்டையைக் கைப்பற்றிய தாம். இக் கோட்டைக்கு விஜய துர்க்கமென்றும் பெய ருண்டு. இந்த இடம் பம்பாய்க்குத் தெற்கே 170-மைல் தூரத்திலுள்ளது. இக்கோட்டை சமுத்திர தீரத்தில் கற்கள் நிறைந்த ஓரிடத்தில் கட்டப்பட்டுள் ளது. இதன் நான்கு பக்கங்களிலும் சமுத்திரம் சூழ்ந் திருந்தது. இக்கோட்டை ஆங்கிரியா என்னும் கொள் ளைக்காரனது வாசஸ்தலமா யிருந்தது. அவனுடைய கூட்டாளிகள் கப்பல்களில் ஏறிக்கொண்டு அரபிக் கடலில் கொள்ளையடித்து வந்தார்கள். கீழ்ச் சமுத் திரங்களில் பிரிட்டிஷ் கடற்படையை நடத்திவந்த அட் மிரல் வாட்சன் என்பவர் கடல்மார்க்கமாகவும், கிளைவ் தரைமார்க்கமாகவும் சென்று அந்தக் கள்ளக்கூட்டத் தாரை வளைத்துக்கொண்டார்கள். ஆங்கிரியாவின் கப்பல்கள் எல்லாம் தீக்கிரையாயின. கோட்டையும் ஆங்கிலேயர் வசப்பட்டது. அக்கோட்டைக்குள் இலட் சத்து ஐம்பதினாயிரம் பவுன் பெறுமானமுள்ள சொத் துக்கள் இருந்தன. அச்சொத்துக்களை, வெற்றி யடைந்தோர் தங்களுக்குள் பங்கிட்டுக்கொண்டனர்.

அதன்பின் கிளைவ், செயின்ட் டேவிட் கோட் டைக்குச் சென்று தம்முடைய வேலைகளைக் கவனிக்க

லானார். அவர் அவ்விடத்திற்குச் சென்று இரண்டு மாதங்கள் கழிவதற்குள் அவருடைய சாமர்த்தியத்தைக் காட்டத்தக்க சந்தர்ப்பம் வங்காளத்தில் நேர்ந்தது.

அச் சந்தர்ப்பம் இன்னதென்பதையும், அதில் கிளைவ் இன்னவிதமாக நடந்துகொண்டார் என்பதையும், அதனால் பிரிட்டிஷாருக்கு இன்ன பலன்கள் உண்டாயின வென்பதையும் இனி விளக்குவாம்.

## அத்தியாயம் 9.

### வங்காளத்தின் நிலைமை.

முன்னே மொகலாயர்களின் ஆளுகைக்குட்பட்டிருந்த மாகாணங்களில் செல்வத்தால் சிறந்திருந்தது வங்காள இராஜதானியேயாம். அம் மாகாணத்தில் விவசாயத்திற்கான அநுகூலங்களும், வியாபார விருத்திக்கான சௌகரியங்களும் இயற்கையிலேயே ஏற்பட்டிருந்தன. இப்போதும் அச் சௌகரியங்கள் இருந்து வருகின்றன. இமய மலையினின்று உற்பத்தியாகிக் கடலை நோக்கிவரும் கங்கையானது, அநேக கிளைகளாகப் பிரிந்து, வண்டல்களையும், எருக்களையும் நிலங்களில் படியவைத்து, அப்பிரதேசங்களைக் கொழுக்கச் செய்கின்றது. கடுமையான வெய்யிற் காலத்திலும் கங்கைப் பிரதேசமானது பச்சைப் பசேலென்று விளங்கிக்கொண்டிருக்கும். அக் காட்சியானது பூமியில் நீல ஆடை விரித்ததுபோன் றிருக்கும். வயல்களில் விளையும் நெல்லை அளவிட்டுக் கூறமுடியாது. வங்காளத்தில் செய்வதுபோல அவ்வளவு நெற்பயிர்ச் சாகுபடி வேறெங்கும் இல்லையென்றே சொல்லலாம். வாசனைத் திரவியங்கள் அங்கே ஏராளமாய் அகப்படும். வங்காளத்திலுள்ள கருப்பந் தோட்டங்களைக் கணக்கிட முடியாது. அங்கே சர்க்கரை செய்யும் தொழிலும் அதிகமாக நடக்கும். உணவுக்கான காய்கறி பதார்த்தங்களிலும், எண்ணெய் வகைகளிலும், வங்காளம் பேர்போனது. அங்குள்ள நதிகளில் ஏராளமான மச்ச வகைகள் அகப்படும். கடற்கரையை அடுத்துள்ள ஜன நெருக்கமற்ற தீவுகளில் மான் வகைகளும், புலிகளும்

மிருந்திருக்கும். அத்தீவுகளில் உள்ளவர்கள் கட லுப்பை எடுத்துக் கடற்கரைக்குத் தூரத்திலுள்ள ஜில் லாக்களுக்குக் கொண்டுபோய் விற்பார்கள். கங்கை நதி ஜனங்களின் போக்கு வரவுக்கும், வியாபாரத்திற் கும் அநுகூலமாயிருக்கிறது. அந்நதியின் கரைகளிலும், அதன் உபநதிகளின் கரைகளிலும் பேர்பெற்ற வியா பார ஸ்தலங்களும், கண்ணைக் கவரத்தக்க நகரங்களும், பெரியோர் கொண்டாடும் பேர்பெற்ற புண்ணிய ஸ்த லங்களும் அமைந்திருக்கின்றன. அப் பிரதேசத்தின் இயற்கை அமைப்புக்கள் மனிதருடைய கொடுஞ் செயல்களால் சிதைக்கக் கூடாதவைகளா யிருக்கின்றன. அதன் ஜனத்தொகையும் அதிகமானதே. வங்காளத் தில் விளைந்த தானிய வகைகள் மற்றப் பிரதேசங்களி லுள்ளவர்களுக்கும் உபயோகமாகிவந்தன. லண்டன், பாரிஸ் முதலிய நகரங்களைச் சேர்ந்த செல்வச் சிமாட்டி கள் வங்காளத்தில் கையால் நெய்யப்பட்டதும், மிக மென்மையானதும், பலரால் விரும்பிக் கொண்டாடி வாங்கக்கூடியதுமான மஸ்லின் என்னும் ஒருவகை ஆடையை வாங்கி அணிந்துகொண் டிருந்தார்கள். இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட வங்காளத்தில் ஐரோப்பியக் கம்பெனிகள் நீண்ட காலமாக வியாபார ஸ்தலங்களை ஸ்தாபித்து அவற்றில் வர்த்தகங் களை நடத்திவந்தன. பிரென்சுக்காரும் அங்கே வியா பார ஸ்தலங்களை ஏற்படுத்தி யிருந்தார்கள். அவைகளில் முக்கியமானது ஹூக்ளி நதிக்கரையிலுள்ள சந்திர நாகூர் என்பது. அந்த ஸ்தலம் இப்பொழுதும் பிரென் சுக்காரர்களுக்குச் சொந்தமா யிருக்கிறது. முன்னே டச்சுக்காரர்களுக்கு அந்நதிக்கரையில் சின்சூரா என்னு மிடத்தில் ஒரு வியாபாரஸ்தலம் இருந்தது. ஆங்கிலே

யர்கள் கடலுக்குச் சமீபத்தில் ஹூக்ளி நதிக்கரையில் ஒரு வியாபார ஸ்தலத்தை ஏற்படுத்திக்கொண்டிருந் தார்கள். அதற்கு வில்லியம் கோட்டை என்று பெயர். அக்கோட்டைக்குப் பக்கத்தில், ஒரு மாதாகோயிலும், கிடங்குகளும் ஏற்பட்டிருந்தன. அந் நதியின் கரை முழுதும், கம்பெனியைச் சேர்ந்தவர்களின் பங்களாக் கள் இருந்தன. அதற்கடுத்திருந்த இடத்தில் இந்தியர் கள் குடியேறினார்கள். அதனால் அவ்விடம் ஒரு நகரமாயிற்று. அங்கே வியாபாரமும் மும்முரமாய் நடந்தது. இந்நகரத்தில் இப்போது கண்ணைக் கவரத் தக்க மாடமாளிகைகளுடனும், கூட கோபுரங்களுட னும் இருக்கும் சௌரிங்கி என்னுமிடத்தில் அப்போது வைக்கோலால் வேயப்பட்டனவும் அழகற்றனவுமான குடிசைகள் இருந்தன. இப்போது வில்லியம் கோட்டை இருக்கும் இடமானது, அக்காலத்தில் நீர்க்காக்கை களுக்கும், முதலைகளுக்கும் இருப்பிடமாய் இருந்தது. இப்போது அந்நகரத்தைச் சார்ந்த ஹைட்பார்க் என்னுமிடத்தில் மாலைக் காலத்தில் எண்ணிறந்த ஜனங் கள் வாகனங்களில் ஏறியும் கால் நடையாக நடந்தும் சென்று சூரியன் மறையுங் காட்சியைக் கண்டு ஆனந் தித்துப் பரவசப்படுகின்றனர். இவ்விடத்தை அக் காலத்தில் பட்சிவகைகளும் நீர் வாழ் ஜந்துக்களும் வாச ஸ்தலமாகக் கொண்டிருந்தன. ஆங்கிலேயர்களுடைய சொந்த எல்லைக்குள் அவர்கள் சில அதிகாரங்களைச் செலுத்த வங்காள நவாபிடம் அதிகாரம் பெற்றிருந் தார்கள்.

## அத்தியாயம் 10.

### கல்கத்தா இருட்டறை

வங்காளம், ஒரிஸ்ஸா, பீஹார் ஆகிய மாகாணங்களை, அன்வார்டீன் என்பார் நீண்ட காலமாக அரசாண்டு வந்தார். அவர் முதலில் மொகலாய சக்கரவர்த்திக்கு அடங்கினவரா யிருந்தார். பின்னர் மற்ற நவாபுகளைப்போல் அவரும் தமக்கனுகூலமான சமயம் வந்தவுடன் சுதந்தரத்தை மேற்கொண்டார். அவர் 1756-ம் வருஷத்தில் இறந்தார். அவர் தாங்கியிருந்த பட்டமானது அவருடைய பேரப் பிள்ளைக்குக் கிடைத்தது. அப்பேரப் பிள்ளையின் பெயர் ஸூராஜ-வுட்-டவுலா. அவர் பட்டத்திற்கு வந்தபோது அவருடைய வயது இருபது. அவருக்கு உயர்ந்த அறிவு கிடையாது. அவரிடம் நல்ல மாதிரியான குணங்களும் இல்லை. அவருக்கு ஏற்பட்ட கல்விப் பழக்கமும் பாராட்டத் தக்கதல்ல. இது நல்லது, இது கெட்டது என்று நன்மை தீமைகளைப் பகுத்துணரும் அறிவே அவரிடம் கிடையாது. அவர் சுயநலமே உருவாகக் கொண்டவர். அவரிடம் தர்க்கித்துப் பேசக்கூடியவர்கள் இல்லை. எத்தகையினருக்கும் பிறருடைய உதவி இன்றி யமையாதது என்னும் அறிவை அவருக்குப் போதிக்கக்கூடியவர்களும் இல்லை. இவ்வாறு தமக்கு மேற்பட்டவர் இல்லை யென்ற எண்ணம் உண்டாகவே அவர் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சொல்லும் பிடிவாதக்காரராய்க் காலங் கழித்து வந்தார். இளம்பருவத்திலேயே அவர் ஒழுங்கீனமான விஷயங்களில் தலையிட்டுக் காரியங்களைச் செய்து வந்தமையால்

அவருடைய தேகமும் மனமும் நன்னிலையில் இல்லா மற் போயின. அவர் அளவுக்கு மீறி லாகிரி வஸ்துக் களை உட்கொண்டு வந்ததால் அவருக்கு ஒருவிதமான சித்தப் பிரமையும் உண்டாயிருந்தது. அவருடைய கூட் டாளிகள் கீழ்மக்கள் கூட்டத்தைச் சார்ந்தவர்களும், பரிகாசக்காரர்களும், மானமற்றவர்களுமாகவே இருந் தார்கள். அவர்கள் நயவஞ்சகராய், இச்சகம் பேசி அவ ரிடம் பொருள் பறித்து உண்பவர்களா யிருந்தார்கள். ஸூராஜ-வுட்-டவுலா பிறரைத் துன்புறுத்தி அதனால் அவர்கள் அடையும் துன்பங்களைக் கண்டு சந்தோஷிப் பது வழக்கம். இளம்பருவத்தில் அவர் மிருகங்களை யும், பட்சிகளையும் துன்புறுத்தி அதனால் சந்தோஷ மடைந்து வந்தார். வயது வந்தபின் தம்மைப் போன்ற மானிடர்களுக்கே துன்பம் விளைவித்து அவர்கள் துன் புறுவதைக் கண்டு சந்தோஷங் கொள்ளலானார்.

இளம்பருவ முதற்கொண்டே ஸூராஜ-வுட்-டவு லாவுக்கு ஆங்கிலேயரிடம் வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அந்த வெறுப்பை மாற்றக் கூடியவர்கள் இல்லாமல் போகவே அது நாளுக்குநாள் அதிகரித்தது. ஆங்கி லேயர்களைக் கொள்ளையடித்தால் ஏராளமான சொத்துக் களைப் பெறுதல் கூடுமென்று அவர் தவறாக எண்ணி வந்தார். ஐரோப்பியர்களைத் துன்புறுத்தி வேறு இடங் களுக்குத் துரத்தி விடுவதனால் அவருக்கு மிகுந்த நஷ் டம் ஏற்படக்கூடியதா யிருந்தது. அப்படியிருந்தும் அவர் அதனை ஒரு சிறிதும் மதிக்கவில்லை. அவரிடம் ஆங்கிலேயர்களைத் துன்புறுத்தவேண்டு மென்ற எண்ணமே அதிகமாகக் குடிகொண்டிருந்தது. அதற் குத் தகுந்தபடி சந்தர்ப்பமும் ஒன்று வாய்த்தது. அதா

வது ஆங்கிலேயர், பிரென்சுக்காரர்களுடன் சண்டை போட நேரிடுமென்று கருதி, வில்லியம் கோட்டையைச் செப்பனிட்டுக்கொண் டிருந்தார்கள். அவர்கள் அவ ரிடமிருந்து உத்தரவொன்றும் பெறாமலே அக்காரி யத்தைச் செய்தார்கள். அப்போது ஒரு பணக்கார னுடைய சொத்துக்களைக் கொள்ளையடிக்கவேண்டு மென்று ஸுராஜ-வுட்-டவுலா எண்ணங் கொண்டார். அப்பணக்காரன் அதை அறிந்து கல்கத்தாவிற்குச் சென்று ஆங்கிலேயரிடம் சரண்புகுந்தான். அவனைத் தம்மிடம் ஒப்படைத்து விடவேண்டுமென்று ஸுராஜ-வுட்-டவுலா ஆங்கிலேயருக்குக் கட்டளை இட்டார். ஆனால் ஆங்கிலேயர்கள் தங்களிடம் சரண் புகுந்த அவனை அவரிடம் ஒப்படைக்க இசையவில்லை. இக் காரணங்களால் அவர் ஒரு பெரிய படையைச் சேக ரித்துக்கொண்டு கல்கத்தாவிலுள்ள வில்லியம் கோட் டைமீது படையெடுத்தார்.

ஸுராஜ-வுட்-டவுலாவின் படையெழுச்சி வரை, கல்கத்தாவில் இருந்த ஆங்கிலேயர்கள் சாதாரண வியாபாரிகளாகவே இருந்தார்கள். அப்படியிருந்த அவர்கள் ஸுராஜ-வுட்-டவுலா கல்கத்தாவின் மீது படையெடுத்து வருகிறார் என்பதைக் கேட்டவுடனே பயந்து, செய்வதொன்றுந் தோன்றாதவர்களாய்த் திகைப்புண்டிருந்தனர். கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேய கவர்னருக்கு ஸுராஜ-வுட்-டவுலாவுடைய கொடுங் கோன்மை தெரியுமாகையால் அவர் அதிகமாகப் பயந்து படகொன்றில் எறி அருகிலிருந்த ஒரு கப்ப லுக்குட் சென்று மறைந்து கொண்டார். இராணுவ தளகர்த்தரும் கவர்னர் செய்தபடி தந்திரம் செய்தால்

தான் உயிர் தப்பலாம் என்று கருதி அதே மாதிரி உபாயத்தைச் செய்தார். கோட்டையிலிருந்த இரா ணுவ வீரர்களும், வியாபாரிகளும் மாத்திரம் சிறிது தைரியங்கொண்டு நவாபை எதிர்த்தார்கள். ஆனால் நவாபின் படைவீரர்கள் அதிகரித்திருந்தமையால் ஆங்கிலேயர்கள் தோல்வி யுற்றார்கள். நவாபு அதிகக் கஷ்டமின்றி கோட்டையைப் பிடித்துக்கொண்டார். அநேகம் ஆங்கிலேயர்கள் அவரிடம் கைதிகளானார்கள். வெற்றியடைந்த நவாபு, கோட்டைக்குள்ளிருந்த வர்த் தகசாலைக் கூடத்தின் மத்தியில் உட்கார்ந்து கொண்டு, கைதிகளில் முதன்மை யானவரான ஹால்வெல் (Holwell) என்பாரைத் தம் முன்னிலையில் அழைத்து வரும்படி வேலைக்காரருக்குக் கட்டளை யிட்டார். அப் படியே அவர்களால் அவர் கொண்டுவரப்பட்டார்; அதன்மேல் நவாபு 'ஆங்கிலேயர்கள் கர்வம் பிடித்தவர் கள்' என்று திட்டினார். அத்துடன் நில்லாது கோட் டைக்குள் அதிகமான பணங் கிடைக்கவில்லை யென்றும் முணுமுணுத்தார். பின்னர் கைதிகளைப் பார்த்து 'உங் களை நான் உயிருடன் விட்டு விடுகிறேன்' என்று கூறிப் படுக்கைக்குச் சென்றார்.

அவ்வாறு சென்ற நவாபானவர் அக்கைதிகளைக் காவலாளிகளிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றார். அந்தக் காவலாளிகள் மேற்கூறிய ஆங்கிலக் கைதிகளை யெல்லாம் ஓர் அறையில் அடைத்தார்கள். அந்த அறைக்கு 'கல்கத்தா இருட்டறை' (The Black-Hole of Calcutta) என்ற பெயர் இந்துதேச சரித்திரத்தில் வழங்கிவருகிறது. மேற்கூறியபடி ஆங்கிலேயரை அடைக்கப்பட்ட காலமோ மிகுந்த வெய்யிற்காலம்.

அத்தகைய கடும் வெய்யிற்காலத்தில் அவ்வறையானது ஓர் ஐரோப்பியக் கைதி இருப்பதற்குக் கூட வசதியுள்ள தாயிராது. அது இருபதடி சதுரங்கொண்டது. அதில் காற்று வருவதற்கு வைக்கப்பட்டிருந்த துவாரங்கள் மிகவும் சிறியவைகளாய்க் காற்றின் போக்கு வரவுக்குத் தகுதியில்லாமல் இருந்தன. அவ்வறையில் அடைக்கப் பட்டவர்களின் தொகை நூற்றுநாற்பத்தாறு. அந்த நூற்றுநாற்பத்தாறு பேரையும் மேற்கூறிய அறைக்குள் நுழையும்படி காவலாளிகள் கட்டளை யிட்டபோது, அவர்கள், காவலாளிகள் பரிகாசம் செய்கிருர்கள் என்றே எண்ணிக்கொண்டார்கள். நவாப் தங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்ததாக வாக்களித்துவிட்டார் போலும் என்று நினைத்து அவர்கள் சந்தோஷித்தவர் களாய்க் காவலாளிகளின் மொழிகளைக் கேட்டுச் சிரித்துக்கொண்டும், பரிகாசஞ் செய்துகொண்டு மிருந் தார்கள். சிறிது நேரத்திற்குள் அவ்வெண்ணம் தவருன தென்பது அவர்களுக்கு விளங்கிவிட்டது. அதனல் அவர்கள் வருந்தி, தங்களை அவ்வறைக்குள்ளே தள்ள வேண்டா மென்று காவலாளிகளை வேண்டிக்கொண் டார்கள். அவர்களுடைய வேண்டுதல் ஒருவிதப் பயனை யும் நல்கவில்லை. அவ்வறைக்குள் நுழையாதவர்களை யெல்லாம், ‘உங்களை நாங்கள் கொன்று விடுவோம்’ என்று காவலாளிகள் பயமுறுத்தினுர்கள். அவ்வாறு பயமுறுத்திக் கையில் வைத்திருந்த ஈட்டிகளால் அவர்களை அந்த அறைக்குள் தள்ளினுர்கள். அதற்கு மேல் அந்த அறையின் கதவை மூடிப் பூட்டிவிட்டார் கள்.

அவ்வாறு அவர்களால் அந்த அறையில் பிடித் துத் தள்ளப்பட்ட ஆங்கிலேயர்கள் காவலாளிகளைப்

பார்த்து, "எங்கள் மேல் நீங்கள் கருணை செய்யுங்கள்" என்று வேண்டிக் கொண்டார்கள். அவர்கள் அவ் வாறு செய்யவில்லை. அதன்மேல் அவர்கள் கதவை உடைத்துத் தள்ளிவிட முயற்சித்தார்கள். அத்தகைய நிலையில் ஹால்வெல் என்பார் மனோதைரியத்தை விடா மல் காவலாளிகளைப் பார்த்து, "உங்களுக்கு நாங்கள் இலஞ்சப்பணம் அதிகமாகக் கொடுக்கிறோம்; நீங்கள் எங்களை வருத்தாது விட்டு விடுங்கள்" என்று கூறினர். அதைக் கேட்ட காவலாளிகள், நவாபின் உத்தரவு இல் லாமல் எதையுஞ் செய்ய முடியாதென்றும், அவர் நல்ல தூக்கத்திலிருக்கிறார் என்றும், அவரை எழுப்பி னால் அவர் கோபங் கொள்வாரென்றும் கூறினர்கள். அவ்வார்த்தைகளைக் கேட்ட ஆங்கிலேயர்கள், தங்க ளுடைய ஆபத்து நீங்குமென்ற நம்பிக்கையை இழந்து பைத்தியங் கொண்டவர்களைப்போல் ஆகிவிட்டார்கள். அவ்வறையில் காற்றோட்டம் இல்லாமையால் அவர்கள் மயங்கி ஒருவர்மேல் ஒருவர் விழ ஆரம்பித்தார்கள். ஒவ்வொருவரும் காற்று வாங்குவதற்காக ஜன்னலரு கில் செல்வதற்குச் சண்டை போட்டுக் கொண்டார்கள். பின்னும் அவர்கள் ஜலம் வேண்டுமென்று காவலாளிக ளிடம் கேட்டார்கள். காவலாளிகள் அவர்களுக்குப் போதுமான அளவு ஜலம் கொடாமல் கொஞ்சங் கொஞ்சமாகக் கொடுத்து வந்தார்கள். ஜலம் வாங்கிக் குடிப்பதற்காக அக்கைதிகள், 'நான் முன்னே நான் முன்னே' என்று ஒருவரையொருவர் தள்ளி முன் சென்று சண்டை போட்டுக்கொண்டார்கள். அவர் கள் ஜலத்துக்காகப் பட்ட கஷ்டங்களைக் கண்ட காவ லாளிகள் அவர்கள் மீது கருணை காட்டுவதற்குப் பதி லாகப் பரிகாசம் செய்து சிரித்தார்கள். அவ்வாறு

காவலாளிகள் சிரித்துக்கொண்டிருக்கும்போது உள்ளே இருந்தவர்கள் வறட்சியால் வெறி ஜுரங் கண்டவர்களைப்போல் பிதற்றிக்கொண்டிருந்தார்கள் ; தங்களுடைய கஷ்டங்களை நீக்கும்படி கடவுளை வேண்டிக் கொண்டார்கள் ; அவர்களுடைய வேண்டுதல்களுக்குத் தக்க சகாய மொன்றும் கிடைக்கவில்லை. அதனல் அவர்கள் கடவுளை நிந்திக்கவும் ஆரம்பித்தார்கள். அத்துடன் நில்லாமல் தங்களைச் சுட்டுக் கொன்று விடும்படியும் காவலாளிகளைக் கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் அங்ஙனம் கூச்சலிட்டுக்கொண்டும், கஷ்டப்பட்டுக்கொண்டும் இருக்கையில், காவலாளிகள் ஜன்னல்களின் வழியாக உள்ளே விளக்கை நீட்டி அவர்களின் கஷ்டங்களைப் பார்த்து உரக்கச் சிரித்தார்கள். அடைபட்ட ஆங்கிலேயர்கள் ஒன்றுஞ் செய்யக்கூடாதவர்களாய்ச் சோர்வடைந்து, மூச்சுத் திணறி, வாயிற் பிதற்றிக் கொண்டும், தூக்கித்துக் கொண்டும் இருந்தார்கள். பொழுது விடிந்தது. நவாபானவர் மதுபான வெறியால் நன்ருய்த் தூங்கிவிட்டு எழுந்து வந்தார். வந்தவுடன் ஆங்கிலேயர்களை அடைத்து வைத்திருந்த அறையின் கதவைத் திறக்கும்படி காவலாளிகளுக்குக் கட்டளையிட்டார். காவலாளிகள் கதவைத் திறந்தார்கள். அப்போது ஆங்கிலேயரில் பலர் இறந்து ஒருவர் மேல் ஒருவராய் விழ்ந்து கிடந்தார்கள்; சிலர் உயிருடன் இருந்தார்கள். அவர்களை வெளியே கொண்டுவருவதற்குக் கூட வழியில்லாதபடி பிணங்கள் குவிந்து கிடந்தன. உயிருடனிருந்தவர்களை வெளியிற் கொண்டுவரும்படி நவாப் காவலாளிகளுக்குக் கட்டளையிட்டார். அதன் மேல் காவலாளிகள் இறந்துபோனவர்களின் தேகங்களை இரண்டு பக்கங்களிலும் ஒன்றின் மேல் ஒன்ருக

அடுக்கி வழி உண்டாக்கி உயிருடன் இருந்தவர்களை அழைத்து வந்தார்கள். இறந்தவர்களுடைய தேகங்களினின்று துர்க்கந்தம் வீசிக்கொண்டிருந்தது. அவ்வறையில் அடைக்கப்பட்ட நூற்றுநாற்பத்தாறு பேர்களில் இருபத்துமூன்று பேர்களே வெளியில் வந்தார்கள். அவர்களைப்பெற்ற தாய்மார்கள் கண்டாலும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாதபடி அவர்கள் உருமாறி இருந்தார்கள். அவர்கள் வெளியே வந்தவுடன் இறந்துபோனவர்களைப் புதைப்பதற்காகக் குழி ஒன்று தோண்டப்பட்டது. இறந்து கிடந்த நூற்றிருபத்துமூன்று பேரையும் எத்தகைய கிரியையும் இல்லாமல் காவலாளிகள் அக்குழியில் புதைத்து விட்டார்கள்.

நவாபானவர் அந்த நூற்றிருபத்துமூன்று பேரும் அநியாயமாய் மாண்டதற்காகக் கொஞ்சம் கூட இரக்கம் காட்டவில்லை. அவர்கள் இறப்பதற்குக் காரணமாயிருந்தவர்களைத் தண்டிக்கவுமில்லை. இறக்காமல் உயிருடன் இருந்தவர்களிடத்து அநுதாபமும் காட்டவில்லை. அவர்களில் சிலர் கையிலொன்றுமில்லாதவர்களாயிருந்தார்கள். அப்பேர்ப்பட்டவர்களை எவ்விதத் துன்பத்திற்கும் உட்படுத்தாமல் அவர் அனுப்பி விட்டார். கையிற் சிறிது பொருள் வைத்திருந்தவரை மிக்க துன்பங்களுக்குட்படுத்தி அப்பொருளைக் கவர்ந்தார். அப்போது ஹால்வெல் நடக்கக் கூடாதவராயிருந்தார். அவரைக் காவலாளிகள் தூக்கிக்கொண்டு போய் நவாப் முன்னிலையில் நிறுத்தினார்கள். நவாப் அவரைக் கண்டதும் வாய்க்கு வந்தபடியெல்லாம் வைதார்; பயமுறுத்தினர். அதன்மேல் அவரையும், அவரைச் சேர்ந்த சிலரையும், கம்பெனியாரின் பொக்

கிஷ இரகசியங்களைச் சொல்லவில்லையென்ற குற்றத்திற்காகக் கைகால்களில் விலங்கிட்டுச் சிறைப்படுத்தினர். அவர்கள் பட்ட கஷ்டங்களை எவராலும் அளவிட்டுக் கூறமுடியாது. அவர்கள் இருப்பிடம் மிகவும் ஆபாசமாயிருந்தது. அவர்களுக்குச் சரியான ஆகாரமும் கொடுக்கவில்லை. அவர்கள் இவ்வண்ணம் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில் நவாபின் சொந்த பந்துக்களான சில ஸ்திரீகள், அவர்களை விடுதலை செய்ய முயன்றார்கள். அம்முயற்சியால் அவர்கள் விடுதலையடைந்தார்கள். இவ்வாறு கல்கத்தா இருட்டறையில் அடைக்கப்பட்டிருந்தவர்களில் ஒரு ஸ்திரீயும் இருந்தாள்; அவள் இறக்கவில்லை. நவாப் அவளை மூர்ஷிதாபாத்திலிருந்த தம் அந்தப்புர ஸ்திரீகளுக்குத் தாதியாக நியமித்தார்.

அதன்மேல் நவாப் ஆங்கிலேயரைத் தாம் வென்றுவிட்டதைப்பற்றி டில்லியிலிருந்த மொகலாய சக்கரவர்த்திக்கு ஆடம்பரமான வார்த்தைகளினால் தெரிவித்தார். வில்லியம் கோட்டையில் தம்முடைய படையை வைத்தார். கோட்டையின் சுற்றுப் புறங்களில் ஆங்கிலேயர் வசித்தல் கூடாதென்று கட்டளையிட்டார். தாம் அடைந்த வெற்றிகளுக்கு அறிகுறியாகக் கல்கத்தாவுக்கு ‘அலிநாகூர்’ என்ற பெயரையும் இட்டார். அலிநாகூர் என்ற பதத்திற்குக் ‘கடவுளுடைய துறைமுகம்’ என்பது பொருள்.

# அத்தியாயம் 11.

## ஆங்கிலேயரும் ஸுராஜ-வுட்-டவுலாவும்.

கல்கத்தாவிலுள்ள வில்லியம் கோட்டையை மேற்கூறியபடி ஸுராஜ-வுட்-டவுலா பிடித்துக்கொண்டார் என்ற சங்கதி ஆகஸ்டு மாதத்தில் சென்னைக்கு எட்டியது. அச் செய்தியை அங்கிருந்த ஆங்கிலேயர் கேட்டு, அதிகமான கோபத்தையும், பரிதாபத்தையும் அடைந்தார்கள். நவாபிடம் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று, ஆத்திரத்தோடு கூச்சல் போட்டார்கள். இச்சங்கதி தெரிந்த நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குள் கல்கத்தாவுக்குப் படை அனுப்பப்படவேண்டுமென்றும், கிளைவ் தரைப்படைக்குத் தளகர்த்தராய் இருக்கவேண்டுமென்றும், அட்மிரல் வாட்சன் என்பவர் கடற்படையின் தலைவராயிருக்க வேண்டுமென்றும் அவர்கள் தீர்மானித்தார்கள். 900 ஆங்கிலக் காலாட்களும், 1,500 சிப்பாய்களும் நவாபைத் தண்டிப்பதற்காக அக்டோபர் மாதத்தில் கப்பல் மூலம் கல்கத்தாவுக்குப் பிரயாணமானார்கள். அவ்வாறு புறப்பட்ட படையானது டிசம்பர் மாதத்தில் கல்கத்தா சேர்ந்தது. காற்றுப் பிரதிகூலமா யிருந்தபடியால் அவ்வளவு கால தாமதம் எற்பட்டது.

அப்போது நவாப் தம்முடைய தலை நகராகிய மூர்ஷிதாபாத்தில் மிகுந்த கேளிக்கை விலாசங்களிலும், பயனற்ற காரியங்களிலும் காலத்தைச் செலவழித்துக்கொண்டு, தமக்கு ஒருவித ஆபத்தும் கிடையாதென்று மனப்பால் குடித்துக்கொண் டிருந்தார். அவருக்கு அந்நிய நாட்டு விஷயங்கள் ஒன்றும் தெரியாது.

ஐரோப்பா முழுமையிலும் பத்தாயிரம் ஜனங்களுக்கு மேல் இல்லை யென்று அவர் அடிக்கடி சொல்வதுண்டு. தாம் ஆங்கிலேயர்மீது படையெடுத்ததைப் போல் அவர்களும் தம்மீது படையெடுப்பார்கள் என்ற உணர்ச்சி அவரிடம் எழவில்லை. அவர்கள் அவ் விடத்தை விட்டுப் போய்விடவே நவாபுக்கு அவர்க ளால் கிடைத்த வருமானமும் நின்றுவிட்டது. அதன் மேல் அவருடைய மந்திரிகள் அவரைப் பார்த்து, அரச னுனவன் வியாபாரிகளைக் காத்து அதன் மூலம் பணஞ் சம்பாதிக்க வேண்டுமென்றும், அவர்களைத் துன்புறுத் துவதினுல் நன்மைக்குப் பதிலாகத் தீமையே உண்டா குமென்றும் கூறினூர்கள். அதன்மேல் ஆங்கிலேய வர்த்தகர்கள் தம்முடைய மாகாணங்களில் முன்போல் வியாபாரஞ் செய்யலாமென்று அவர்கட்கு அனுமதி கொடுக்க அவர் எண்ணிக்கொண் டிருந்தார். அப் போது ஹுக்ளி நதிக்கரையில் ஆங்கிலப்படை வந்திருக் கும் செய்தி அவருக்கு எட்டியது. உடனே அவர் தம்முடைய துருப்புகளையெல்லாம் மூர்ஷிதாபாத்தில் ஒன்று கூடும்படி கட்டளையிட்டு, அவைகளைச் சேர்த் துக் கல்கத்தாவுக்கு நடத்தினூர்.

அதற்கு முன்னரே கல்கத்தா வந்து சேர்ந்திருந்த கிளைவ், தம்முடைய வேலைகளைச் சுறுசுறுப்பாகச் செய்யலானூர். ஹுக்ளி நதியின் இடது கரையில் கல்கத்தாவுக்குத் தென் மேற்கில் 12 மைல் தூரத்தி லுள்ள பட்ஜ்பட்ஜ் (Budgebudge) என்னும் பட் டணத்தை அவர் கைப்பற்றிக் கொண்டார். வில்லியம் கோட்டையில் நவாப் வைத்திருந்த பட்டாளத்தையும் துரத்திவிட்டார். அதன்மேல், கங்கை நதியின் வலக்

கரையில் கல்கத்தாவுக்கு வடக்கே 27 மைல் தூரத்தி லுள்ள ஹூக்ளி என்ற பட்டணத்தின்மீது அவர் படையெடுத்துச் சென்று அதை நாசப்படுத்தினர். நவாப் இதற்கு முன்னரே ஆங்கிலேயர்களுக்குச் சில சௌகரியங்கள் செய்துகொடுக்க எண்ணியிருந்தாராகை யால், அவர்களுடைய படையெழுச்சியைக் காணவே அத்தகைய நன்மைக்ள் செய்யத் தீர்மானித்தார். அதனுல் ஆங்கிலேய தளகர்த்தர்களுடன் சமாதானஞ் செய்துகொள்ள முயன்று, அவர்களுடைய வர்த்தக சாலையைச் சரிப்படுத்திக் கொடுப்பதாகவும், இறந்து போனவர்களுக்குச் சரியான நஷ்ட ஈடு கொடுப்பதாக வும் அவர்களுக்கு வாக்களித்தார்.

கிளைவ் சண்டை செய்வதற் கென்றே வந்தவராகை யால், ஸுராஜ-வுட்-டவுலாவுடன் சமாதானம் செய்து கொள்வது அவமானம் என்று கருதினர். ஆனல் அவ ருக்குச் சுயேச்சையான அதிகாரம் அப்போது கிடை யாது. கல்கத்தாவிலிருந்த சில ஆங்கில வர்த்தகர்கள் கூடிய கமிட்டியாரிடமே அதிகமான அதிகாரம் இருந் தது. அத்தகைய அவர்கள், நவாபு தங்களுடைய கோட்டையைச் சரிப்படுத்தித் தருவதோடு, போது மான நஷ்ட ஈடு தங்களுக்குக் கொடுத்தால் அவருடன் சமாதானம் செய்து கொள்ளலாம் என்று கருதினர் கள். அதற்குள் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காருக் கும் ஐரோப்பாவில் யுத்தம் மூண்டுவிட்டது. அச் சங்கதி சென்னைக்கும் எட்டியது. அதன்மேல் சென்னை யிலிருந்த ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள் தங்களைத் தாக்குவார்களென்று கருதிக் கல்கத்தாவுக்குச் சென்ற படை திரும்பி வந்துவிட வேண்டுமென்று அவசரப்

பட்டார்கள். நவாபும் அவர்களுக்கு அநேக நன்மை களைச் செய்வதாக வாக்களித்தார். ஆங்கிலேயர்கள் நவாபுடன் சண்டை போட்டால் அதனுடைய பலா பலன் எப்படி யிருக்குமோ என்றும் எண்ணலானார்கள். அதனால் சமாதானத்துக்கே ஏற்பாடு செய்தார்கள். அதன்மேல் கிளைவ் தம்முடைய இஷ்டத்திற்கு மாறாக நவாபுடன் சமாதான வுடன்படிக்கை செய்துகொண் டார்.

## அத்தியாயம் 12.

### ஒமிச்சண்டும் ஆங்கிலேயரும்.

இது நிற்க, ஆங்கிலேயர்களுக்கும், நவாபுக்கும் மேற்கூறியபடி சமாதானம் ஏற்பட்ட காலத்தில், மத்தியில் இருந்து காரியங்களை நடத்தியவர்கள் வாட்ஸ் (Watts) என்னும் ஆங்கிலேயரும், ஒமிச்சண்ட் என்ற வங்காளி வர்த்தகரு மாவர். கல்கத்தாவில் வசித்துக் கொண்டிருந்த பணக்கார வியாபாரிகளில் ஒமிச்சண்ட் என்பவர் சிறந்தவர். நவாப் கல்கத்தாவின் மீது படையெடுத்ததினால் அவ்வர்த்தகருக்கு அதிகமான நஷ்டம் ஏற்பட்டது. வியாபாரத் துறையில் அவருக்கும் ஆங்கிலேயருக்கும் மிக்க அந்நியோந்நியம் ஏற்பட்டிருந்தது. தம்முடைய சொந்த ஜாதியாரால் அவர் நன்கு மதிக்கப் பெற்றிருந்தார். பெருங் காரியங்களை முடிக்கும் திறமைகளும் அவரிடம் இருந்தன. பிறர் சொல்லும் விஷயங்களை உடனே கிரகித்துக் கொள்ளுஞ் சக்தியையும் அவர் பெற்றிருந்தார். சமயத்துக்குத் தக்கபடி நடந்து கொள்ளும் பான்மையையும் கொண்டிருந்தார். சுறுசுறுப்பாகவும், ஊக்கமாகவும் காரியங்களைச் செய்யும் ஆற்றலுடையவராயு மிருந்தார். இத்தகைய நற்குணங்களுடன் அவரிடம் அடிமைத்தனமும், பேராசையும், விசுவாச காதகமும் குடிகொண் டிருந்தன.

மேற்கூறியபடி சமாதானம் ஏற்பட்டும் நவாப் முன் ஆலோசனை யில்லாமலும், தம்மை மேலாக மதித்தும் சமாதானத்துக்கு மாறுபாடான சில காரியங்களைச் செய்யத் தொடங்கினர். முன்னே தாம் கொடுத்த

வாக்குறுதிகளின்படி நடக்கவில்லை. அவர் ஒரு சந்தர்ப் பத்தில் மீண்டும் கல்கத்தாவின் மீது மூம்முரமாய்ப் படையெடுத்துச் சென்றார். அப்போது ஆங்கிலேயர் கள் எவ்விதக் கலக்கமுமின்றி அவரை எதிர்க்க ஆயத்த மாயிருந்தார்கள். அப்படி யிருப்பதைக் கண்ட அவர் பயங் கொண்டவராய்ப் பின்னிட்டோடி மறுபடியும் ஆங்கிலேயர்கள் கூறிய நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு, அவர்களோடு சமாதானம் செய்துகொண்டார். அவ் வாறு சமாதானம் ஏற்பட்டவுடனே அவர் சிறிதும் யோசிக்காமல் முன்போலவே ஆங்கிலேயர்களுக்கு விரோதமாய்க் காரியங்களைச் செய்ய ஆரம்பித்தார். சந்திரநாகூரிலிருந்த பிரென்சு நிர்வாகிகளுடன் கூடிச் சதியாலோசனை செய்யவும் துணிந்தார்.

அப்போது தக்காணத்திலிருந்த புஸ்ஸி (Bussy) என்னும் பிரென்சுத் தளகர்த்தர், ஹுக்ளி என்ற பட் டணத்தின் மீது படையெடுத்துச் சென்று ஆங்கிலேயர் களை வங்காளத்தினின்று துரத்தி விடுதற்கான எற் பாடுகளைச் செய்தார். அச்செய்திகளெல்லாம் கிளைவுக் கும், வாட்சனுக்கும் தெரிந்தன. பிரென்சுக்காரர்கள் சந்திரநாகூரிலுள்ள படைகளைப் பலப்படுத்துவதற்கு முன்னும், பிரான்ஸிலிருந்து அவர்களுக்குத் துணையாகப் புதிய துருப்புகள் வருவதற்குள்ளும் சந்திரநாகூரைத் தாக்கிப் பிரென்சுக்காரருக்குச் சரியான புத்தியைக் கற் பிக்க வேண்டுமென்று மேற்கூறிய இருவரும் எண்ணி னார்கள். வாட்சன் கடற்படையைக் கொண்டு சந்திர நாகூரை வளைத்துக் கொண்டார்; கிளைவ் தரைப்படை யைக் கொண்டு அதைச் சூழ்ந்து கொண்டார். அவ் வாறு வளைத்துக்கொள்ளவே பிரென்சுக்காருடைய

சந்திரநாகூர்க் கோட்டையும், படைகளும், துப்பாக்கி களும், மற்ற யுத்த தளவாடங்களும் ஆங்கிலேயருக்குக் கிடைத்தன. எதிரிகளில் அநேகர் அவர்களிடம் கைதிகளானார்கள். அவ்வாறு கைதிகளான துருப்புகளில் ஏறக்குறைய ஐந்நூறு பேர் ஐரோப்பியர். ஆங்கிலேயர்கள் பிரென்சுக்காரர்களுக்கு எதிரிகளாயிருந்த காலத்திலேயே நவாப், அவர்களைக் கண்டு பயந்தும், வெறுத்தும் வந்தார்; இப்போது பிரென்சுக்காரர்கள் ஆங்கிலேயர்களால் அடியோடு நாசமானதைக் கண்டதே அந்த ஆங்கிலேயரிடம் இன்னுமதிகமான வெறுப்பையும், பீதியையும் கொண்டார். அவர் திடமான சித்தமும், கொள்கைகளும் இல்லாதவரானபடியால், ஆங்கிலேயரிடம் சில சமயங்களில் அடங்கியும், சில சந்தர்ப்பங்களில் எதிர்த்தும் வந்தார். உதாரணமாக, அவர் ஒருநாள் ஆங்கிலேயருக்கான நஷ்ட ஈட்டுத் தொகையின் ஒரு பகுதியைக் கல்கத்தாவிற்கு அனுப்பினார். அதற்கு மறுதினத்திலேயே புஸ்ஸி என்னும் பிரென்சுத் தளகர்த்தனுக்கு வெகுமதியாகச் சில நகைகளை அனுப்பி, கிளைவோடு எதிர்ப்பதற்கு வங்காளத்துக்கு வரும்படி அவனைக் கேட்டுக்கொண்டார். ஆங்கிலேயர் மீது படையெடுக்கும்படி தம்முடைய சேனைகளுக்கும் கட்டளை யிட்டார்; மறுபடியும் அக்கட்டளையை மாற்றினார். கிளைவ் சில விஷயங்களைப்பற்றித் தமக்கெழுதிய கடிதங்களை அங்கிகரியாமல் முதலிற் கிழித்துப்போட்டார்; பின்னர் அவற்றிற்கு மிகவும் வணக்கமாகப் பதில் எழுதி அனுப்பினார்; வாட்ஸ் என்பவர் தம் முன்னே இருக்கக் கூடாதென்றும், அவரைக் கொன்று விடுவதாகவும் பயமுறுத்தினார்; மறுபடியும் அவரை அழைத்துத் தாம் செய்த காரியங்களுக்காகத் தம்மை மன்னிக்

குப்படி வேண்டினர். இத்தகைய அவருடைய சீர் கெட்ட ஆட்சி முறையும், தவறுகளும், அவர் மக்களிடம் நடந்துகொண்ட மாதிரியும் ஜனங்களுக்கு அவர்மீது அதிருப்தியை யுண்டாக்கின. அவரை இராணுவ வீரர் களும், வியாபாரிகளும், சிவில் அதிகாரிகளும், மகமதி யர்களும், இந்துக்களும் வெறுத்தார்கள். அவருக்கு விரோதமாகச் சதியாலோசனைக் கூட்டம் ஒன்று ஏற்பட் டது. அதில் நவாபின் அரசிறை மந்திரியான ராய்துல் லப் என்பாரும், நவாபின் இராணுவ தளகர்த்தரான மீர்ஜாபரும், இந்தியாவில் பிரசித்த மார்வாடியா யிருந்த ஜகத்சேட் என்பாரும் சம்பந்தப்பட்டிருந்தார்கள். அவர்கள் முன்சொல்லிய ஆங்கிலேயக் கமிட்டியார்களு டன் கலந்துகொண்டு நவாபுக்குத் தீங்கிழைக்கச் சம யம் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அந்த ஆங்கிலேயக் கமிட்டியார் எதையும் தீர மாய்ச் செய்யாமல் மயங்கிக்கொண் டிருந்தார்கள். அப் படியிருக்குஞ் சந்தர்ப்பத்தில் கிளைவானவர் சதியா லோசனைக்காரர்களுக்குத் துணையாயிருந்து, கமிட்டி யார் மயக்கமின்றி ஒரு முடிவுக்கு வரும்படியான ஏற் பாட்டைச் செய்து விட்டார். அதன் மேல் ஸுராஜ- வுட்-டவுலாவை நீக்கி, மீர்ஜாபரை வங்காள நாவாபாக நியமிக்க வேண்டுமென்றும், அதற்கு ஆங்கிலேயர் துணைபுரியவேண்டுமென்றும் கமிட்டியார் தீர்மானித் தார்கள். மீர்ஜாபர், ஆங்லேயரிடம் பெற்றுக்கொள் ளும் உதவிக்குப் பதிலாக, ஆங்கில ஈஸ்ட் இந்தியா கம்பெனிக்கும், அதைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்க ளுக்கும் போதுமான நஷ்ட ஈடு கொடுப்பதாகவும், தரைப்படை கடற்படை ஆகிய இவைகளுக்கும், ஆங்கி

லக் கமிட்டியாருக்கும் விசேஷமான வெகுமதிகளைக் கொடுப்பதாகவும் வாக்களித்தார். ஆங்கிலேயக் கம்பெனியார்கள், ஸுராஜ-வுட்-டவுலாவின் துர்நடத்தைகளை நேரில் கண்டிருந்ததாலும், அவரால் தாங்கள் பல கெடுதிகளை யடைந்திருந்ததாலும், அவரே நவாபாக இருந்து வந்தால் இன்னுமதிகமான தீச் செயல்களைத் தங்களுக்குச் செய்வார் என்று நினைத்தே இவ்வாறு நாவாபுக்கு விரோதமாயிருந்த சதியாலோசனைக் கூட்டத்தாருக்கு உதவிபுரிய முன் வந்தனர். ஆனாலும் இவ்விஷயத்தில், கிளைவ் கபட எண்ணங்களுடன் காரியங்களைச் செய்திருக்கிறார். இவ்வாறு செய்ததை முறையானதென்று கூற இயலாது. ஸுராஜ-வுட்-டவுலாவின் நன்மையைப் பெரிதும் கவனிப்பவரைப்போல் அவருக்குக் கிளைவ் கடிதம் ஒன்று எழுதினார். அக் கடிதத்தைக் கண்ட ஸுராஜ-வுட்-டவுலா மிகவும் சந்தோஷங் கொண்டு தமக்கு எதிரி ஒருவரும் இல்லையென்று இறுமாந்திருந்தார். அத்தகைய நயவஞ்சகமான கடிதத்தை நவாபுக்கு எடுத்துச் சென்ற தூதன் வசம் கிளைவ், வாட்சனுக்கும் கடிதமொன்று எழுதியனுப்பினார். அதில், மீர்ஜாபரை எதற்கும் பயப்பட வேண்டாமென்று நீ அவரிடம் கூறு; யுத்தத்தில் புறங்காட்டி ஓடுதலைக் கனவிலும் கருதாத ஐந்நூறு வீரர்களுடன் நான் வந்து அவருக்குத் துணைபுரியச் சித்தமாயிருக்கிறேன் என்பதையும் எடுத்துச் சொல்; அவருக்கு உதவி செய்ய வேண்டுமென்ற கருத்துக்கொண்டு, நான் இரவும் பகலும் சோர்வின்றிப் படையுடன் வந்து கொண்டிருக்கிறேன் என்பதையும் தெரியப்படுத்து; என் படைகளில் எல்லோரு மிறந்து ஒரு மனிதன் மாத்திரம் என் வசம் இருக்கும்வரையிலுங்கூட நான் அவ

ருக்குத் துணைபுரிவதினின்றும் பிறழமாட்டேன் என்பதையும் விளக்கமாக எடுத்துரை' என்ற விஷயங்கள் எழுதப்பட்டிருந்தன.

அநேகர் சேர்ந்த ஒரு கூட்டத்திற் செய்யும் சதியாலோசனைச் சூழ்ச்சி நீண்ட நாள்வரை யாருக்குமே தெரியாமல் மறைவாயிருப்பது முடியாத காரியம். ஆதலின், மேற்கூறிய இரகசியச் சூழ்ச்சிகள் சில தினங்களில் நவாபின் காதுக்கு எட்டின. அதன் மேல் அவர், ஆங்கிலேயர் நடத்தைகளில் சந்தேகங்கொள்ள ஆரம்பித்தார். அதைக் கண்ட ஒமிச்சண்ட் அதற்குத் தக்க விதமாய்க் காரியங்களைச் செய்து நவாபின் சந்தேகங்களை நீக்கி அவர் முன்போல் பயம் ஒன்றுமின்றி இருக்கும்படி செய்தார். சதியாலோசனைக்காரர்களின் எற்பாடுகளெல்லாம் செவ்வையாய் நடந்துகொண்டு வந்தன. அச்சந்தர்ப்பத்தில் ஒமிச்சண்ட் நவாபு பக்கம் சார்ந்து, தம் கூட்டத்தாரின் சூழ்ச்சிகளைத் தெரிவித்து விடுபவர்போல் தோன்றினர். அதைக் கிளைவ் தெரிந்து கொண்டார். அதனல் அவர் ஒமிச்சண்டைத் தம் வசம் செய்துகொள்ளும் பொருட்டு அவருக்குக் கல்கத்தாவில் ஏற்பட்ட நஷ்டத்திற்கு ஈடு கொடுப்பதாக வாக்களித்தார். அதற்கு அவர் ஒப்புக்கொள்ளவில்லை. அவருடைய உதவி ஆங்கிலேயர்களுக்கு அதிகமாக வேண்டியதாயிருந்தது. முந்தியும் அவர் மிக்க நன்மைகளைச் செய்திருந்தார். சதியாலோசனைக் கூட்டத்தாரின் சூத்திரதாரி அவர்தான். அவர் ஸுராஜ-வுட்-டவுலாவின் காதில் அந்தச் சதியாலோசனை விஷயத்தைப் புகுத்தியிருந்தால் எல்லா விஷயங்களும் அடியோடு கெட்டிருக்கும். வாட்ஸ், மீர்ஜாபர், மற்றுமுள்ள சதியாலோசனைக்

காரர்கள் ஆகிய எல்லாருடைய உயிர்களும் அவர் கை யில் அடங்கியிருந்தன. ஆகவே, அவர், தமக்கு நஷ்ட ஈடு கொடுப்பதோடு சதியாலோசனையைப் பற்றிய விஷ யங்களை நவாபுக்குத் தெரிவிக்காமல் மறைத்து வைப் பதற்கும், தாம் செய்த உதவிக்கும் தமக்கு மூன்று லட்சம் பவுன் இனாமாகக் கொடுக்க வேண்டுமென்று கூறினர். அதைக் கேட்ட கமிட்டியார், திடுக்கிட்டு விட்டார்கள்; அவர்களால் அத்தொகை கொடுக்க முடி யாததாயிருந்தது. ஆதலின், அவர்கள், அவருடைய நயவஞ்சகத்தையும், அதனால் தங்களுக்கு நேரிடக் கூடிய அபாயங்களையும் கருத்திற்கொண்டு இன்னது செய்வதென்பது தோன்றாமல் இருந்தார்கள். அப் படி யிருக்குஞ் சந்தர்ப்பத்தில் கிளைவ் மாத்திரம் மனோ தைரியத்தைக் கைவிடாமல், கமிட்டியாரை நோக்கி, "ஒமிச்சண்ட் துன்மார்க்கன்—பாவி; ஆனபடியால் அவனுக்குத் தக்கபடி புத்தி கற்பிக்க வேண்டும்; அவனை ஏமாற்றுவதற்கு எத்தகைய இழிதொழிலையும் மேற்கொள்ளலாம்; அதனால் ஒருவிதமான பாவமும் ஏற்படாது; அவன் கேட்ட நஷ்ட ஈட்டையும், இனாம் தொகையையும் கொடுப்பதாக வாக்களித்து விடலாம். இப்போது அவனுடைய உதவி நமக்கு வேண்டியதா யிருக்கிறது; அவனால் ஆகவேண்டிய காரியம் முடிந்த பின் நாம் அவனுக்கு நஷ்ட ஈட்டையும், இனாம் தொகையையும் கொடாமல் அவனை ஏமாற்றிவிடலாம்" என்று சொன்னர். அந்த யோசனையைக் கமிட்டியார் ஏற்றுக்கொண்டார்கள். அதன் மேல், அவர்கள், ஒமிச் சண்ட் கேட்டபடி அவருக்கு நஷ்ட ஈடும், இனாம் தொகையும் கொடுப்பதாக வாக்களித்தார்கள்.

அதன் மேல் ஒமிச்சண்டை எவ்விதம் ஏமாற்ற லாம் என்று கமிட்டியார் யோசித்துக்கொண்டிருந்தார் கள். ஒமிச்சண்டோ, எச்சரிக்கையுடனும் புத்திசாலித் தனத்துடனும் இருப்பவர்; ஆதலால் அவரை இன்னவித மாகத்தான் ஏமாற்ற வேண்டும் என்ற விஷயம் அவர் களுக்குள் முடிவுக்கு வாாமல் இருந்தது. அப்படி யிருக்கும்போது மீர்ஜாபர் பட்டத்துக்கு வந்தபின் இவ்விதமாக நடந்துகொள்ள வேண்டுமென்பதைப் பற்றி அவருக்கும் ஆங்கிலேயருக்கும் ஓர் உடன்படிக் கை ஏற்பட்டது. அந்த உடன்படிக்கையில் தமக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைப்பற்றிய நிபந்தனை ஒன்று இருக்க வேண்டுமென்றும், அந்நிபந்தனையைத் தம் கண்களினால் பார்த்தால்தான் தமக்கு நம்பிக்கை ஏற்படுமென்றும் ஒமிச்சண்ட் கூறினார். கிளைவ் அதற்கு வேண்டிய தந்திரங்களைச் செய்ய ஆலோசித்து, இரண்டு உடன்படிக்கைகளைத் தயாரித்தார். அவற் றுள் ஒன்றை வெள்ளைக்காகிதத்திலும், மற்றொன்றைச் சிவப்புக் காகிதத்திலும் எழுதினார். வெள்ளைக் காகிதத் தில் எழுதப்பட்டிருந்த உடன்படிக்கைதான் உண்மை யானது ; சிவப்புக்காகிதத்தில் எழுதப்பட்டிருந்தது பொய்யானது. வெள்ளைக்காகிதத்தில் எழுதப்பட் டிருந்த உடன்படிக்கையில் ஒமிச்சண்டின் நிபந்தனை இல்லை. சிவப்புக்காகிதத்தில் எழுதப்பட்டிருந்த உடன் படிக்கையில்மாத்திரம் அவரைப்பற்றிய நிபந்தனை இருந்தது. இந்தச் சிவப்புக்காகிதத்தில் எழுதப்பட்ட உடன்படிக்கை ஒமிச்சண்டுக்குக் காண்பிப்பதற்காகத் தயாரிக்கப்பட்டது.

இவ்வளவு தந்திரச் செயல்கள் நிறைவேறியும்

கிளைவுக்கு இடையில் ஒரு கஷ்டம் ஏற்பட்டது. அதாவது அட்மிரல் வாட்சன் சிவப்புக்காகிதத்தில் கையெழுத்துப் போட மறுத்துவிட்டார். ஓமிச்சண்ட் மிகவும் ஜாக்கிரதையுள்ளவரானபடியால் அட்மிரல் வாட்சனுடைய கையெழுத்தில்லாவிட்டால் சந்தேகங் கொள்வார் என்று கிளைவ் கருதித் தைரியத்தோடு அட்மிரல் வாட்சனுடைய கையெழுத்தைப்போல் அதில் பொய்க் கையெழுத்துப் போட்டார். அந்தச் சிவப்பு உடன்படிக்கை ஓமிச்சண்டுக்குக் காண்பிக்கப்பட்டது; ஓமிச்சண்ட் திருப்தியடைந்திருந்தார்.

## அத்தியாயம் 13.

### பிளாஸி யுத்தம்—மீர்ஜாபர் நவாபாதல்.

அதன் மேல், ஆங்கிலேயருக்கும், மீர்ஜாபருக்கும் இரகசியமாக நடந்த உடன்படிக்கையின்படி, மீர் ஜாபரை நவாபாக்கி, ஸூராஜ-வுட்-டவுலாவை நீக்குவதற்கு ஆங்கிலேயர்களால் அவர் மீது படையெடுக்கப்பட்டது. சண்டைக்கு எல்லாம் தயாராய் விட்டன. கிளைவ் தம்முடைய சேனையை ஆயத்தஞ் செய்து கொண்டு மூர்ஷிதாபாத் நோக்கிப் புறப்படலானார். அதற்கு முன் எழுதிய கடிதங்களுக்கு மாறாக அவர் இப்போது நவாபுக்குக் கடிதம் எழுதினார். அக்கடிதத்தில் நவாபால் ஆங்கிலேயர்களுக்கு நேரிட்ட கெடுதல்கள் விவரிக்கப்பட்டிருந்ததோடு, அவற்றிற்கு நவாபு தக்க ஈடு செய்ய வேண்டுமென்பதும், மீர்ஜாபர் ஆங்கிலேயருக்கும் நவாபுக்கும் எற்பட்ட தகராறுகளைத் தீர்த்து வைக்கும் மத்தியஸ்தராக நியமிக்கப்படவேண்டுமென்பதும், இவற்றிற்குத் தக்க பதில் கிடைக்க வேண்டுமென்பதும் குறிக்கப்பட்டிருந்தன. அக்கடிதத்தை வாங்கிப் பார்த்த ஸூராஜ-வுட்-டவுலா ஆங்கிலேயர் தமக்குக் கெடுதி செய்ய ஆரம்பித்துவிட்டார்களென்பதை யுணர்ந்து கோபங்கொண்டு, அவர்களை எதிர்ப்பதற்குத் தம்முடைய படைகளை யெல்லாம் திரட்டி, அவற்றுடன் அவர்கள் வரும் வழியை நோக்கிப் புறப்பட்டார். சண்டை தொடங்கும் சந்தர்ப்பத்தில் மீர்ஜாபர் நவாபை விட்டுவிட்டுக் கிளைவின் பக்கம் வந்து சேர்ந்துவிட வேண்டுமென்ற ஒரு நிபந்தனை முந்தியே ஆங்கிலேயருக்கும் மீர்ஜாபருக்கும் எற்பட்டிருந்தது. அதன்படி இப்போது மீர்ஜாபர்

தைரியமாய்க் காரியங்களைச் செய்யாமல் மயங்கித் திகைத்துக் கொண்டிருந்தார். அப்போது கிளைவ், பிளாஸிக்குச் சற்று தூரத்திலுள்ள கட்வா என்னும் இடம் போய்ச் சேர்ந்தார். மேற்கூறியபடி புறப்பட்ட நவாபும் பிளாஸி என்னும் இடத்திற்குச் சமீபத்தில் தம்முடைய படைகளுடன் வந்து தங்கியிருந்தார். இப்போதும் மீர்ஜாபர் தைரியங் கொள்ளாமல் கோழைத்தனமாகவே நடந்துகொண்டார். கிளைவ் கூறி அனுப்பியவைகளுக்கெல்லாம் அவர் பொருத்தமற்ற பதில்களைச் சொல்லி அனுப்பிக்கொண்டிருந்தார்.

அதனால் கிளைவ் மிகவும் கவலைகொண்டார். மீர்ஜாபர் தாம் கொடுத்த வாக்குறுதிகளின்படி நடந்துகொள்வார் என்ற நம்பிக்கை அவருக்கில்லை. இன்னும் மீர்ஜாபர் அப்படி நடந்தாலும் தைரியமாய்க் காரியங்களைச் செய்வாரோ செய்யமாட்டாரோ வென்றும் அவர் சந்தேகங் கொள்ளலானார். அப்போது எதிரிபடை அதிகரித்திருந்தது. அதைக் கண்டும் மனந்தளர்ந்தார். ஒருவர் திறமையும், படை வலிமையுமுடையவரா யிருந்தாலும் தம்முடைய படைக்கு இருபது பங்கு கொண்ட ஒரு படையை எதிர்க்கவேண்டிய சந்தர்ப்பம் நேரும்போது எப்படி மனந்தளராதிருக்க முடியும் ? இன்னும் அவருக்கு முன்னால் ஹூக்ளி நதியிருந்தது. படைகள் அதைச் சுலபமாகக் கடந்து விடலாமெனினும், கொஞ்சம் அஜாக்கிரதை நேர்ந்தால் எல்லாரும் அதில் வீழ்ந்தழியவேண்டியதே. அதை உத்தேசித்தும் அவருடைய அஞ்சா நெஞ்சம் கலக்கமடைந்தது. இந்த ஒரு சந்தர்ப்பம் தவிர வேறு எந்தச் சந்தர்ப்பத்திலும் அவர் மனங் கலங்கினதில்லை. இத்

தகைய மனக் கலக்கங் கொண்ட அவர் யுத்தத்தைப் பற்றி ஆலோசிப்பதற்காக ஒரு கூட்டத்தைக் கூட்டினூர். அச் சபையைச் சார்ந்த பெரும்பான்மையோர் சண்டைவேண்டாமென்று கூறினூர்கள். அவர்கள் சொன்னது சரி என்று அவருக்குத் தோன்றியது. அவர் இந்தச் சந்தர்ப்பத்தில், இச் சபையைக் கூட்டினது தவிர மற்று எச்சந்தர்ப்பத்திலும் வேறு எச்சபையையுங் கூட்டவில்லை ; அச் சபையார் கூறியபடி அவர் காரியங் களைச் செய்திருந்தால் வங்காளத்தில் பிரிட்டிஷ் ராஜ் யத்தை எற்படுத்தி யிருக்க முடியாது ; இவற்றை கிளை வே ஒரு சந்தர்ப்பத்தில் கூறியுள்ளார். மேற்கூறிய கூட் டம் கலைந்தவுடன் அவர் தனியாய் மரங்களுக்கு அடி யில் போய் உட்கார்ந்துகொண்டு ஒருமணி நேரம்வரை ஆழ்ந்த யோசனையி லிருந்தார். பின்னர் அவ்விடத்தி னின்று எழுந்திருந்து எத்தகைய இன்னல்களுக்கும் அஞ்சாது, மறுநாள் காலையில் ஆற்றைக் கடக்க எல்லா ரும் தயாராக இருக்க வேண்டுமென்று கட்டளையிட் டார்.

மறுநாள் பொழுது விடிந்தது. கிளைவும் அவரைச் சேர்ந்த படைவீரர்களும் ஆற்றைக் கடந்து மேல் நோக்கிச் சென்று சூரியன் அஸ்தமித்து நெடுநேரமான பின் பிளாஸிக்கு அருகிலிருந்த ஒரு மாந்தோப்பை அடைந்தார்கள். அவர்கள் இருந்த இடத்திற்கு ஒரு மைல் தூரத்தில் ஸுராஜ-வுட்-டவுலாவின் படைகள் இருந்தன. அப்போது கிளைவுக்குத் தூக்கம் பிடிக்க வில்லை. இரவெல்லாம் நவாபின் படைகள் மேள வாத் தியங்களை முழக்கிக் கொண்டும், ஜாலர்களைத் தட்டிக் கொண்டு மிருந்தன. இச் சத்தங்களெல்லாம் கிளை

வுக்குக் கேட்டன். அவர் நவாபின் அதிகரித்த படைகளை எதிர்ப்பதெப்படி என்று சிந்தித்துக்கொண்டிருந்தார்.

ஸுராஜ-வுட்-டவுலாவும் மன நிம்மதியோடிருக்கவில்லை. தைரியமிழந்து என்ன நேரிடுமோ வென்று பயங் கொண்டிருந்தார். தம்முடைய தளகர்த்தர்களையும் அவர் நம்பவில்லை. தம் அருகில் வந்தவர்களுக்கெல்லாம் அஞ்சி வெருண்டார். கல்கத்தா இருட்டறையில் இறந்தவர்களின் ஆவிகள் பைசாசங்களாகித் தம்மைச் சூழ்ந்து கஷ்டப்படுத்துவதைப்போன்ற ஒரு தோற்றம் அவர் மனதிலுண்டாயிற்று. இத்தகைய சம்பவங்களால் அவர் சிந்தை கலங்கிக் கூடாரத்தில் தன்னந்தனியாய் உட்கார்ந்திருந்தார்.

மறுநாள் சூரியன் உதயமாயிற்று. இந்நாள் தான் இந்தியாவை ஆளக்கூடியவர் இன்னர் என்பதை நிச்சயப்படுத்தியது. சூரியன் உதித்தவுடனே கூடாரங்களிலிருந்த நவாபின் இராணுவ வீரர்கள் ஆங்கிலேயப் படைகள் தங்கியிருந்த மாந்தோப்பை நோக்கிச் செல்லலானார்கள். நவாபின் காலாட்படையில் நாற்பதினாயிரம் வீரர்கள் துப்பாக்கிகளையும், கத்திகளையும், வாள்களையும், சம்மட்டிகளையும், அம்புகளையும், விற்களையும் தாங்கியிருந்தார்கள். அவர்களுக்குத் துணைபுரிய ஐம்பது பீரங்கிகள் வண்டிகளில் ஏற்றப்பட்டுப் பல வெள்ளை எருதுகளால் இழுத்துக்கொண்டு வரப்பட்டன. யானைகள் அவ் வண்டிகளுக்குப் பின்னால் நின்று அவற்றைத் தள்ளிக்கொண்டு வந்தன. சில பிரென்சுக்காரர்கள் கைகளில் துப்பாக்கிகளை ஏந்தியிருந்தார்கள்.

அத் துப்பாக்கிகள் மிகுந்த வெற்றியைத் தரக் கூடிய வைகளாயிருந்தன. குதிரைப் படையில் வடக்குப் பிர தேசங்களில் பொறுக்கி எடுக்கப் பெற்ற பதினையாயிரம் இராணுவ வீரர்கள் இருந்தார்கள். கிளைவ் அவர்களை யெல்லாம் கண்டவுடன் அவர்கள் தக்காண தேசத்து மனிதர்களைக் காட்டிலும் பலசாலிகளென்று தெரிந்து கொண்டார். அவருடைய பட்டாளத்தில் மூவாயிரம் இராணுவ வீரர்கள்தான் இருந்தனர். அவர்களில் ஏறக்குறைய ஆயிரம் பேர் ஆங்கிலேய வீரர்கள் ; மற்ற வர்கள் இந்தியர்கள். அவர்கள் ஆங்கிலேய தளகர்த்தர் களால் சண்டைக்குப் பழக்கப் பட்டவர்கள். அவர்கள் அனைவருக்கும் தளகர்த்தர்களாக இருந்தவர்கள் ஆங்கி லேய இராணுவ உத்தியோகஸ்தர்களே.

பீரங்கிச் சத்தங்களுடன் சண்டை ஆரம்ப மாயிற்று. நவாபுக்குரிய பீரங்கிகள் சரியானபடி வேலை செய்யவில்லை. ஆங்கிலேய பீரங்கிகளோ மும் முரமாக வேலை செய்தன. அவற்றால் ஸுராஜ-வுட்- டவுலாவின் படையைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களில் அநேகர் இறந்தனர். அவருடைய படையில் மிகுந்த குழப்பம் ஏற்பட்டுவிட்டது. நவாபுக்கு அச்சம் அதிகரித்துக்கொண்டே யிருந்தது. அப்போது நவா பின் வேலைக்காரரும், சதியாலோசனைக் கூட்டத்தில் சேர்ந்தவருமாகிய ஒருவர் நவாபிடம் சென்று ஓடிப் போய்விடுவதே நலமென்று ஆலோசனை கூறினர். அத் தகைய நயவஞ்சகமான ஆலோசனையை அவர் கேட்டுத் தம் படைகளைப் பின்னுக்குப் போகும்படி கட்டளையிட் டார். அவ்வாறே படைகளும் பின்னேக்கிச் சென் றன. கிளைவ், முன்னேறுவதற்கு அதுதான் சமய

மென்று தெரிந்து தம்முடைய படைகளை மேனேக்கிச் செல்லும்படி கட்டளை யிட்டார். அவ்வாறே அச்சேனைகள் முன்னேறி நவாபின் படைகளைத் துரத்திச் சென்று தாக்கின. அதன் மேல் நவாபின் படைகள் தோல்வியடைந்து மூலைக்கொன்ருக ஓட ஆரம்பித்தன. நவாபுக்குத் துணையாக வந்த பிரென்சுக்காரர்களும் தோல்வியடைந்தார்கள். நவாபின் படைகளில் ஐந்நூறு பேர் கொலையுண்டார்கள்; மற்றவர்கள் ஓடிவிட்டார்கள். அவர்கள் ஓடிப்போகும்போது கூடாரங்களையும், துப்பாக்கிகளையும், மூட்டைகளையும், வண்டிகளையும், கணக்கிலடங்காத குதிரைகளையும், எருதுகளையும் ஆங்கிலேயர் கைவசமாகும்படி விட்டுவிட்டுச் சென்ருர்கள். கிளேவினுடைய படையில் இருபத்திரண்டு பேரே இறந்தனர்; ஐம்பது பேர் காயமடைந்தனர். இந்த அற்பச் சேதத்துடன் அவர் நவாபின் அறுபதினுயிரம் படைவீரர்களைச் சிதற அடித்து ஓட்டிக் கிரேட் பிரிட்டனைக் காட்டிலும் விசாலமான இராஜ்யத்தைக் கைப்பற்றினுர்.

இந்தச் சண்டையில் மீர்ஜாபர், ஆங்கிலேயருக்கு எத்தகைய உதவியும் புரியவில்லை. ஆயினும் நவாப் தோல்வியடையும் நிலையில் இருந்தபோது அவர் தம் அதிகாரத்தின்கீழ் இருந்த படைகளையும் ஓடும்படி செய்துவிட்டார். சண்டை முடிவடைந்தவுடன் அவர் ஆங்கிலேயர்களின் வெற்றியைப் பாராட்டி அவர்களுக்குப் புகழ்ச்சியான கடிதமொன்றெழுதி அனுப்பினுர். மறுநாள் ஆங்கிலேயர் இருக்கும் இடத்திற்குச் சந்தோஷத்துடன் சென்ருர். அப்போது அவரை வரவேற்பதற்காகக் கிளேவால் இராணுவ வீரர்கள் அணிவகுத்து

நிறுத்தப்பட் டிருந்தார்கள். அவர்கள் தம்மை எதிர்ப் பதற்காகத்தான் நிறுத்திவைக்கப்பட் டிருக்கிறார்கள் என்று மீர்ஜாபர் கருதி முதலில் நிடுக்கிட்டார். அப் போது ஒரு காவலாளி நவாபுக்குச் செய்யும் முறைப் படி மரியாதை செய்து வணங்கி அவரை வரவேற்றான். அங்ஙனம் வரவேற்கவே அவருக்கிருந்த பயம் நீங்கி யது. கிளைவ் கூடாரத்திலிருந்து வெளியில் வந்து அவரைத் தழுவிக்கொண்டார். நவாபுக்குச் செய்யும் முறைப்படி அவருக்கு வந்தனமளித்து, "வங்காளம், பீஹார், ஒரிஸா என்னும் மாகாணங்களுக்கு இனிமேல் நீரே நவாப்" என்று சொல்லி, அவரைக் கொண்டாடி னார். மீர்ஜாபர், தக்க சமயத்தில் கிளைவுக்கு உதவி செய்யாமலிருந்த குற்றத்தை மன்னிக்கும்படி அவ ரிடம் கேட்டுக்கொண்டார். அதன் மேல் ஸூராஜ-வுட்-டவுலா இருக்கும் மூர்ஷிதாபாத்துக்குப் படை யெடுத்துச் செல்லும்படி கிளைவ் அவருக்குக் கூறினார். அவ்வாறே அவர் சென்றார்.

இனி, ஸூராஜ-வுட்-டவுலாவின் கதி என்னயிற்று என்பதைப்பற்றிச் சிறிது கவனிப்போம். அவர், மேற் கூறியபடி தோல்வி யடைந்தவுடன் வேகமாய் ஓடக் கூடிய ஓர் ஒட்டகத்தின்மேல் எறிக்கொண்டு இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் மூர்ஷிதாபாத் போய்ச் சேர்ந்தார். அவ்வாறு போய்ச் சேர்ந்ததும் தம்முடைய மந்திரிகளைக் கூட்டிவைத்து மேல் நடக்க வேண்டிய காரியங்களைப்பற்றி அவர்களிடம் ஆலோசனை கேட் டார். அவர்களில் புத்திசாலிகளாக இருந்தவர்கள், அவர் ஆங்கிலேயரிடமே சரண்புகுந்து விடுவது நல்ல தென்றும், அவர்கள் இராஜ்யத்தைவிட்டு அவரை நீக்கு

வது தவிர வேறு ஒன்றுஞ் செய்யமாட்டார்களென்றும் கூறினர்கள். ஆனால், அவர், அவர்கள் கூறியது நயவஞ்சகமான செயல் என்று கருதி அவர்களுடைய ஆலோசனையை ஏற்கவில்லை. மற்றவர்கள், "மறுபடியும் நாம் ஆங்கிலேயரோடு சண்டை போட்டு ஒரு கை பார்த்துவிடுதல் நலம்" என்று கூறினர்கள். அவர்கள் கூறிய ஆலோசனை சரியானதென்று நவாபுக்குத் தெரிந்தது. அதனால் அவர் அதன்படி காரியங்களைச் செய்ய இசைந்து படைகளைத் திரட்டும்படி இராணுவ உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டளையிட்டார். அத்தருணத்தில் மீர்ஜாபர் அங்குப் போய்ச்சேர்ந்தார். அவ்விஷயம் நவாபுக்குத் தெரிந்தது. அவ்வாறு தெரியவே அவர், தாம் கட்டளை யிட்டபடி ஒன்றும் செய்யாமல், மிகுந்த பயங்கொண்டு, அழுக்கடைந்த வஸ்திரங்களை அணிந்து, இரவானதும் நகைகள் அடங்கிய ஒரு பெட்டியை எடுத்துக்கொண்டு இரண்டு வேலைக்காரர்களுடன் பாடலிபுரம் (Patna) சேர்வதற்குப் படகில் ஏறிப் புறப்பட்டுப் போனர்.

இந்தச் சண்டை முடிந்த பின் சின்னுட்கள் கழித்துக் கிளைவ் இருநூறு ஆங்கிலேய வீரர்களுடனும், முந்நூறு இந்திய இராணுவ வீரர்களுடனும் மூர்ஷிதாபாத்துக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே அவர் வசிக்கப் பெரிய அரண்மனை ஒன்று மீர்ஜாபரால் விடப்பட்டது. அந்த அரண்மனையைச் சுற்றிலும் அழகிய தோட்டமொன்று அமைக்கப்பட்டிருந்தது. அது, கிளைவுடன் சென்ற ஐந்நூறு சிப்பாய்களும் தங்குவதற்குத் தக்க வசதியுள்ளதா யிருந்தது. கிளைவ், அந்தச் சிப்பாய்களுடன் அம்மாளிகையில் தங்கினர். உடனே

மீர்ஜாபரை நவாபாக நியமிக்கத்தக்க ஏற்பாடுகளைச் செய்தார்; அவரை அழைத்துச் சிங்காதனத்தில் உட்காரவைத்தார்; கீழ் நாடுகளின் வழக்கத்தை ஒட்டி அவருக்குப் பொன் நாணயங்களை வெகுமதியாக அளித்தார்; அதன்மேல் அங்குக் கூடியிருந்த ஜனங்களைப் பார்த்து, "உங்களை இதுவரை ஆண்டுவந்த கொடிய நவாபின் ஆட்சியினின்று நாங்கள் மீட்டுவிட்டோம்; இனி இப் புதிய நவாபால் உங்களுக்கு அநேக நன்மைகள் உண்டாகும்; நீங்களும், இந்த நவாபும் மனமொத்துக் காரியங்களைச் செய்வீர்களென்று நான் நம்புகிறேன்" என்று கிளைவ் பிரசங்கஞ் செய்தார்.

## அத்தியாயம் 14.

### ஓமிச்சண்ட் ஏமாற்றமடைதல்.

புதிய நவாபான மீர்ஜாபருக்கு, தாம் ஆங்கிலேய ருக்குக் கொடுத்த வாக்குறுதிகளையும், மற்றவர்களுக் குக் கொடுத்த வாக்குறுதிகளையும் நிறைவேற்ற வேண் டியது அவசியமாயிருந்தது. அதற்காக ஜெகத்சேட் என்ற பிரபல மார்வாடியின் வீட்டில் முக்கியஸ்தர்கள் அடங்கிய ஒரு சபை கூடிற்று. ஓமிச்சண்டும் தமக்குக் கிடைக்கவேண்டிய பணத்தைப் பெறுவதற்காக அக் கூட்டத்திற்கு வந்திருந்தார். அப்போது செய்யவேண் டிய பல காரியங்கள் அச்சபையாரால் தீர்மானிக்கப்பட் டன. ஓமிச்சண்ட் தம்மைப்பற்றிய விஷயம் எப் பொழுது வருமோவென்று எதிர்பார்த்திருந்தார். முன்னே கூறியபடி கிளைவால் தயாரிக்கப்பட்ட இரண்டு உடன்படிக்கைகளில் வெள்ளைக் காகிதத்தில் எழுதப் பட்டிருந்த உடன்படிக்கை அச் சபையில் படிக்கப்பட் டது. ஓமிச்சண்ட் தம் விஷயம் எழுதப்பட்டிருந்த சிவப்பு உடன்படிக்கை படிக்கப்படுமென்று ஆவலோ டிருந்தார். ஆனால் அது படிக்கப்படவில்லை. ஓமிச் சண்டின் எண்ணத்தை யுணர்ந்த கிளைவ், கம்பெனியின் வேலைக்காரர்களில் ஒருவரான ஸ்க்ராப்டன் (Scrafton) என்பவரைப் பார்த்து, 'உண்மையை எடுத்துச்சொல்ல இதுதான் தக்க காலம்' என்று கூறினர். அதன் பின் ஸ்க்ராப்டன் ஓமிச்சண்டைப் பார்த்து இந்துஸ்தானி பாஷையில், "ஓ! ஓமிச்சண்ட்! நான் சொல்வதைக் கேளும்; உமக்கு அனுகூலமான விஷயத்தைக் காட்டிச் சிவப்புக் காகிதத்தில் எழுதப்பட்ட உடன்படிக்கை வாசிக்கப்படுமென்று நீர் எதிர்பார்க்கின்றீர்; அது

வாசிக்கப்படமாட்டாது ; சிவப்புக் காகிதத்தில் எழுதப் பட்ட அந்த உடன்படிக்கை செல்லாது ; உம்மை ஏமாற்றுவதற்காகவே அது செய்யப்பட்டது ; அதன் படி உமக்குப் பணம் கிடைக்காது" என்று கூறினர். அதைக் கேட்ட ஓமிச்சண்ட் பிரக்ஞையற்றுத் தம் முடைய வேலைக்காரர்கள் மீது சாய்ந்துவிட்டார். பின் னர் ஒருவாறு தெளிந்தெழுந்தார். ஆயினும் அவ ருடைய மூளையும், மனதும் அதிகமாகக் கெட்டுப் போயின. கிளைவ் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி இவ் விஷயத்தில் மனச்சாட்சிக்கு விரோதமாக நடந்தவரா யிருந்தாலும், அப்போது ஓமிச்சண்டின் நிலைமையைப் பார்த்தவுடன் அவருக்கும் சிறிது மன மிளகிற்று. பின்னர் ஓமிச்சண்ட், மனக்கலக்கத்துடன் தம் இருப் பிடத்திற்குப் போய்விட்டார். அது முதல் அவர், பைத்தியம் பிடித்தவர்போன்றிருந்தார். அவருடைய அத்தகைய நிலைமையைக் கிளைவ் கேள்விப்பட்டு, ஒரு நாள் அந்த ஓமிச்சண்ட் இருக்கும் இடஞ்சென்று அவரிடம் அன்பு காட்டி, "நீங்கள் ஸ்தலயாத்திரை செல்லுங்கள் ; அது நல்லது ; தூர தேசங்கட்கு யாத்திரை போய்வருவதால் மனமும் சாந்தியடைந்து புத்தியும் தெளிவு பெறும்" என்று கூறினர். இன்னும் அவரைப் பொது நன்மைக்கான காரியங்களிலும் சேர்த்துக்கொள்ளத் தீர்மானித்தார். எனினும் ஓமிச் சண்ட், 'பணம் கிடையாது' என்றதைக் கேட்ட போது அடைந்த கலக்கத்தினின்றும் நீங்கவில்லை. அவ ருக்கிருந்த அறிவாற்றல்களும், ஆனந்த வாழ்க்கையும் போய்விட்டன. அவர், தம்மிடமிருந்த சொத்துக் களைச் சிறுபிள்ளை விளையாட்டுக்கான ஆபரணங்களைச் செய்வதிலும், தாம் அலங்காரமான ஆடைகளை

அணிந்து காலங்கழிப்பதிலும், நவரத்தினக் கற்களால் ஆன ஆபரணங்களைப் பூண்பதிலும் செலவழித்தார். அம்மாதிரி சில மாதங்கள் வரை இருந்து கடைசியில் அவர் இவ்வுலகைத் துறந்தார்.

கிளைவ் இவ்வாறு பொய்க் கையெழுத்திட்டு ஓமிச்சண்டை வஞ்சித்ததைப் பற்றி ஜனங்கள் அவரவர்களுக்குத் தோன்றுகிறபடி பற்பல விதமான அபிப்பிராயங்களைக் கொள்வார்கள்; அவருடைய சரித்திரத்தை எழுதிய ஆசிரியரான சர் ஜான் மால்கம் என்பவரும் அவர் செய்ததைப்பற்றிச் சில அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கிறார். கிளைவ், வாட்சனுடைய கையெழுத்தைப்போல் போட்டதற்காக அவர் விசனிக்கின்றார். எனினும், ஒருவர் செய்ததற்குப் பதில் செய்ய வேண்டியது இன்றியமையாததென்றும், அதைக் கொண்டே கிளைவ், தம்மை வஞ்சித்தவரை வஞ்சித்தார் என்றும் அவர் கூறுகிறார். இன்னும் ஆங்கிலேயர்களிடம் நம்பிக்கை கொள்ளாத ஒருவரிடத்தில் ஆங்கிலேயர்கள் நம்பிக்கை கொள்வதற்கு இடமில்லை யென்றும் அபிப்பிராயப்படுகிறார். ஆங்கிலேயர் ஓமிச்சண்டுக்குக் கொடுத்த வாக்குறுதியின்படி நடந்துகொண்டிருந்தால், இன்னும் அநேகர் ஓமிச்சண்ட் கையாண்ட முறைகளைக் கைக்கொண்டு ஆங்கிலேயருக்கு அதிகமான இன்னல்களை உண்டாக்கி விடுவார்களென்றும் அவர் கருதுகிறார். ஆனால் கிளைவ் பொய்க் கையெழுத்திட்டு ஓமிச்சண்டை வஞ்சித்தது தவறான காரியமே. 'உண்மை கடைப்பிடி' என்ற வசனம் எல்லாருக்கும் இன்றியமையாததே. சாதாரண மனிதர்களைக் காட்டிலும், பெரிய சபைகளைச் சேர்ந்த கௌரவஸ்தர்களுக்கு

உண்மையைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டியது மிகவும் முக்கியமானதாகும். வாக்குப் பிசகும் 'மனிதர் கள் சிறப்படைதல் முடியாது ; நீதிக்கு மாறாக நடத்தப் படும் இராஜ்யங்களும் விருத்தி யடையமாட்டா ; பிரிட் டிஷ் இந்திய சரித்திரம் முழுமையும் கெடுதல் செய்த வர்க்கும் கெடுதல் செய்யலாகாதென்பதையும், நன் மையே செய்ய வேண்டுமென்பதையும் குறிப்பிடுகிறது. உண்மையைக் கடைப்பிடிப்போர் கெட்டவர்களையும் நல்லவர்களாக்கிவிடுவார்கள். இதற்குப் பிரிட்டிஷ் இந்திய சரித்திரத்தில் அநேக சான்றுகள் இருக்கின் றன. இந்தியாவிலிருந்து ஆட்சிமுறைகளைப் பல ஆண்டுகளாகக் கவனித்து வந்த ஆங்கில ஆட்சியாளர் கள் உண்மையுடனும், வெளிப்படையாகவும் காரியங் களைச் செய்து வந்தார்கள். அவர்கள் அம்மாதிரி செய்துகொண்டு வந்தபடியால்தான் அவர்களுக்கு நன் மைகள் ஏற்பட்டுக்கொண்டே யிருந்தன. ஆங்கிலேயர் கள் தங்களுடைய வீரதீரச் செயல்களாலும், அறி வாலும் இந்தியாவில் இராஜ்யத்தைப் பெருக்கிக் கொள்ளவில்லை. உண்மையுடனும் நீதியுடனும் நடந்து கொண்டதால்தான் அவர்களுடைய இராஜ்யமானது விருத்தியடைந்தது. இந்தியாவிலுள்ள ஆங்கிலேய ரிடம் இவ்வாறு சத்தியம் ஏற்பட்டிருந்ததால்தான் எல்லா மனிதர்களும் அவர்களிடம் நம்பிக்கை கொண் டிருந்தார்கள். பிரிட்டிஷ் தூதன் ஒருவன் கூறும் மொழி களில் ஜனங்களுக்கு அதிக நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. பிரிட்டிஷாரிடம் சரணடைந்த ஒருவன் எத்தகைய பீதியுமின்றிச் சௌக்கியமா யிருந்துவர ஏதுவுண்டா யிருந்தது. இந்திய அரசர்கள் அளவுக்கு மீறிய வட்டி கொடுப்பதாக வாக்களித்தாலும் அவர்களுக்குப் பணம்

கொடுக்க ஒருவரும் முன் வருவதில்லை. பிரிட்டிஷாருக்கு நூற்றுக்கு நாலுவீத வட்டிக்குக்கூட ஜனங்கள் பணங் கொடுக்க முன் வருகிறார்கள். இதற்குக் காரணம் அவர் களிடம் கொடுக்கப்படும் தொகையானது மோசம் போகாமல் இருக்கும் என அவர்கள் நம்பிக்கை கொள் வதேயாம். பிரிட்டிஷாருக்கு விரோதமாயுள்ள ஓர் அர சன் மலையளவு திரவியங் கொடுப்பதா யிருந்தாலும் அவர்களுடைய இராணுவ வீரர்கள் அவ்வேற்றரச னிடம் போகப் பிரியப்படுவதில்லை. இதற்குக் காரணம் பிரிட்டிஷார் அவர்கள் மீது மிக்க அன்புடையவர்களா யிருப்பதே. இன்னும் கம்பெனியார் தங்களிடம் மனி தர் நீண்ட நாள் வேலை செய்தால் அவர்களுக்கு உப காரச் சம்பளம் கொடுப்பதாகக் கூறுகிறார்கள். அதை நம்பி மனிதர் அவர்களிடம் நீண்டகாலம் வேலை செய்கி றார்கள். அதற்குக் காரணம் அவர்கள் கொடுத்த வாக் குறுதிகளினின்றும் பிறழமாட்டார்கள் என்று ஜனங் கள் நம்புவதேயாகும். கவர்னர் ஜெனரலுடைய சம்ப ளம் எவ்வளவு பத்திரமாக ஆட்சியாளரால் கொடுக்கப் படுகிறதோ அவ்வளவு பத்திரமாகச் சாதாரண சிப்பாயி னுடைய சம்பளமும் கொடுக்கப்படும் என்ற நம்பிக்கை ஜனங்களிடம் ஏற்பட்டிருக்கிறது. இங்கிலீஷ் அர சாங்கமானது தன்னிடம் வேலையிலிருந்த பின்னர் வேலை செய்யச் சக்தி யற்றவர்களை ஆதரிக்காமல் விட்டு விடாதென்பது ஜனங்களுக்குத் தெரியும். சர் ஜான் மால்கம் கூறுவதைப்போல் இந்தியாவில் பிரிட்டிஷ் இராஜ்யமானது கெடுதலுக்குக் கெடுதல் செய்திருந் தால் அது நிலைத்தேயிராது. கிளைவ் ஒமிச்சண்டை ஏமாற்றியதைப்போல் பலரை அது ஏமாற்றியிருந்தாலும் இதுவரை நிலைபெற்றிராது.

விஷயங்கள் இப்படியிருக்க, கிளைவ் ஒமிச்சண்டைப் பொய்க் கையெழுத்திட்டு மோசஞ் செய்ததற்குத் தக்க காரணமிருந்தபடியால், அது குற்றமாகாது, அதற்காக அவர் மீது பழி சுமத்துவது முறையல்ல என்று சர் ஜான் மால்கம் அபிப்பிராயப்பட்டாலும் உண்மையை ஒப்புக்கொண்டே தீரவேண்டும்.

## அத்தியாயம் 15.

### ஸூராஜ-வுட்-டவுலாவின் மரணம்-

### கிளைவும் மீர்ஜாபரும்.

மேற்கூறிய புரட்சியில் ஓமிச்சண்ட் மாத்திரம் தீமையடையவில்லை. இன்னும் அநேகர்கூடக் கெடுதலை அடைந்தார்கள். முன் உரைத்தபடி வெளியேறி ஓடின ஸூராஜ-வுட்-டவுலாவைப் பிடித்து வரும்படி மீர்ஜாபரால் சில போர்வீரர்கள் அனுப்பப்பட் டிருந்தார்கள். அவர்கள் சென்று நடுவழியிலேயே ஸூராஜ-வுட்-டவுலாவைப் பிடித்துவந்து அவர் முன்னிலையில் நிறுத்தினார்கள். அவர், மீர்ஜாபரைக் கண்டவுடன் பயங் கொண்டவராய்த் தரையில் வீழ்ந்து தம்மை மன்னிக்கும்படி தாழ்ந்த குரலினல் வேண்டிக்கொண்டார். அதைக் கேட்ட மீர்ஜாபர் செய்வது இன்னதென்று தோன்றுமல் திகைத்துக்கொண்டிருந்தார். அப்படியிருக்குஞ் சந்தர்ப்பத்தில் அவருடைய குமாராகிய மீரான் என்பார், ஸூராஜ-வுட்-டவுலாவைக் கொன்றுவிட வேண்டுமென்று தீர்மானித்தார். அதன் மேல் அவர் கொலையாளிகள் வசம் ஒப்படைக்கப்பட்டார். கொலையாளிகள் அவரைக் கொன்று விட்டார்கள். இங்கிலீஷ்காரர்கள் ஸூராஜ-வுட்-டவுலாவைக் கொலை செய்ததில் சம்பந்தப்படவில்லை. அவரைக் கொன்றதற்காக ஆங்கிலேயர்கள் புதிய நவாபின் மீது வெறுப்புக் கொண்டார்கள். அதைக் கண்ட நவாப் ஆங்கிலேயருக்குத் தக்க சமாதானங் கூறி அவ்வெறுப்பை மாற்றினர்.

மீர்ஜாபர் தாம் ஆங்கிலேயர்களால் நவாபாக நியமிக்கப்பட்டதற்குச் சந்தோஷித்து ஆங்கிலக் கம்பெனி

யாருக்கும் அக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்களுக்கும் அளவற்ற பணத்தைச் சன்மானமாகக் கொடுத்தார். எட்டு லட்சம் பவுன் மூர்ஷிதாபாத்திலிருந்து வில்லியம் கோட்டைக்கு (Fort William) அவரால் அனுப்பப்பட்டது. அந்தப் பொன் நாணயங்கள் நூற்றுக்கதிகமான படகுகள் மீது அனுப்பப்பட்டன. அப் படகுகளில் கட்டப்பட்டிருந்த கொடிகள் கண்ணைக் கவரத்தக்கனவாயிருந்தன. அப் படகுகளிலிருந்தவர்கள் ஆடல் பாடல்களைச் செய்துகொண்டு சென்றார்கள். சில மாதங்களுக்கு முன், ஜனக்கூட்டம் இல்லாமலிருந்த கல்கத்தா நகரானது அப்போது ஜனக்கூட்டம் நிரம்பப்பெற்றுப் பிரகாசத்துடன் விளங்கியது. அங்கே வியாபாரமும் முன்புபோல் நடக்க வாரம்பித்தது; ஆங்கிலேயர்கள் ஒருவிதப் பணக் கஷ்டமுமின்றிச் செழுமையான வாழ்க்கையை அடைந்தார்கள். கிளைவ் அச் சந்தர்ப்பத்தில் தமக்கு வேண்டிய அளவு பணத்தைச் சம்பாதித்துக்கொண்டிருக்கலாம்; ஆனாலும் அவர் வந்தவரைக்கும் பணத்தைக் கவர்ந்து கொள்ள நினையாமல் நியாயமாகத் தமக்குச் சேரவேண்டிய பணத்தை மட்டும் எடுத்துக்கொள்ளவே எண்ணினர். புதிய நவாப் வங்காளத்திலிருந்த தம் கஜானாவைத் திறந்து விட்டு அதில் வேண்டிய அளவு பணத்தைக் கிளைவ் எடுத்துக் கொள்ளலாம் என்று உத்தரவு பிறப்பித்தார். அக் கஜானாவில் கணக்கற்ற பணப்பைகள் ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அப்பைகளுடன் நவரத்தினக் கற்களும் குவியல் குவியலாகக் கிடந்தன. ஆனாலும் அவைகளின் மத்தியில் கிளைவ் மிக்க பெருமிதத்துடன் நடந்து சென்று சுமார் மூன்று லட்சம் பவுன் மாத்திரம் எடுத்துக்கொண்டார்.

மீர்ஜாபரிடமிருந்து பணம் பெற்றுக்கொண்டதற்காக பதினாறு வருடங்களுக்குப் பின் பொது ஜனங்கள் கிளைவைக் கண்டிக்கலானார்கள்; பிரிட்டிஷ் பார்லிமெண்டாரும் கண்டித்தார்கள். சர் ஜான் மால்கம் அக்கண்டனங்களையெல்லாம் மறுத்திருக்கிறார். கிளைவின் மீது குறை கூறுவோர்கள், அவர் மீர்ஜாபரிடம் சன்மானமாகப் பெற்ற தொகைகள் திருட்டுத் தனத்துக்கு உடந்தையா யிருந்ததற்குரிய கூலியென்றும், பயமுறுத்தி வாங்கப்பட்ட இலஞ்சமென்றும் கூறுகிறார்கள். ஆனால், அவருடைய சரித்திராசிரியரான சர் ஜான் மால்கம், அவைகள் பிரியத்தின் மேல் அவருக்குக் கொடுக்கப்பட்ட வெகுமதிகள் என்றும், பயமுறுத்தி வாங்கப்பட்டவை யல்லவென்றும், இங்கிலாந்தின் பிரபல வீரர்களான மார்ல்பரோ (Marlborough), நெல்சன் (Nelson), வெல்லிங்க்டன் (Wellington) ஆகிய இவர்களுக்கும் அந்நிய நாட்டு அரசர்கள் வெகுமதிகளைக் கொடுத்துள்ளார்களென்றும், அவைகளை அவர்கள் ஏற்றுக்கொண் டிருக்கிறார்களென்றும் கூறுகிறார்.

மார்ல்பரோ, நெல்சன், வெல்லிங்க்டன் ஆகிய இவர்கள் யாரிடமிருந்து எச்சந்தர்ப்பத்தில் வெகுமதிகளைப் பெற்றார்கள் என்பதைச் சிறிது விளக்குவோம்: மார்ல்பரோ என்பவர் மிகவும் கீர்த்தி வாய்ந்த ஆங்கில தளகர்த்தர்; பேர்போன இராஜ தந்திரி; அவர் அநேக யுத்தங்களில் வெற்றி யடைந்தார்; அவருடைய வெற்றிகளில் முக்கியமானவை 'பிளன்ஹீம்' (Blenheim), 'மால்பிலக்கெட்' (Malplaquet) என்னுமிடங்களில் அடைந்தவைகளே. முதலாவது ஜோஸப் என்னும் சக்

காவர்த்தி அவருக்கு மெண்டல்ஹீம் (Mendelheim) என்னும் பிரதேசத்தைச் சன்மானமாக அளித்தார். லார்டு நெல்சன் என்பவர் இங்கிலாந்தைச் சேர்ந்த கடற் படை வீரர்களில் முதன்மையானவர்; அவர் டிராபால்கர் (Trafalgar), நைல் (Nile) என்னுமிடங்களில் அடைந்த வெற்றிகளினால்தான் பிரிட்டிஷ் கடற்படை இன்றைக்கும் முதன்மை பெற்று விளங்கி வருகிறது. நேபில்ஸ் அரசர் 1798-ம் ஆண்டில் அவரைப் பிராண்டி (Bronte) என்னும் பிரதேசத்தின் கோமகனாக நியமித் தார்; அத்துடன் அப்பட்டத்திற்குரிய பூஸ்திதிகளையும் அவருக்குக் கொடுத்தார். வெல்லிங்டன் மிகவும் சிறந்த இராணுவ தளகர்த்தர்; அவர் இந்தியாவில் அஸ்ஸே, ஆர்காடு என்னுமிடங்களில் வெற்றி யடைந்தார்; நெபோலியனை வாட்டர்லூ (Waterloo) என்ற இடத் தில் தோல்வியடையச்செய்தார். நெதர்லாண்டு தேசத்தின் (ஹாலண்டு பெல்ஜியம்) அரசர் அவருக்குப் பிரின்ஸ் ஆவ் வாட்டர்லூ (Prince of Waterloo) என்ற பட்டப் பெயரையும் அதற்குரிய பொருள்களையும் கொடுத்தார்.

இவ்வாறு மார்ல்பரோ, நெல்சன், வெல்லிங்டன் ஆகிய இவர்கள் வெகுமதிகளை வாங்கினார்கள் என்று சொன்னதுடன் நில்லாமல், சர் ஜான் மால்கம் என்பார், கீழ் நாடுகளில் வெகுமதிகள் கொடுப்பதும் வாங்கு வதும் வழக்கமென்றும், இந்தியாவிலுள்ள ஆங்கில உத்தியோகஸ்தர்கள் வெகுமதிகளை வாங்கக்கூடா தென்று பார்லிமெண்டார் ஒருவிதச் சட்டத்தையும் செய்யவில்லையென்றும் கூறுகிறார். அவர் கூறும் இச் சமாதானம் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று. தள

கர்த்தன் என்பவன் தன்னுடைய அரசாங்கத்தின் வேலைக்காரனு யிருப்பதால் எதையும் அவ்வரசாங்கத் தாரின் உத்தரவு பெற்றே செய்யவேண்டும்; ஆகலால் கிளைவ் எத்தகைய வெகுமதியையும் தம் அரசாங்கத் தாரின் அநுமதியைப் பெற்றுத்தான் பிறரிடமிருந்து அடையவேண்டும்; ஓர் அரசாங்கத்தின் படைகளை நடத்துகிறவர்கள், அந்த அரசாங்கத்தின் உத்தரவு இல்லாமல் பிறரிடம் வெகுமதிகளைப் பெற்றால் அவர் கள் அந்த அரசாங்கத்துக்கு உண்மையாய் நடந்து கொண்டவர்களெனக் கருத இடமில்லை. இந்திய அர சர்களிடமிருந்து வெகுமதி வாங்கக்கூடாதென்று பார்லிமெண்டார் சட்டஞ் செய்யவில்லை யென்பதைக் கொண்டு, உத்தியோகஸ்தர் இனும் வாங்கலாமென்று சர் ஜான் மால்கம் கூறுவது பொருத்தமானதன்று. இதற்குச் சட்டம் வேண்டியதில்லை; மனிதனுக்குள்ள அறிவைக் கொண்டே இத்தகைய செயல்கள் நீதிக்கு விரோதமானவை என்பதை உணர்ந்து கொள்ளலாம். இது, கிளைவின் மீது குறை கூற இடமாகத்தான் இருக் கிறது.

ஆயினும் இந்த ஒரு விஷயத்தை மாத்திரம் கொண்டு அவர் மீது அதிகக் குற்றம் சுமத்திவிட லாகாது. அந்தச் சந்தர்ப்பத்தில் அவர் எந்நிலையில் இருந்து கொண்டு காரியங்களை நடத்தினர் என்பதைக் கவனித்தால் அவர் மீது பெருங் குற்றங்கூற எது விராது. அவர், அப்போது தாம் கம்பெனியின் தள கர்த்தர் என்றும், அரசாங்கத்துக்கும் தமக்கும் ஒரு விதச் சம்பந்தமும் இல்லை யென்றும் கருதி யிருந்தார்; கம்பெனியார் எழுத்து மூலமாக இல்லாவிட்டாலும்

பேச்சு மூலமாகவேனும் தங்களுடைய உத்தியோகஸ்தர்கள் இந்திய நாட்டு அரசர்களிடமிருந்து பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளலாம் என்று தெரிவித்திருந்தார்கள். இக்காரணங்களாலேயே அவர் நவாபிடமிருந்து பணம் வாங்கினர். மேலும், நடந்த விஷயங்களை அவர் கம்பெனியின் நிர்வாகிகளுக்கு வெளிப்படையாகச் சொல்லாமல் இருந்தாலும், அவர்களுடைய உத்தரவு பெற்றுக் காரியங்களைச் செய்யாதிருந்தாலும், நவாபிடம் பணம் பெற்ற விஷயத்தில் அவர் கௌரவமாகவே நடந்துகொண்டிருக்கிறார். அவர் நவாபிடமிருந்து பணத்தைப் பெற்றுக்கொண்டது தவறு என்று எண்ணினாலும் அவர் அந்நிலையில் கொஞ்சமாக எடுத்துக்கொண்டதற்காக நாம் அவரைக் கொண்டாட வேண்டும். அவர் அதிகமாய் எற்றுக்கொள்ளாமல் மூன்று லட்சம் பவுனை மாத்திரம் எற்றுக்கொண்டார். அவர் நினைத்திருந்தால் அத்தொகையைவிட நான்கு மடங்கு அதிகமாகவுங்கூட எடுத்துக்கொண்டிருக்கலாம். இத்தகைய அவரைப் பேராசைக்காரர் என்று இங்கிலாந்திலுள்ளவர் கூறியது பொருத்தமற்றதாகும். அங்ஙனம் கூறியவர்கள் அந்தக் கஜானாவில் அப்பொழுது இருந்திருந்தால் எவ்வளவோ பணத்தைக் கைப்பற்றியிருப்பார்கள். கிளைவோ அந்நிலையில் பேராசையின்றிக் காரியங்களைச் செய்திருக்கிறார். அதற்காக நாம் அவரைக் கொண்டாடவே வேண்டும்.

மேற் கூறியபடி ஆங்கிலேயருடைய உதவியால் நவாபான மீர்ஜாபர், எப்படிப்பட்டவரெனில், சிறுவரல்லர்; சற்று முதிர்ந்த வயதுடையவரே; ஸுராஜ-வுட்-டவுலாவைப்போல் இராஜ குடும்பத்திற் பிறந்தவருமல்

லர்; ஆயினும் அவர் தமக்கு முன்னிருந்த ஸுராஜ-வுட்-டவுலாவைப்போல் நீதி கெட்ட துன்மார்க்கரல்லர்; ஆனால் நவாபு பதவிக்குத் தக்க புத்தி சாதுரியங்களும், மற்ற இராஜ அம்சங்களும் அவரிடம் இல்லை. இக்காரணங்களால் அவர் மேலும் ஆங்கிலேயருடைய உதவி பெற்றே அரசாள வேண்டியவரா யிருந்தார். அவருக்குப் பின் பட்டத்துக்கு வரத்தக்க அவருடைய குமாராகிய மீரான் என்பவரோ, ஸுராஜ-வுட்-டவுலாவைப் போலக் கெட்ட சுபாவமுடையவரா யிருந்தார். இத்தகைய புதிய நவாப் தோன்றி அரசாட்சியில் ஒரு மாறுதல் எற்பட்டதால் ஜனங்களின் மனதில் அதிருப்தியும், குழப்பமும் எற்பட்டன. அநேக தளகர்த்தர்களும் இந்தப் புதிய நவாபுக்கு விரோதமாகக் கிளம்பிக் கிளர்ச்சி செய்தார்கள். அத்தகைய சந்தர்ப்பத்தில், முன்னே மொகலாய சக்கரவர்த்திகளுக்கு அடக்கமாயிருந்து, அவர்கள் செல்வாக்குக் குறைந்தபோது, சுதந்தரம் பெற்ற நவாபுகளில் ஒருவராகிய அயோத்தியாபுரியை ஆண்டுவந்த ஷுஜா-வுட்-டவுலா (Suja-ud-daulah) என்பவர் வங்காளத்தின்மீது படையெடுத்து வந்தார். இந்நிலையில், கிளைவ் ஒருவரே வங்காள அரசாங்கத்தைக் காப்பாற்றக் கூடியவராயிருந்தார். அச்சமயத்தில், கிளைவ் வெற்றியடைந்த பிளாஸி யுத்தத்தைப்பற்றிய சங்கதிகள் இங்கிலாந்திலுள்ள ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் நிர்வாகிகளுக்கு எட்டுமுன் இங்கிலாந்தை விட்டுப் புறப்பட்ட கப்பல் ஒன்று, கல்கத்தா துறைமுகம் வந்து சேர்ந்தது. அக்கப்பல் மூலம் இந்தியாவிலிருந்த ஆங்கிலேய ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருக்கு இங்கிலாந்திலுள்ள ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் நிர்வாகிகளால் எழுதப்பட்ட கட்டளை ஒன்று

கிடைத்தது. அதில் வங்காளத்தில் ஆங்கிலேயருக்குள்ள உரிமைகளைப் பற்றிப் புதிய சில ஏற்பாடுகளும், அவற்றை நடத்தவேண்டிய கிரமங்களும், நடத்துதற்குரிய பொறுப்பாளிகளின் பெயர்களும் குறிப்பிடப் பட்டிருந்தன. அந்த ஏற்பாடுகளில் கிளைவிற்கு ஒரு விதப் பொறுப்பும் குறிக்கப்படவில்லை. ஆனாலும் இங்கிலாந்திலுள்ள ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் நிர்வாகிகளால், மேற்கூறியபடி பொறுக்கியெடுக்கப்பட்டவர்கள் அனைவரும், அந்தப் புதிய ஏற்பாடுகளின்படி தங்களுக்குக் கிடைத்த பதவிகளை ஏற்றுக்கொள்ள மறுத்து, கிளைவிற்குச் சகல அதிகாரமுங் கொடுத்து அவர் சொற்படி நடப்பதாக வாக்குறுதி செய்தார்கள். அதற்கு, கிளைவ் இசைந்தார். அப்படியிருக்குஞ் சந்தர்ப்பத்தில் பிளாஸி யுத்தத்தைப்பற்றிய சங்கதிகளும், கிளைவினுடைய வீரச்செயல்களும் இங்கிலாந்திலுள்ள ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் நிர்வாகிகளுக்கு எட்டின. எட்டவே அவர்கள், கிளைவை வங்காளத்தின் கவர்னராக நியமித்து அவருடைய வீரதீரச் செயல்களைப் புகழ்ந்து அவருக்கு வாழ்த்துக் கடிதங்களும், வெகுமதிகளும் அனுப்பினார்கள். இச் சந்தர்ப்பத்தில் அவருக்கு ஏற்பட்டிருந்த அதிகாரம், டியூப்ளேவுக்குத் தென்னிந்தியாவில் ஏற்பட்டிருந்த அதிகாரத்தைக் காட்டிலும் அதிகரித்திருந்தது. அத்தகைய உன்னத நிலை அவருக்கு வரவே, மீர்ஜாபர், ஒரு எஜமானனிடத்தில், ஒரு வேலைக்காரன், எவ்வாறு அச்சத்துடனும், மரியாதையுடனும் நடந்துகொள்வானோ அவ்வாறே கிளைவினிடத்தில் நடந்துகொண்டார்.

ஒரு சந்தர்ப்பத்தில் உயர்ந்த அந்தஸ்துள்ளவனும்,

மீர்ஜாபருடைய பழைய நண்பனுமாகிய ஒரு சிற்றா சனைச் சேர்ந்தவர்களும், ஈஸ்ட் இந்தியா கம்பெனியைச் சேர்ந்த சில சிப்பாய்களும் தங்களுக்குள் சண்டை யிட்டுக்கொண்டார்கள். அதைக்கண்ட மீர்ஜாபர் அச் சிற்றாசனைக் கூப்பிட்டு, அவனை நோக்கி, 'நீ இச்சண் டையை ஒடுக்காம லிருக்கிறாயே! கர்னல் கிளைவ் இன்ன தன்மை யுடையவரென்பதையும், அவரைக் கடவுள் இன்ன நிலையில் வைத்திருக்கிறார் என்பதையும் நீ அறி யாயோ?' என்று கேட்டார். அதற்கு அந்தச் சிற்றாசன், விகடமாய்ப் பேசக்கூடியவனா யிருந்தமையாலும், மீர் ஜாபரின் பழைய நண்பனா யிருந்தமையாலும் மீர்ஜாப ரைப் பார்த்து, 'நான் காலையில் எழுந்தவுடன் கிளைவி னுடைய ஆண்குதிரைக்கு மூன்று முறை வந்தனங்களைச் செலுத்தத் தவறமாட்டேன்; அப்படி அவருடைய குதிரைக்கும் வந்தனம் செலுத்துகின்ற யான் அந்தக் கர்னலுக்கு அவமதிப்புண்டாகும்படி செய்வேனா?' என்று கூறினான். இதைக் கொண்டே கிளைவின் செல் வாக்கை யுணர்ந்துகொள்ளலாம். இவ்வாறு தமக்கு மதிப்புண்டாகும்படி ஐரோப்பியர்களையும் இந்தியர்களை யும் கிளைவ் அடக்கியாண்டபடியால், அவர்கள் அவ ருடைய அதிகாரத்துக் குட்பட்டிருந்தார்கள். அப் போது மீர்ஜாபர் தங்களுக்குக் கொடுத்த வாக்குறுதி களை நிறைவேற்றும்படி செய்யக்கூடியவர் கிளைவைத் தவிர வேறெவரும் இல்லையென்று ஆங்கிலேயர்கள் எண்ணி வந்தார்கள். மீர்ஜாபரும் அவர் ஒருவரால் தான் தாமும் தம்முடைய சந்ததியாரும் கஷ்டமின்றி ஆட் சியை நடத்திக்கொண்டு போதல் கூடுமென்று எண் ணினார்.

## அத்தியாயம் 16.

### ஆந்திர நாட்டைக் கைப்பற்றல்—

### ஷா ஆலம் படை யெடுப்பும் ஓட்டமும்.

கிளேவ் தமக்குக் கிடைத்த அதிகாரத்தைத் தம் தேசத்துக்கு அநுகூலமுண்டாக்கிக் கொள்ளும் வகையில் உபயோகித்தார். அப்போது கர்நாடகத்துக்கு வடக்கேயுள்ள பிரதேசமாகிய ஆந்திர நாட்டில் பிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் அதிகமா யிருந்தது. ஆனதால் அவர்களை அவ் வாதிக்கத்தினின்று ஒழித்து விடுவது இன்றியமையாததா யிருந்தது; அதன் பொருட்டுக் கிளேவ், அங்கே ஒரு படையை அனுப்பினர்; அந்தப் படைக்கு, போர்ட் (Forde) என்பவர் தளகர்த்தா யிருந்தார். அவரிடத்தில் இராணுவ தளகர்த்தனுக்கு இருக்கவேண்டிய அம்சங்கள் எல்லாம் ஒருங்கே அமைந்திருந்தன; அத்தகைய அவருடைய நிலைமையைக் கிளேவ் கண்டார். மேற்கூறிய படை வீரர்கள் அந்த ஆந்திரப் பிரதேசங்களை ஜயித்தார்கள். இப்போது கஞ்சம், விசாகபட்டணம், கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர் என்று வழங்கப் பெற்றுவரும் ஜில்லாக்களே இவர்கள் கைப்பற்றியவை. இவைகளுக்கு "சர்க்கார் பிரதேசம்" என்றும் பெயர்.

வங்காளத்தைச் சேர்ந்த படைகளில் பெரும் பாகம் மேற்கூறியபடி சர்க்கார் பிரதேசத்தில் சண்டை போட்டுக்கொண்டிருக்கையில், வங்காளத்தின் மேற்கெல்லையில், புதியதும், அஞ்சத்தக்கதுமான ஓர் ஆபத்து எற்பட்டது. அதாவது டில்லியிலிருந்த இரண்

டாவது அலாம்கிர் (Alamgir II) என்னும் மொகலாய சக்ரவர்த்தியை அவருடைய மந்திரியான காஷி - உதீன் (Ghazi-uddin) என்பார் சிறைப்படுத்தி வைத்திருந்தார். அந்த மொகலாய சக்ரவர்த்தியின் புத்திராகிய ஷா ஆலம் (Shah Alam) என்பார் தம்முடைய தகப்பனாரின் அரண்மனையிலிருந்து தப்பித்துக் கொண்டு ஓடி விட்டார். அவரைச்சார்ந்த சில ஜனங்கள் அவர் மீது அபிமானமுடையவர்களா யிருந்தார்கள். அயோத்தியின் நவாபான சூஜா-வுட்-டவுலாவும், இன்னுஞ் சில சிற்றரசர்களும் அவருக்குத் துணைபுரிய முன் வந்தார்கள். அதன்மேல் ஷா ஆலம், அதுதான் தக்க சமயமென்று கருதி மீர்ஜாபருக்கும் ஆங்கிலேயருக்கும் விரோதமாயிருந்தவர்களையெல்லாம் தம்முடன் சேர்த்துக் கொண்டார். அவர்களின் தொகை நாற்பதினாயிரம். அவர்கள் மஹாராஷ்டிர ஜாதியையும், ரோஹிலா ஜாதியையும், ஜாட் ஜாதியையும், ஆப்கானிய ஜாதியையும் சேர்ந்தவர்கள். அதன்மேல், ஷா ஆலம் மீர்ஜாபரின்மீது படையெடுத்துச் சென்று அவரை ஓட்டிவிட்டு வங்காளம், ஒரிஸ்ஸா, பீஹார் என்னும் மாகாணங்களைக் கைப்பற்ற எண்ணினார்.

அச்சங்கதியைக் கேட்ட மீர்ஜாபர் அதிகமான பயங்கொண்டு ஷா ஆலத்திற்கு ஏராளமான பணத்தைக் கொடுத்து அவரைத் தம் பக்கத்தில் சேர்த்துக் கொள்வதே தகுதியென்று கருதினார். அவருக்கு முன் வங்காளத்தை ஆண்டுவந்த நவாபுகள் அனைவரும், அவரைப்போலவே காரியம் நடத்திவந்தார்களாகையால், அவர்கொண்ட கருத்து அவர்களுடைய கருத்தை ஒட்டியே யிருந்தது. அதைக் கேள்விப்

பட்ட கிளைவ் மீர்ஜாபருக்கெழுதிய கடிதமொன்றில் "நீர், ஷா ஆலமுக்குப் பணங்கொடுத்தால் அதை யுணர்ந்து அயோத்தி நவாபும், மஹாராஷ்டிரர்களும், மற்றுமுள்ளவர்களும் உம்மைச் சூழ்ந்துகொண்டு பணத்திற்காக நெருக்கடி செய்து விடுவார்கள்; அதனால் உமக்கு அமைதி என்பது உம்முடைய வாழ்க்கையிலேயே ஏற்படாமல் போய்விடும்; அத்துடன் உம்முடைய கஜானாவில் ஒரு பைசாகூட இராது; ஆகவே நீர் எங்களுடைய உதவியையும் உம்மிடத்தில் இருக்கும் இராணுவ வீரர்களின் உதவியையும் கொண்டு, மேற்கூறிய காரியத்தைச் செய்யாதிருக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்; அவசரப்பட்டுக் காரியங்களைச் செய்துவிடாதீர்" என்று எழுதி, அதை அனுப்பினார். அதே மாதிரி, தம்மால் பெரிதும் கௌரவிக்கப்பட்டு வந்த பாடலிபுர கவர்னரான, ராம் நாராயன் என்பாருக்கும் அவர், "ஷா ஆலமுடன் உடன்படிக்கை செய்துகொள்ளாதீர்; கடைசிவரை ஒரு கை பார்த்து விடும்; ஆங்கிலேயர்கள் உமக்கு வேண்டிய உதவியைச் செய்யக் காத்திருக்கிறார்கள்; அவர்கள் ஒரு தடவையில் வாக்குறுதி செய்தால் அதிலிருந்து பிறழவே மாட்டார்கள் என்பதை நீர் அறிந்துகொள்ளும்; பயங்கொண்டு தைரியத்தை விடாதேயும்" என்று கடிதம் எழுதி அனுப்பினார்.

பின்னர் ஷா ஆலம் பாடலிபுரத்தை முற்றுகை செய்தார். பாடலிபுரம் அவருடைய கையில் சிக்கக் கூடிய நிலையிலிருந்தது. அந்நிலையில் கிளைவ் நானூற்றைம்பது ஐரோப்பிய இராணுவ வீரர்களையும், இரண்டாயிரத்து ஐந்நூறு இந்தியச் சிப்பாய்களையும் கொண்ட

ஒரு படையைத் திரட்டிக்கொண்டு வேகமாய்ப் பாடலி புரம் வந்தடைந்தார். அதற்கு முன்னமே அவருடைய பேர் எங்கும் பிரகாசித்திருந்தமையால் அவரையும், அவருடைய படைவீரர்களையும் கண்ட பகையாளிகள் ஓட்டம் பிடித்தார்கள். ஆனால் ஷா ஆலமுடனிருந்து அவரிடம் பணம் பிடுங்கிக்கொண்டிருந்த சில பிரென்சுக்காரர்கள் மாத்திரம், 'ஒரு கை பார்த்துவிடலாம்' என்று அவருக்கு ஆலோசனை கூறினர்கள். ஆனால் பயன் ஒன்றும் எற்படவில்லை. கிளைவ் தம் வாக்குறுதியை நிறைவேற்றியவரானர்.

அதன்மேல் கிளைவ் வெற்றிச் சின்னங்களுடன் கல்கத்தாவில் உள்ள வில்லியம் கோட்டையை யடைந்தார். அதைக்கேட்ட மீர்ஜாபருக்கு அளவற்ற சந்தோஷம் ஏற்பட்டது. அச்சந்தோஷத்தினல், ஷா ஆலத்தின் படையெடுப்பினின்று தம்மைக் காப்பாற்றிய கிளைவுக்கு உயர்ந்த சன்மானத்தைக் கொடுக்க அவர் கருதினர். கல்கத்தாவுக்குத் தெற்கில் ஆங்கிலேயர்களுக்கு ஏராளமான நிலங்கள் இருந்தன. அந்நிலங்களுக்காக ஆங்கிலேய கம்பெனியார் நவாபுக்கு வருடமொன்றுக்கு முப்பதிஞயிரம் பவுன் வாடகையாகக் கொடுத்து வந்தார்கள். அத்தகைய வாடகை வருமானத்தைத் தரக்கூடிய அந்நிலங்களை, மீர்ஜாபர் கிளைவின் கௌரவத்திற்குத் தக்கபடி அவருக்குக் கொடுத்தார். அதனல் கம்பெனியார் அப்பகுதிக்குரிய முப்பதாயிரம் பவுன்களைக் கிளைவுக்கே கொடுத்தனர். மேற்கூறிய வெகுமதியை அவர் எற்றுக்கொண்டது முறையானதென்றே கருதுகிறோம்.

## அத்தியாயம் 17.

### மீர்ஜாபரும் டச்சுக்காரரும்—டச்சுக்காரர்களின் தோல்வி.

மீர்ஜாபர் ஆங்கிலேயரிடம் வைத்திருந்த நன்றியறிதல் நிலைத்ததாயில்லை. தம்மை நவாபாக நியமித்த ஆங்கிலேயர்கள், தங்களுக்கு இஷ்டமில்லாதபோது அப்பதவியினின்று நீக்கி விடுவார்கள் என்ற பயம் அவருக்கு ஏற்பட்டது. அதனல், அவர் ஆங்கிலேயர்களை எதிர்க்கும் சக்தியுடைய சிலரைத் துணைசேர்த்துக் கொள்ள விரும்பினர். சுதேசி வீரர்கள் ஆங்கிலேய வீரர்களை எதிர்க்கச் சக்தியற்றவர்கள் என்பதை அவர் அறிந்துகொண்டார். வங்காளத்தில் பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கமும் அடியோடு அழிந்துவிட்டது; கிழக்குச் சமுத்திரத்தை ஒட்டிய நாடுகளில் டச்சுக்காரரின் கீர்த்தி அதிகமாகப் பரவியிருந்தது. ஆனல், அவர்கள் செல்வாக்கு ஐரோப்பாவில் மிகவும் குறைந்திருந்தது. அது கீழ் நாடுகளுக்குத் தெரியாது. இக்காரணங்களால் மீர்ஜாபர் டச்சுக்காரரின் நேசம்பெறத் தீர்மானித்தார். அதன்மேல் மூர்ஷிதாபாத்துக்கும் சின்சூராவிலிருந்த டச்சுக்காரரின் வியாபார ஸ்தலத்துக்கும் இரகசியமாகக் கடிதப்போக்கு வரவுகள் நடந்துவந்தன. அப்படி நடந்துகொண் டிருக்கும்போது, வங்காளத்தில் ஆங்கிலேயர்களுடைய ஆதிக்கம் அதிகப்படாமல் இருக்கும்படி செய்வதற்காக ஒரு கடற் படையை இந்தியாவுக்கு அனுப்பவேண்டுமென்று சின்சூரா கவர்ன்மெண்டார், அவசரமாகக் கடிதமெழுதி ஜாவா அரசாங்கத்தாரை வேண்டிக்கொண்டனர். ஜாவாவி

விருந்த டச்சு அரசாங்கத்தார் தங்கள் ஆதிக்கத்தை இந்தியாவில் அதிகப்படுத்த எண்ணியிருந்தபடியாலும், நவாபிடமிருந்து சொத்துக்களை அடைந்து தனவந்தர்கள் ஆகிவிடவேண்டுமென்று விரும்பி யிருந்தபடியாலும் சின்சூராவிலிருந்து கடிதம் வந்தவுடன் பலவகையிலும் சிறப்புற்ற கப்பற் படைகளைத் தயாரித்தனர். பின்னர், அவர்களால் அப்படைகள் இந்தியாவுக்கனுப்பப்பட்டன. அவ்வாறு ஜாவாவிலிருந்து அவர்களால் அனுப்பப்பட்ட படைகளடங்கிய எழு கப்பல்கள் புறப்பட்டுத் திடீரென ஹூக்ளி நதிக்கரையை அடைந்தன. அக்கப்பல்களில் ஆயிரத்தைந்நூறு இராணுவ வீரர்கள் இருந்தார்கள். அவர்களில் ஏறக்குறையப் பாதிப்பேர் டச்சுக்காரர்கள். வங்காளத்திலிருந்த பிரிட்டிஷ் படையின் பெரும்பகுதி சர்க்கார் பிரதேசத்திற்குச் சென்றிருந்தபடியால், டச்சுக்காரர் வந்த சமயம் கிளைவினிடத்திலிருந்த போர்வீரர்கள் டச்சுப் போர்வீரர்களைக் காட்டிலும் குறைந்தவர்களாகவே இருந்தார்கள். மீர்ஜாபர் அந்தரங்கமாய் டச்சுக்காரர்களுக்கு உதவி புரிய எண்ணியிருந்த விஷயம் கிளைவுக்குத் தெரியும். ஆனாலும் அப்போது பிரென்சுக்காரர்களுடன் தங்களுக்குச் சண்டை எற்பட்டிருந்ததால் டச்சுக்காரர்களுடன் சண்டைபோடுவதை இங்கிலாந்திலுள்ளவர்கள் ஆதரிக்க மாட்டார்கள் என்றும், டச்சுக்காரர்களோடு ஆங்கிலேயர்கள் நேசப்பான்மையுடையவர்களாயிருந்ததால் தாம் அவர்களோடு சண்டைபோட்டால், தம் அதிகாரிகள் ஒருவேளை தம்மைத் தண்டிப்பார்களென்றும் அவர் எண்ணிச் சண்டையில் தலையிடலாகாதெனத் தீர்மானித்தார். மேலும், சமீபத்தில் தான், அவர் டச்சுக் கிழக்கிந்தியா கம்பெனியாரின் மூலமாகத் தம்முடைய சொத்துக்

களில் பெரும்பாகத்தை ஐரோப்பாவுக்கு அனுப்பினர்; அந்த உறவு கருதியும் அவர்களுடன் சண்டை போட்டுக்கொள்ள அவர் பிரியப்படவில்லை. ஆயினும் டச்சுக் கப்பல்களைத் தடுக்காமல் சின்சூராவுக்குச் செல்ல விட்டு விட்டால், மீர்ஜாபர் அந்த டச்சுக்காரர்களுடன் கலந்து கொள்வார் என்றும், அதனால் ஆங்கிலேயர்களின் வியாபார ஆதிக்கம் குறைந்து விடுமென்றும், ஆகையால் அவ்வாறு நேரதபடி டச்சுக்காரரைத் தடுத்துவிட வேண்டுமென்றும் அவர் எண்ணலானார். அந்த எண்ணத்தை மற்றவர்களுக்கும் தெரிவித்தார். அவர்களும் அவருடைய ஏற்பாட்டைச் சரியென்று ஒப்புக்கொண்டார்கள். அவர்களால், டச்சுக்காரரைத் தடுக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன; அப்போது கர்னல் போர்ட் என்பவர்தான் கிளைவினுடைய படையின் பெரும்பகுதிக்குத் தளகர்த்தாயிருந்து காரியங்களைச் செய்தார். டச்சுக்காரர் ஹூக்ளியை விட்டுச் சின்சூராவுக்குச் செல்லப் பிரயாணப்பட்டார்கள். அச்சந்தர்ப்பத்தில் அவர்களைக் கடலிலும் தரையிலும் ஆங்கிலேயர் வளைத்துக்கொண்டார்கள். டச்சுக்காரர்களின் படை, ஆங்கிலேயர்களுடைய படையைவிட அதிகமாயிருந்தும் அவர்கள் தோல்வியையே அடைந்தார்கள். அவர்களுடைய கப்பல்கள் ஆங்கிலேயர்களால் பிடித்துக்கொள்ளப்பட்டன. டச்சு இராணுவ வீரர்கள் ஓட்டம் பிடித்தார்கள். மேலும் அவர்களில் பெரும்பாலோர் கொல்லப்பட்டார்கள்; சிறுபான்மையோர் சிறைப்படுத்தப்பட்டார்கள். வெற்றியடைந்த ஆங்கிலேயர்கள் சின்சூராவுக்குச் சென்று அதைக் கைப்பற்றிக்கொண்டார்கள். அவ்விடத்திலிருந்த டச்சுக்காரர்கள் தங்களுடைய முயற்சிகள் பலிக்காததைக்கண்டு

கிளைவ் சொன்ன சில நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு கோட்டையைப் பலப்படுத்துவதற்கான காரியங்களைச் செய்வதில்லையென்றும், புதிய கொத்தளங்களைக் கட்டுவதில்லையென்றும், வர்த்தகசாலையின் பாதுகாப்புக்கு வேண்டிய துருப்புகளுக்குமேல் வைத்திருப்பதில்லையென்றும் வாக்குக் கொடுத்தார்கள். மேற்கூறிய நிபந்தனைகளுக்கு மாறாக அவர்கள் நடந்தால் வங்காளத்தினின்று அடியோடு ஓட்டிவிடப்படுவார்கள் என்ற நிபந்தனை கிளைவால் ஏற்படுத்தப்பட்டது.

# அத்தியாயம் 18.

## கிளைவ் இரண்டாம் முறை இங்கிலாந்து செல்லல்—பார்லிமெண்டில் அங்கத்தினராதல்.

சின்சூராவில் அடைந்த வெற்றிக்குப் பின் மூன்று மாதங்கள் கழித்துக் கிளைவ் இங்கிலாந்துக்குப் பிரயாண மானார். இங்கிலாந்து போய்ச் சேர்ந்தவுடன் அவருக்கு ஆங்கில அரசாட்சியாளரால் கௌரவப்பட்டங்களும், வெகுமதிகளும் வழங்கப்பட்டன. அவருடைய வயதையும், அவர் இராணுவத்தில் வகித்திருந்த பதவியையும், அவருக்கு ஆரம்பத்தில் ஜனசமூகத்தில் இருந்த ஒரு மதிப்பையும் கவனிக்கும்போது, இவ்வாறு அவருக்கு வழங்கப்பட்ட மரியாதைகளும், சன்மானங்களும் தகுதியானவைகளே யென்பது விளங்கும். அவருக்கு ஐர்லாந்து நாட்டுக்குரிய லார்டுப் பட்டம் கொடுக்கப்பட்டது; ஆங்கில நாட்டு லார்டுப் பட்டமும் வழங்கப்படுமென்று அவருக்குச் சொல்லப்பட்டது. இங்கிலாந்தின் அரசாயிருந்த மூன்றாவது ஜார்ஜ் மன்னரும் அவரை அன்புடன் வரவேற்று உபசரித்தார். மந்திரிகளும் அவ்வாறே உபசரித்தார்கள். காமன்ஸ் சபையிலும் (House of Commons) பொது ஜனங்களிடத்திலும் அதிகச் செல்வாக்கைப் பெற்றிருந்த வில்லியம் பிட் (William Pitt) என்பவரும் அவரை ஆதரித்து உபசரித்தார். அவர், முன்னொரு காலத்தில் கிளைவை மிக்க திறமை வாய்ந்த தளகர்த்தர் என்றும், குமாஸ்தா உத்தியோகத்தில் பழகியவரானலும் பிரஷ்யா தேசத்து அரசரான பிரடரிக் தி கிரேட் (Frederick the Great) என்பாரும் கொண்டாடத்தக்க இராணுவ

சாகசத்தைப் பெற்றவரென்றும் கூறியிருக்கின்றார். அவ்வாறு அவர் காமன்ஸ் சபையில் பேசியபோது, அக்காலத்தில் இப்பொழுதுபோல் பிரசங்கங்களைச் சுருக்கெழுத்தில் எடுத்துப் பத்திரிகைகளில் பிரசுரிப்பவர்கள் இல்லை. ஆனாலும் அவர் கிளைவைப் பற்றிக் கூறிய அந்த மொழிகள் சிலர் மூலமாக வங்காளத்திலிருந்த கிளைவினுடைய காதிற்கு எட்டின. அதைக் கேட்டு அவர் சந்தோஷமும் திருப்தியும் கொள்ளலாயினர். உல்ப் (Wolfe) என்ற ஆங்கில தளகர்த்தரின் மரணத்துக்குப் பின், ஆங்கிலேயர்கள் பெருமை யடைவதற்குத் தக்க வல்லமையைப் பெற்றிருந்த தளகர்த்தர் கிளைவ் ஒருவரே. அக்காரணம் பற்றியே இங்கிலாந்திலுள்ள ஜனங்கள் வீரத்தன்மையிலும், சாமர்த்தியத்திலும் ஜர்மனி தேசத்து வீரர்களோடு ஒப்பிடக்கூடிய கிளைவை, மேற்கூறியபடி பெருமையோடும், குதூகலத்தோடும் வரவேற்றார்கள்.

கிளைவுக்கு இங்கிலாந்தில் ஏராளமான சொத்துக்கள் இருந்தன. அச்சொத்துக்களால் அவர் இங்கிலாந்திலிருந்த மிகுந்த பணக்காரர்களுள் ஒருவராயிருந்தார். அவர் இந்தியாவிலிருக்கும்போது டச்சு கிழக்கிந்தியா கம்பெனியின் மூலமாக லட்சத்து எண்பதினாயிரம் பவுனையும், பிரிட்டிஷ் ஈஸ்ட் இந்தியா கம்பெனி மூலமாக நாற்பதினாயிரம் பவுனையும் இங்கிலாந்துக்கு அனுப்பினர் என்பதற்குத் தக்க ஆதாரங்கள் இருக்கின்றன. இதர வகைகளிலும் அவர் அதிகப் பணம் அனுப்பியிருக்கிறார். மிகுந்த தொகைகள் கொடுத்து நகைகளையும் வாங்கினர்; சென்னை இராஜதானியில் மாத்திரம் இருபத்தையாயிரம் பவுன் பெறுமான வைரக் கற்களை

வாங்கினர் ; கையிலும் ஏராளமான தொகையை வைத் திருந்தார். அத்துடன்கூட அவருக்கு மீர்ஜாபால் கொடுக்கப்பட்ட ஜாகிர் ஒன்றும் இருந்தது. அதி லிருந்து ஆண்டொன்றுக்கு இருபத்தேழாயிரம் பவுன் கள் கிடைத்தன. சர் ஜான் மால்கம் என்பவர், அவ ருக்கு வருஷந்தோறும் நாற்பதினுயிரம் பவுனுக்கு மேலான வரும்படி கிடைத்துக்கொண்டிருந்தது என்று கூறியிருக்கிறார். அது வாஸ்தவமே. மூன்ருவது ஜார்ஜ் மன்னர் சிம்மாசனம் ஏறிய அந்தக்காலத்தில் நாற்பதி னுயிரம் பவுன் கிடைத்தது, இக்காலத்தில் லட்சம் பவுன் கிடைப்பதற்குச் சமமாகும். எந்த ஆங்கிலேய னும் கிளைவைப்போல் ஆரம்பத்தில் கையில் ஒன்றுமில் லாமலிருந்து முப்பத்திரண்டாவது வயதில் இவ்வாறு ஏராளமான சொத்தைச் சம்பாதித்துக்கொண்டதில்லை.

கிளைவ், இவ்வாறு தமக்குக் கிடைத்த சொத்துக் களை நல்வழியிலேயே பயன்படுத்தினர்; பத்தாயிரம் பவுனைத் தம் சகோதரிகளுக்குக் கொடுத்தார். ஏழை நண்பர்களுக்கும், சுற்றத்தாருக்கும் அதற்கு மேற் பட்ட தொகையைச் செலவிட்டார். தம்முடைய பெற் ருேர்களுக்கு ஆண்டொன்றுக்கு எண்ணூறு பவுன் கொடுக்கும்படி தம்முடைய காரிய நிர்வாகஸ்தனுக்குக் கட்டளையிட்டார். தம்முடைய பெற்ருேர்கள் சவா ரிக்கு வண்டி வைத்துக்கொள்வதற்குத் தக்க ஏற்பாடு களைச் செய்தார். தம்முடைய கமாண்டரான லாரன்ஸ் என்பவருக்கு வரும்படி சொற்பமாயிருந்தபடியால் வருடமொன்றுக்கு ஐந்நூறு பவுன் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார். மேற்கூறிய வகைகளில் கிளைவ் பங்கிட்ட தொகைகளின் மொத்தம் ஐம்பதினுயிரம் பவுன் இருக்கும்.

இக்காரியங்களை யெல்லாம் கிளைவ் செய்துவிட்டுப் பார்லிமெண்டில் அங்கம் பெறுவதற்கான முயற்சிகளைச் செய்தார். அக்கருத்துக்கொண்டே ஏராளமான நிலங்களை வாங்கினார். 1761-ம் வருஷத்தில் நடைபெற்ற தேர்தலுக்குப் (Election) பின் அவர் காமன்ஸ் சபையில் அங்கம் பெற்று வீற்றிருக்கும் பாக்கியத்தை அடைந்தார். அவ்வாறடைந்தபின் ஒரு கக்ஷி அங்கத்தினர்களுக்குத் தலைவரானார். எனினும், ஆங்கிலேய அரசியல் விஷயங்களில் அவர் அதிகமாகத் தலையிட்டுக் கொள்ளவில்லை. முதலில் அவர் பாக்ஸ் (Fox) என்பவருடன் சேர்ந்திருந்தார். பின், பிட் என்பவரின் சாமர்த்தியங்களைக் கண்டு, அவர் பக்கம் சேர்ந்து உழைக்க ஆரம்பித்தார். கடைசியில் அவர் ஜார்ஜ் கிரன்வில் (George Grenville) என்பவருடன் சேர்ந்து காரியங்களை நடத்தினார். அவர் அங்ஙனம் உயர்ந்த பதவியில் இருந்தபடியால் அவருடைய தகப்பனாரும் ஜனசமூகத்தாரால் கொண்டாடப்பட்டார்.

# அத்தியாயம் 18. A.

## இந்திய அரசாங்கத்தின் நிலை—

## சலிவான் கிளைவ் சண்டை.

இங்கிலாந்து சென்றபின் கிளைவினுடைய எண்ணங்களெல்லாம், தாம் முன்னுக்கு வந்த இந்திய நாட்டின் நன்மையை நாடியவைகளாகவே இருந்தன. அக்காலத்தில் கம்பெனிக்கு இருந்த அதிகாரங்கள் அவ்வளவு ஒழுங்கானவைகளா யிருக்கவில்லை. அப்போது இந்திய விஷயங்களை மேற்பார்வையிடும், 'போர்டு ஆப் கண்ட்ரோல்' என்ற சபையுங் கிடையாது. அக்காலத்தில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் விஷயங்களைக் கவனித்து வந்த டைரெக்டர்கள், பெரும்பாலும் வியாபாரிகளாயும், அரசியல் ஞானம் இல்லாதவர்களாயும் இருந்தார்கள். ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் பங்குக்காரர்கள் தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக்கொண்டு போவதிலேயே கண்ணுங்கருத்துமா யிருந்தார்கள். பங்குக்காரர்களின் தொகையும் அதிகமா யிருந்தது. அதிகமான அதிகாரத்தையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். கம்பெனியில் ஒவ்வொரு ஐந்நூறு பவுன் பங்குக்கும் ஒரு ஓட்டு இருந்தது. அந்தப் பங்குக்காரர்களுடைய கூட்டங்கள் பெரியனவாயும், சண்டை யுண்டு பண்ணக் கூடியனவாயு மிருந்தன. அவர்கள் பேசிக்கொள்ளும் வார்த்தைகள் வரம்பு கடந்தவைகளா யிருந்தன. அவர்கள் எல்லாவிதத் தந்திரங்களையும், பொய்களையும் கையாண்டு வந்தார்கள். பொய்யான ஓட்டுகளும் அக்கூட்டங்களில் உண்டாக்கப்பட்டன. அப்போது, கிளைவ், கம்பெனிக் கூட்டத்தில் தாம் கொண்டு

வரும் பிரேரேபணைகளுக்கு உதவியா யிருக்கும்படி, தமக்கிணங்கி நடக்கக்கூடிய சிலர் பேரால் கம்பெனிக்கு இலட்சம் பவுன் கட்டி அவர்களுக்குப் பங்குகள் எடுத்து வைத்திருந்தார். மற்றவர்களும் இவ்வகைத் தந்திரங்களைச் செய்து வந்தார்கள். கிளைவ் ஒவ்வொரு கூட்டத்துக்கும் மேற்கூறியவர்களைத் தம்முடன் அழைத்துக்கொண்டுபோகத் தவறுவதே யில்லை. மற்ற வர்களும் அம்மாதிரியே தங்களுக்கு வேண்டியவர்களை அழைத்துச் செல்லும் வழக்கத்தைக் கொண்டிருந்தார் கள். ஆனல் அவர்கள் கிளைவைப்போல் அவ்வளவு அதிகமான பேர்களைத் தங்களுடன் சேர்த்துக்கொள்ள வில்லை.

அக்காலத்தில் ஆங்கிலேயர்கள், இந்தியா விஷயத் தில் விசேஷ சிரத்தையெடுத்துக்கொண்டவர்களா யிருந்தார்கள். ஏனெனில், அவர்கள் எல்லோருக்கும் அளவுக்குமீறிய பணத்தைச் சம்பாதித்துக்கொண்டு போவதற்கு இந்தியா அநுகூலமாயிருந்தது. அக்காலத் தில் இங்கிலாந்திலிருந்த ஈஸ்ட் இந்திய கம்பெனியைச் சேர்ந்த தலைவர்களுடைய செயல்களை ஆதரித்துப்பேசி யவர்களுக்குக் கம்பெனியில் உயர்ந்த உத்தியோகங்கள் கொடுக்கப்பட்டு வந்தன. அத்தகைய உத்தியோகங் களைப் பெற்றவர்கள் இந்தியாவுக்கு வந்த மூன்று அல் லது நான்கு வருட காலத்திற்குள் கிளைவைப்போல் பெரிய பணக்காரர்களானர்கள். கர்னலாய் இருந்த கிளைவ் ஒரு தினத்தில் எர்ல் ஆவ் பாத் (Earl of Bath), மார்க்விஸ் ஆவ் ராக்கிங்ஹாம் (Marquis of Rocking- ham) ஆகிய இவர்களுடைய ஜாகீர்களை யொத்த ஒரு ஜாகிரை மீர்ஜாபரிடம் இனமாகப் பெற்றுவிட்டார் என்

பதையும், பிரிடிஷ் உத்தியோகஸ்தன் ஒருவன் வாயைத் திறந்து கேட்ட மாத்திரத்தில் இந்தியா வானது மரியாதைக்காகப் பத்தாயிரம் அல்லது இருபது ஆயிரம் பவுன் கொடுக்கக்கூடியது என்பதையும் ஆங்கிலேய மக்கள் பலரும் கேள்விப்பட்டுத் தாங்களும் இந்தியாவிற்குச் சென்று அவ்வாறே அதிசீக்கிரத்தில் பணக்காரர்களாகிவிட வேண்டுமென்று எண்ணங் கொண்டார்கள்.

அப்போது, ஈஸ்ட் இந்தியா கம்பெனியைச் சேர்ந்த டைரெக்டர்களில் சல்லிவான் (Sullivan) என்ற ஒருவர் இருந்தார். அவர் அதிகமான அதிகாரத்தைக் கொண்டவராயும், திறமை மிக்கவராயும், மேலும் மேலும் விருத்தி யடைய வேண்டுமென்ற எண்ணங்கொண்டவராயும் இருந்தார். அவருக்குக் கிளைவின்மேல் பொறாமை எற்பட்டிருந்தது. கம்பெனியின் டைரெக்டர்களின் கட்டளைகளைக் கிளைவ் வங்காள கவர்னராய் இருக்கையில் அலக்ஷியம் செய்தார். அதை அவர் மறக்காமல் மனதில் வைத்துக் கிளைவுடன் பகைமை கொண்டிருந்தார். கிளைவ் இங்கிலாந்துக்குப் போனவுடன் இருவருக்கும் மேலுக்கு உறவு எற்பட்டது. ஆனாலும் பழைய விரோதம் மாத்திரம் அவர்கள் மனத்தைவிட் டகலவில்லை. அக்காலத்தில் கம்பெனிக்கு 'டைரெக்டர்கள்' ஆண்டுதோறும் தெரிந்தெடுக்கப்பட்டு வந்தார்கள். 1763-ம் வருஷத்தில் அது சம்பந்தமாக நடந்த தேர்ந்தெடுத்ததில் கிளைவ், டைரெக்டர்களில், சல்லிவானுடைய பலமான கட்சியின் ஆதிக்கத்தை ஒடுக்கிவிடப் பெருமுயற்சி செய்தார். ஆனால் சல்லிவானே இறுதியில் வெற்றியடைந்

தார். அதன்மேல் சல்லிவானுக்குக் கிளேவின்மேல் விரோதம் முன்னிருந்ததைக் காட்டிலும் அதிகரித்தது. அப்படியிருக்கும்போது, கிளேவுக்கு மீர்ஜாபர் கொடுத்த ஜாகிரைப்பற்றி ஒரு நடவடிக்கை நடந்தது. அப்போது, அந்த ஜாகிரின் வருமானத்தைக் கிளேவ் பெற்றுக்கொள்வது நியாயமானதென்று நியாயவாதிகள் தீர்மானித்தார்கள். அதைக் கம்பெனியாரும் ஆதரித்து வந்தார்கள். ஆனல் டைரெக்டர்கள் அந்த வரும்படிக்கும் கிளேவுக்கும் ஒருவிதமான சம்பந்தமும் இல்லையென்று அதை அவரிடமிருந்து பிடுங்கிக் கம்பெனியில் சேர்த்துக்கொள்ளத் தீர்மானித்தார்கள். அதன்மேல் அவர் சான்சரி கோர்ட்டில் (Chancery Court) கம்பெனியின் டைரெக்டர்கள் மீது வழக்குத் தொடுத்தார்.

## அத்தியாயம் 19.

### வங்காளத்தின் சீர்கேடான ஆட்சிமுறை—

### கிளைவை இந்தியாவுக்கு மூன்று முறை அனுப்புதல்.

இங்கிலாந்தில் கிளைவ் விஷயங்கள் மேற்கூறிய வாறு நடந்துகொண் டிருக்கும்போது, வங்காளத்தி னின்று வந்த ஒவ்வொரு கப்பலிலும் வங்காளத்தின் ஆட்சி சீர்கேடான நிலையிலிருப்பதாகச் சமாசாரம் வந்துகொண் டிருந்தது. அப்போது வங்காளத்தின் உள்நாட்டு இராஜ்ய விஷயங்கள் மிகவும் சீர்கேடான நிலையை அடைந்திருந்தன. கம்பெனியின் நிர்வாகி கள் ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பாலுள்ள இங்கி லாந்தில் இருந்ததாலும், இந்தியாவிலிருந்து இங்கிலாந் துக்கு அனுப்பும் சமாசாரத்திற்கு அங்கிருந்து பதில் வரச் சுமார் ஒன்றரை வருஷகாலம் பிடிக்கக்கூடியதா யிருந்ததாலும், இந்தியாவிலிருந்த மேற்படி கம்பெனி யின் உத்தியோகஸ்தர்கள் பணத்துக்கும் பிறவற்றிற் கும் ஆசைப்பட்டு நியாய விரோதமான காரியங்களைச் செய்யக் கூடியவர்களா யிருந்ததாலும் வங்காளத்தின் விஷயங்கள் மேற்கூறியபடி சீர்கேடான நிலையை அடைந்தன. கிளைவ் வங்காளத்தை விட்டுச் சென்ற பின் ஐந்து வருட காலம் இத்தகைய ஒழுங்கீனங்கள் நடந்துகொண்டிருந்தன. அவற்றைக் கவனித்து நீக் கிக் காரியங்களை ஒழுங்கான முறையில் நடத்தக் கூடிய வர்கள் அக்காலத்தில் அங்கே ஒருவருமில்லை. கம் பெனியின் உத்தியோகஸ்தர்கள் சீக்கிரத்தில் பணக் காரர்களாகிவிட வேண்டுமென்ற கருத்தைப் பூரண மாக மனதில் வைத்துக்கொண்டு பல கொடுமையான

காரியங்களைச் செய்து வந்தார்கள். அவர்கள் அக் காலத்தில் நவாபாயிருந்த மீர்ஜாபரை அப்பதவியி னின்று நீக்கி, அவருக்குப் பதிலாக அவருடைய மருமக ராகிய மீர் காசீம் (Mir Kasim) என்பவரை நியமித்தார் கள். அவர் காரியங்களை நடத்துவதில் திறமையும், மனவுறுதியுமுடையவர். வேறு யாரும் தம் குடிமக் களைத் துன்புறுத்துவதற்கு அவர் ஒப்பாத தன்மை யுடையவர். அவர் காலத்தில் கம்பெனியின் உத்தி யோகஸ்தர்கள் தனித்தனியாக வியாபாரஞ் செய்தார் கள். அவ்வாறு வியாபாரஞ் செய்துகொண்டு நவா புக்குச் சேரவேண்டிய வரியையும் கட்டாமல் இருந் தார்கள். இந்தியர்களும் ஆங்கிலக் கொடியைப் போட்டுக்கொண்டு நவாபுக்கு வரிகொடுக்காமல் அவ ருடைய இராஜ்ய எல்லைக்குள் வியாபாரஞ்செய்து வந்தார்கள். அதனால் நவாபின் வருமானத்தில் குறைவு ஏற்பட்டது. அவருடைய உத்தியோகஸ் தர்கள் ஆங்கிலேயர்களால் அவமதிக்கப்பட்டு வந்த னர். இத்தகைய காரணங்களினால் நவாபுக்கும் கம் பெனி உத்தியோகஸ்தர்களுக்கும் மனஸ்தாபங்கள் ஏற் பட்டன. அதன்மேல் கம்பெனியார் மீர்காசிம் என் பவரை நவாப் பதவியிலிருந்து நீக்கி மறுபடியும் மீர்ஜா பரையே நவாபாக நியமித்தார்கள். அதன்பின் மீர் காசிம் பாட்னா (Patna) என்னுமிடத்திற்குப் போய் அங்கே யிருந்த ஆங்கிலேயர்களை யெல்லாம் படுகொலை செய்துவிட்டு அயோத்திக்கு ஓடிவிட்டார். இக் கொடுஞ் செயலானது கல்கத்தா இருட்டறைச் சம் பவத்தைக் காட்டிலும் அதிக கோரமானது. மறுபடி யும் நவாப் பதவியை யடைந்த மீர்ஜாபர் தம்மை நவா பாக்கிய ஆங்கிலேயர்களுக்கு அப்போதும் ஏராளமான

திரவியங்களைக் கொடுத்தார். இப்படியே நவாபுகள் மாறிமாறி வரும்போதெல்லாம் திரவியச்சாலையி லிருக்கும் பணங்களை யெல்லாம் கம்பெனி உத்தியோகஸ்தர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துக்கொண்டே யிருந்தார்கள். இவ்வாறு மீர்ஜாபர் கம்பெனி உத்தியோகஸ்தர்களுக்குப் பணங்கொடுத்ததுமன்றித் தம்முடைய பிரஜைகளை ஆங்கிலேயர்கள் கஷ்டப் படுத்துவதற்கும் இடங்கொடுத்துவிட்டார். சொந்தத்தில் வியாபாரஞ் செய்து வந்த கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள், தங்கள் சாக்குகளை அதிக விலைகொடுத்து வாங்கும்படி இந்தியர்களை வற்புறுத்தினர்கள். இன்னும், அவர்கள் நீதிபதிகளையும், போலீசையும், அரசிறை இலாகாக்களையும் மதிக்காமல் இருந்தார்கள். தங்களுக்கு அனுகூலமான இந்தியர்களைத் தங்களுடன் சேர்த்துக்கொண்டு நாடு முழுமையிலும் துஷ்கிருத்தியங்களைச் செய்ய ஆரம்பித்தார்கள். அவர்களுடைய வேலைக்காரர்கள் அவர்களைப் போலவே அதிகாரத்தைச் செலுத்தினர்கள்; அந்தக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் கம்பெனிக்குரிய அதிகாரத்தைச் செலுத்தலானர்கள். இத்தகைய காரியங்களைச் செய்து வந்ததால் கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேய வர்த்தகர்கள் அதிகமான பணத்தைச் சேர்த்துவிட்டார்கள்; முந்நூறு லட்சம் இந்தியர்கள் மிகவும் தரித்திர நிலைமை அடைந்துவிட்டார்கள். அவர்கள் இதற்குமுன் தங்கள் அரசர்களால் சில கொடுமைகளுக் குட்பட்டிருந்தபோதிலும் இத்தகைய கொடுமையை எப்பொழுதும் அனுபவித்ததில்லை. ஸூராஜ-வுட்-டவுலாவின் கொடுங்கோன்மையைக் காட்டிலும் கம்பெனி உத்தியோகஸ்தர்களின் கொடுங்கோன்மை அதிகமா யிருந்தது. முற்காலத்தில் நவாபுகள் சரியான

படி ஆட்சியை நடத்தாவிட்டால் அவர்களை அப்பத வியினின்று நீக்கி வேறு நவாபுகளை இந்திய ஜனங்கள் ஏற்படுத்திக்கொள்வது வழக்கமா யிருந்தது. ஆனால், இப்போது கம்பெனியின் அரசாங்கத்தில் அவர்களால் அம்மாதிரி செய்யக்கூடவில்லை. கம்பெனி அரசாங்க மானது, 'துன்மார்க்கப் பேய்' களால் நடத்தப்படும் அரசாங்கமா யிருந்தது; அதனோடு வலிமையுடையதாயு மிருந்தது. ஆதலால், சாந்தமான வங்காளிகள் ஆங்கி லேயர்களை எதிர்க்கத் தைரிய மற்றவர்களாய்ப் பொறு மையுடன் எல்லாக் கஷ்டங்களையும் தாங்கிக்கொண் டிருந்தார்கள்; சில சந்தர்ப்பங்களில் ஆங்கிலேயர்கள் இருந்த இடங்களினின்றும் அவர்கள் ஓடிவிட்டார் கள். ஆங்கிலேயன் ஒருவன் வருகிறான் என்பதைக் கேள்விப்பட்டவுடன் கிராமவாசிகள் தங்கள் வாசஸ் தானங்களை விட்டு ஓடிக்கொண் டிருந்தார்கள்.

மேற்கூறியபடி வங்காளத்தில் அதிகாரம் செலுத்தி வந்த ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் உத்தியோகஸ்தர்க ளாகிய ஆங்கிலேயர்களை, சுற்றுப் பக்கங்களில் இருந்த இராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் வெறுக்கலானார்கள். அங் ஙனம் வெறுத்தும் அவர்களை யெல்லாம் ஆங்கிலேயர் கள் சட்டை பண்ணாமல் தங்களுடைய காரியங்களின் மீதே கண்ணுங் கருத்துமா யிருந்தார்கள். எங்கும் அவர்களுடைய படைத்தொகுதி அதிகமா யிருந்தது. அதனால் எவ்விடத்திலும் அவர்கள் வெற்றியையே அடைந்து வந்தனர். கிளைவிடம் யுத்தமுறைகளிற் பயிற்சி பெற்ற ஆங்கில இராணுவ தளகர்த்தர்கள் தங் கள் சாமர்த்தியங்களைக் காட்டி அவர்களுக்கு வெற் றியை யுண்டாக்கி இங்கிலாந்தின் கீர்த்தியை நிலை

நிறுத்தி வந்தார்கள். கம்பெனி உத்தியோகஸ்தர்களாகிய இந்த ஆங்கிலேயர்களைப் பற்றி அக்காலத்திலிருந்த இஸ்லாமிய சரித்திராசிரியராகிய ஸையத் குலாம் உசேன் (Syed Gulam Husain) என்பார், தாம் எழுதியுள்ள சியார் - உல் - முதாகரீன் (Siyar - ul - Mutakharin) என்னும் புத்தகத்தில் "ஆங்கிலேய இனத்தார் கூர்மையான புத்தியும், உறுதியான குணமும், எதற்கும் அஞ்சாத தைரியமும் உள்ளவர்கள்; முன்யோசனையுடனும் திர்க்கமான தைரியத்துடனும் காரியங்களைச் செய்கிறவர்களா யிருக்கிறார்கள்; சண்டையின்போது அவர்கள் துருப்புகளை அணி வகுத்து நிறுத்தி வைப்பதும், சண்டைசெய்யும் மாதிரியும் மெச்சத்தக்கன. இத்தகைய நல்ல இராணுவ சாமர்த்தியங்களைக் கொண்டுள்ள இவர்கள் கடவுளால் படைக்கப்பட்ட இந்திய மக்களுக்கு இடர் விளைத்து வருகின்றனர்; இக்கொடுங்கோன்மை யில்லாமலிருப்பார்களாயின், இக்கடலாடை சூழ்ந்த புவியின்கண் இவர்களை ஒத்த உயர்ந்த இனத்தார் இல்லையென்றே கூறலாம். ஆனால், இவர்களுடைய ஆட்சிக்கு அடங்கியிருக்கும் ஜனங்கள் எல்லா விடங்களிலும் கஷ்டமுறுகின்றார்கள்; இன்னும் வறுமையில் ஆழ்ந்தும், கஷ்டங்களில் சிக்குண்டும் கிடக்கிறார்கள். ஆகையால் ஓ! கடவுளே! உன்னுடைய ஊழியர்களாகிய இந்திய மக்களின் கஷ்டங்களை நீக்கி அவர்களுக்கு நற்கதி கொடுக்குமாறு பிரார்த்திக்கிறேன்" என்று எழுதி யிருக்கிறார்.

காளாவர்த்தியில் கம்பெனியாரின் இராணுவ வீரர்களும் உத்தியோகஸ்தர்களும்கூடப் போாசை கொண்டவர்களாயும், சுகத்தை விரும்பியவர்களாயும்,

மேற்பட்ட உத்தியோகஸ்தர்களுக்கு அடங்காதவர்க ளாயும் ஆகிவிட்டார்கள். சிப்பாய்களும் துர்நடத்தை யுடையவர்களாகிவிட்டார்கள் ; அவர்களுக்குள் எங்கே பார்த்தாலும் சதியாலோசனைக் கூட்டங்கள் மலிந்து கிடந்தன.

இந்தியாவின் இத்தகைய நிலை, இங்கிலாந்திலிருந்த கம்பெனியின் நிர்வாகிகளுக்கு எட்டிக் கவலையை யுண் டாக்க ஆரம்பித்தது. இந்தியாவில் எங்கே பார்த்தாலும் குழப்பங்களும் புரட்சிகளும் ஏற்பட்டுக்கொண்டே யிருந்தன. ஆட்சியும் சரியாய் நடைபெறவில்லை; கம் பெனியைச் சார்ந்தவர்கள் ஏழை இந்தியர் பொருளைக் கொள்ளையடித்தார்கள். ஆனாலும் கம்பெனிக்கு ஒரு விதமான லாபமும் கிடையாது ; இவ்வாறு ஒழுங்கின மான காரியங்கள் நடந்துகொண்டிருக்கும்போது இந் தியாவிலிருந்து பணத்தைச் சேகரித்துக்கொண்டு இங்கி லாந்துக்குச் சென்ற ஆங்கிலேயர்கள் மாட மாளிகை களையும், கூட கோபுரங்களையும் கட்டிக்கொண்டார்கள்; அப்போது அவர்கள், அங்குள்ள கம்பெனியின் நிர்வா கிகளிடத்தில், இந்தியாவில் கம்பெனியின் பண வரு வாய் கொஞ்சமா யிருக்கிறதென்றும், எல்லைப்புறங்க ளில் சச்சரவுகள் ஏற்பட்டிருக்கின்றன வென்றும், படை வீரர்கள் அதிருப்தி கொண்டிருக்கிறார்க ளென் றும், இந்தியாவிலுள்ள ஆங்கிலேயர்களுடைய நட வடிக்கைகளால் ஆங்கிலேய இனத்துக்கே மானக்கேடு உண்டாகிறதென்றும் கூறினார்கள். அவற்றைக்கேட்ட கம்பெனியின் நிர்வாகிகள், மிகுந்த கவலை கொள்ள லானார்கள். அதன்மேல், "இப்போது இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் சீர்கேடுகளை நீக்கி ஒழுங்கான காரி

யங்களை நிலை நிறுத்தக் கூடியவர், அங்கே இராஜ்யத்தை ஸ்தாபித்த கிளைவ் ஒருவரே; அவரன்றி வேறெவரும் அதற்குத் தகுதியுடையவராகமாட்டார்" என்று ஒரே மனதாய் அபிப்பிராயப்பட்டார்கள்.

பின்னர் இந்தியா விஷயத்தைப்பற்றி யோசிப்பதற்குக் கம்பெனியின் நிர்வாகிகளும், பங்குக்காரர்களும் ஒரு கூட்டம் கூடினார்கள். அக்கூட்டத்தில் நிர்வாகிகள் அபிப்பிராயப் பட்டபடியே பங்குக்காரர்கள் அனைவரும் கிளைவைத் தவிர வேறு யாரையும் இந்தியாவுக்கு அனுப்பக்கூடாதென்று ஒரே மனதாய்க் கூறினார்கள். அவருடைய ஜாகிர் விஷயமாக நடத்திய நடவடிக்கையையும் நிறுத்திக்கொள்ளத் தீர்மானித்தார்கள்; இன்னும் அவரை இந்தியாவுக்கு அனுப்ப வேண்டுமென்றும் தீர்மானித்தார்கள்.

அதன்மேல் கிளைவ் எழுந்து, "ஜாகிரைப் பொறுத்த மட்டில் சமரசமான ஏற்பாட்டைச் செய்துகொள்ளலாம்; நான் இந்தியாவிற்குப் போகும் விஷயத்தில் ஆட்சேபனை யிருக்கிறது; அஃதியாதெனில், சல்லிவான் என்பவர் கம்பெனியின் டைரெக்டர்களுக்குத் தலைவராய் விடும் பக்ஷத்தில் நான் இந்தியாவிற்குப்போய் எவ்வித மான காரியத்தையும் செய்தல் இயலாது" என்று தெரிவித்தார். டைரெக்டர் பதவிக்கும், டைரெக்டர் தலைவர் பதவிக்கும் சமீபத்தில் தேர்தல் நடக்கக்கூடியதாயிருந்தது. அத்தேர்தலில், ஒரு சமயம் சல்லிவான் டைரெக்டர்களுக்குத் தலைவராய் விடக் கூடுமென்றே கிளைவ் இவ்வாறு கூறினர். அவர் அங்ஙனம் கூறவே, சல்லிவான் அதனை மறுத்துரைக்க ஆரம்பித்தார். அக்கூட்டத்தி

னுள்ள ஜனங்கள் அவர் பேசுவதற்கு இடங்கொடுக்க வில்லை. கம்பெனியின் பங்குக்காரர்களில் பெரும்பாலோர் கிளைவின் பக்கத்தில் இருந்தார்கள். சல்லிவான் ஓட்டு எடுத்து அவ்விஷயத்தை முடிவுகட்ட வேண்டுமென்று கூறினர். அக்காலத்தில், "ஒருவர் கொண்டு வரும் தீர்மானத்தை ஒன்பதுபேர் ஆதரித்தால்தான் நிறைவேற்றலாம்" என்ற விதி ஒன்று கம்பெனியில் ஏற்பட்டிருந்தது. சல்லிவான் கூறியபடியே ஓட்டு எடுக்கும் விஷயம் நடைபெற்றது. நூற்றுக்கணக்கான பங்குக்காரர்கள் அக்கூட்டத்திற்கு வந்திருந்தும் மேற்கூறிய விதியை அனுசரித்துச் சல்லிவானுடைய வேண்டுகோளுக்கு ஆதரவளிக்க ஒன்பதுபேர் கூட முன்வரவில்லை.

ஓட்டு விஷயம் அங்ஙனமாகிவிடவே, கிளைவ் வங்காளத்தின் கவர்னராகவும், சேனாதிபதியாகவும் நியமிக்கப் பட்டார். அவ்வாறு நியமிக்கப்பட்டும், அவர் சல்லிவானுக்கு டைரெக்டரின் தலைவர் பதவி கிடைப்பதையும், கிடைக்காததையும் அறிந்து கொள்ளும் பொருட்டு டைரெக்டர்களையும் டைரெக்டர் தலைவரையும் பற்றிய தேர்தலின் முடிவு தெரியுமுன் தாம் அந்த உத்தியோகங்களை ஏற்றுக்கொண்டு இந்தியாவுக்குப் போக முடியாதென்று ஒரே பிடிவாதத்துடன் கூறினர். பின்னர் அத் தேர்தல் நடைபெற்றது. அதில் டைரெக்டர்களின் புதிய தலைவரும், உதவித்தலைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சல்லிவான் தலைவர் பதவிக்கு முயன்றும் அவருக்கு அது கிடைக்கவில்லை. அவருடைய டைரெக்டர் பதவியே நிலைப்பது அரிதாயிருந்தது. ஒரு ஓட்டு குறைந்திருந்தால் சல்லிவான் கம்பெனியில்

கொண்டிருந்த டைரெக்டர் பதவியையே இழந்திருப்பார். தெய்வாதீனத்தால் அவர் தப்பித்துக்கொண்டார். இப்புதிய தேர்தலில் வந்த தலைவரும் (Chairman), உதவித் தலைவரும் (Deputy Chairman) கிளைவுக்கு வேண்டிய நண்பர்களா யிருந்தார்கள்.

## அத்தியாயம் 20.

### இந்தியாவுக்குக் கிளைவ் மூன்று முறை

### விஜயஞ் செய்தல்—கிளைவ் செய்த சீர்திருத்தங்கள்.

மேற்கூறிய முடிவுகளெல்லாம் ஏற்பட்டபின் கிளைவ் கடைசி முறையாக இந்தியாவுக்குப் பிரயாண மானார். 1765-ம் வருஷம் மே மாதம் அவர் கல்கத்தா துறைமுகத்தில் வந்திறங்கினர். அவ்வாறு இறங்கிய வுடன் தாம் கேள்விப்பட்டதைக் காட்டிலும் வங்கா ளத்தில் அரசியல் மிகச் சீர்கேடுற்று இருந்ததைக் கண் டார். அவர் கப்பலில் பிரயாணஞ்செய்துகொண்டு வருகையிலேயே மீர்ஜாபர் இறந்துவிட்டார். அவருக்கு முன்னதாகவே அவருடைய பிள்ளையாகிய மீரான் என்பாரும் இறந்துவிட்டார். அவர்கள் இறப்பதற்கு முன்னமே இங்கிலாந்திலிருந்த ஈஸ்ட் இந்தியா கம் பெனியின் டைரெக்டர்கள், இந்தியாவிலிருந்த மேற்படி கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் அங்குள்ள சுதேச அரசர்களிட மிருந்து எத்தகைய வெகுமதிகளையும் பெறக்கூடாதென்று அவர்களுக்கு மிக்க கண்டிப்பான உத்தரவனுப்பி யிருந்தார்கள். அப்படி யெல்லாம் இருந் தும் மேற்படி கம்பெனியின் நிர்வாகிகள் பணம் சம்பா திக்க வேண்டுமென்ற கருத்தைக் கொண்டும் கம்பெனி யின் டைரெக்டர்கள் வெகுதூரத்துக்கப்பால் இருக்கிற படியால் அவர்களுக்குத் தாங்கள் செய்யும் காரியங்கள் தெரியாதென்று கருதியும் வங்காளத்தின் அரசுரி மையை விற்க ஆரம்பித்தார்கள். அப்படிச் செய்ததில் கம்பெனியைச் சேர்ந்த ஒன்பது பிரபல உத்தியோகஸ் தர்களுக்கு இலட்சத்து நாற்பதினாயிரம் பவுன்கள்

கிடைத்தன. பின்னர் அவர்கள், இறந்துபோன மீர் ஜாபரின் மற்றொரு பிள்ளைக்குப் பட்டங்கட்டினார்கள். இச்செய்திகள் கிளைவ் வந்து இறங்கியவுடன் அவருக்கு எட்டின. இவற்றைக் கேட்ட அவர் உடனே தம்முடைய நண்பருக்கு எழுதிய கடிதமொன்றில், "ஐயோ! ஆங்கிலேயருடைய பெயர் மிகக் கீழான நிலைக்கு வந்துவிட்டதே! இவ்வாறு ஏற்பட்டதைப் பற்றி நான் வருத்தப்படுகிறேன். பிறரால் கொடுக்கப்படும் பணத்தை விரும்பி நியாய விரோதம் செய்யாமல், இங்குள்ள ஒழுங்கீனங்களை நீக்குதற்கே நான் வந்திருக்கிறேன்" என்ற விஷயங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்.

பின்னர், கிளைவ் கல்கத்தாவில் கவர்னர் பதவியையும், சேனாதிபதி பதவியையும் ஏற்றுக் கொண்டார். அதன்மேல் கம்பெனியின் நிர்வாக உத்தியோகஸ்தர்களை ஒன்றுசேர்த்து அவர்களிடம், இராணுவ விஷயங்களிலும், ஆட்சி சம்பந்தமான விஷயங்களிலும் கம்பெனியின் டைரெக்டர்கள் தமக்குப் பூரண அதிகாரங் கொடுத்திருக்கிறார்களென்றும், தாம் அதைக்கொண்டு, அப்போது நடந்த ஒழுங்கீன முறைகளை நீக்கிச் சீர்திருத்தம் செய்ய உறுதி கொண்டிருப்பதாகவும் கூறினார். அப்போது அக் கூட்டத்திலிருந்த ஜான்ஸ்டன் (Johnstone) என்பவர் தவிர மற்றவர்கள் எல்லாரும் அவர் கூறியவைகளை அப்படியே ஏற்றுக்கொண்டார்கள். அவர் மாத்திரம் அவற்றிற்கிசையாதவராகக் காணப்பட்டார். அதைக்கண்ட கிளைவ் அவரைப் பார்த்து, "புதிய முறைப்படி ஏற்பட்ட அரசாங்கத்தின் அதிகாரங்களை ஆட்சேபிக்கத் தாங்கள் எண்ணுகிறீர்

களா?" என்று கேட்டார். உடனே அவர் அடங்கி விட்டதுடன் தமக்குப் புதிய ஆட்சி முறையைப்பற்றி யாதொரு ஆட்சேபனையுமில்லை யென்றுந் தெரிவித்தார். பின்னர் கிளைவ் தாம் எண்ணிவந்த காரியங்களைச் செய்ய ஆரம்பித்தார்.

அவர் அக்காலத்தில் இஷ்டப்பட்டிருந்தால் தம் முடைய சொந்தச் சொத்துக்களைப் பெருக்கிக்கொண் டிருக்கலாம்; கெடுதல்களை ஒழித்துவிட வேண்டு மென்று சொல்லிக்கொண்டே கெடுதலான காரியங் களையும் செய்துகொண்டு போயிருக்கலாம். வங்காளத் தைச் சேர்ந்த ஏழைக்குடிகளை அடக்கி வைத்திருந்த ஆங்கிலேயர்களுக்கு இடங்கொடுத்து அவர்களுடைய நட்பை எளிதில் பெற்றுக்கொண் டிருக்கலாம். ஆனு லும், அவர் அங்ஙனம் செய்வது தாம் கொண்ட நோக் கங்கட்கு மாறுகுமென்று கருதி, கம்பெனி உத்தியோ கஸ்தர்களால் தமக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களையும் பொருட்படுத்தாமல் சீர்திருத்தங்களைச் செய்ய ஆரம் பித்தார். அங்ஙனம் செய்ய ஆரம்பித்தவர், அவற்றைச் செய்தே தீரவேண்டுமென்று மனதைத் திடப்படுத்திக் கொண்டார். கம்பெனியின் ஒழுங்கீனங்களை நீக்கிச் சீர் திருத்தம் செய்வது பிளாஸி யுத்தத்தைக் காட்டிலும் கடினமானதா யிருந்தது. முதலில் அவர் தாம் செய்ய நினைத்த காரியங்களில் வெற்றி அடைவது அசாத்திய மென நினைக்கக்கூடியதா யிருந்தது. அப்படி யிருந்தும் அவர் தைரியத்தை விடாமல் இடர்களை யெல்லாம் போக்கிக் காரியங்களைச் செய்ய ஆரம்பித்தார். கம்பெனி உத்தியோகஸ்தர்கள், இந்தியர்களிட மிருந்து வெகுமதி கள் வாங்கக்கூடாதென்று அவர் கண்டிப்பாய் உத்தரவு

பிறப்பித்தார். கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் தங்கள் சொந்தத்தில் வியாபாரஞ் செய்துவந்ததைத் தடுத்துவிட்டார். இவற்றைச் செய்யவே கம்பெனி உத்தியோகஸ்தர்களாகிய ஆங்கிலேயர்கள் அனைவரும் அவருக்கு விரோதிகளானார்கள். அப்போது அவர், கல்கத்தாவிலிருந்த அந்த ஆங்கிலேயர்கள் தம்முடைய செயல்களுக்கு ஒத்திருந்து துணைபுரியாவிடில் தாம் வேறு இடங்களினின்று துணை தேடிக்கொள்ளக் கூடுமென்று கூறியதுடன் சென்னையிலிருந்து சில ஸிவில் உத்தியோகஸ்தர்களைத் தமக்குத் துணையாக வரவழைத்துக்கொண்டார். காரியாலயத்தி லிருந்து தமக்குப் பெரிதும் தொந்தரவு செய்துகொண் டிருந்தவர்களை அவர் வேலையினின்று நீக்கிவிட்டார். மற்றவர்கள் வேறு வழியில்லையென்று கருதி அவர் சொற்படி நடக்கலானார்கள். கூடிய சீக்கிரத்தில் எல்லாத் தீமைகளும் அறவே ஒழிந்தன.

பின்னர் கம்பெனியார், தங்களுடைய உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுத்து வந்த சம்பளம் குறைவானதா யிருந்ததென்றும், அதனாலேயே மேல் அதிகாரிகள் இல்லாத சமயங்களில் அவர்களால் ஒழுங்கினமான காரியங்கள் செய்யப்படுகின்றன என்றும் கிளைவ் உணர்ந்தார். அவர் உணர்ந்தபடியே கம்பெனியின் உத்தியோகஸ்தர்களுக்கும் அக்காலத்தில் கொடுக்கப்பட்டு வந்த சம்பள விகிதங்கள், அவர்கள் சூரிய உஷ்ணம் தகிக்கும் பிரதேசங்களில் சௌக்கியத்தோடு வசிப்பதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்துகொள்ளப் போதாதனவா யிருந்தன. அவர்கள் தங்களுடைய சம்பளத்தில் மாதமொன்றுக்கு ஒரு ரூபாய்கூட மிச்சம்

படுத்தி வைக்க இடமில்லாதிருந்தது. இத்தகைய அற்பச் சம்பளத்திற்கு உஷ்ணப் பிரதேசங்களில் வேலை செய்ய ஒருவரும் முன்வரமாட்டார்கள். ஆனால் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் இந்தக் குறைந்த சம்பளத்திற்கு ஒத்துக்கொண்டதற்குச் சில காரணங்கள் உண்டு. தாங்கள் சொந்த வியாபாரத்தின் மூலமாக இந்தியாவில் பணஞ் சம்பாதித்துக்கொள்ள ஆரம்பத்திலிருந்தே கம்பெனியார் இடங்கொடுத்திருந்தார்கள்; அந்தச் சாதகத்தை உத்தேசித்தே இவர்கள் அதற்கிசைந்தார்கள். இந்த வழக்கமானது கம்பெனியின் பொது வியாபாரத்துக்கு அதிகமான கெடுதலையே விளைவித்து வந்தது. இதற்கிசைய இங்கிலாந்தின் அரசரான முதலாவது ஜேம்ஸ் (James I) காலத்தில், இந்தியாவில் மொகலாயச் சக்கரவர்த்தியா யிருந்த ஜஹாங்கீரின் (Jehangir) சமஸ்தானத்தில் இங்கிலாந்தின் தூதராயிருந்த (Ambassador) சர் தாமஸ் ரோ (Sir Thomas Roe) என்பார், கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் சொந்தத்தில் செய்து வந்த வியாபாரத்தைத் தடுக்கவேண்டியது இன்றியமையாததென்று குறிப்பிட்டு, கம்பெனியின் டைரெக்டர்களுக்கு எழுதிய கடிதமொன்றில், "கம்பெனி உத்தியோகஸ்தர்கள் சொந்தத்தில் வியாபாரஞ் செய்துகொண்டிருப்பதை அடியோடு தடுத்துவிட வேண்டும்; அப்படிச் செய்தால்தான் உங்களுடைய வியாபாரம் விருத்தியடையும்; இது கடினமான காரியம் என்பதையும் நான் அறிவேன்; கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் தாங்கள் அவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளங்களுக்காக மாத்திரம் வேலைக்கு வரவில்லை என்று கூறுகிறார்கள்; அவர்களுக்குப் போதுமான சம்பளங்கொடுத்தால்

அவர்கள் அங்ஙனம் செய்வதை விட்டுவிடுவார்கள்; அப்போது உங்களுக்கு இலாபமே தவிர நஷ்டமொன்றும் ஏற்படாது'' என்று எழுதியுள்ளார்.

இவ்வாறு சர் தாமஸ் ரோ கூறிய நல்ல புத்திமதிகளைக் கம்பெனியார் ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் முன் போலவே குறைந்த சம்பளங்களைத் தம் உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுத்து வந்தார்கள். அவர்கள் வேறு வழிகளில் பணம் சம்பாதித்ததைக் கண்டும் காணாதவர்கள்போல் இருந்துவிட்டார்கள். கௌன்சில் மெம்பருக்குங்கூட ஆண்டொன்றுக்கு முந்நூறு பவுன்களே சம்பளமாகக் கொடுக்கப்பட்டன. அவர்கள் இந்தியாவில் சௌக்கியமாக வாழ்வதற்கு அதைப் போல் பதின்மடங்கு கொண்ட தொகையைச் சம்பளமாகப் பெறவேண்டியவர்களா யிருந்தார்கள்; இங்கிலாந்துக்குச் செல்லுங்காலத்தில் பணத்தைச் சேர்த்து எடுத்துக்கொண்டு போகக் கூடியவர்களாயு மிருந்தார்கள். ஆகையால் கம்பெனியின் உத்தியோகஸ்தர்களுக்குச் சொந்தத்தில் வியாபாரஞ் செய்யவேண்டிய அத்தியாவசியம் ஏற்பட்டது என்பது சொல்லாமலே விளங்கும். வங்காளம் ஆங்கிலேயர் வசப்படு முன், கம்பெனி உத்தியோகஸ்தர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுக்கப்பட்டிருந்தால் கம்பெனியின் பங்குக்காரர்களுக்கு இலாபம் குறைவுபட் டிருக்கும்; ஆனால், இப்போது கம்பெனியார் அரசாட்சி செய்யக்கூடியவர்களாய் ஏற்பட்டுவிட்டபடியால் உத்தியோகஸ்தர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுத்தாலும் கம்பெனியின் சொந்தக்காரர்களின் இலாபத்தில் குறைவு ஏற்படாது. அப்படி யிருந்தும் கம்பெனியின் நிலைமை பழைய வழக்

கத்தை அனுசரித்ததாகவே யிருந்தது. மேற் கூறிய படி கம்பெனியானது இராஜ்ஜியத்தை ஆளும் ஒரு சங்கமாய் மாறிய காலத்திலும் அக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகளென்று சொல்லக் கூடிய நிலையிலேயே இருந்தார்கள். ஆனால் உண்மையில் பரந்த ஒரு தேசத்தைக் கம்பெனியின் சார்பாக ஆட்சி புரியக்கூடிய தன்மை அவர்களிடத்தி லிருந்தது. அவர் களுக்கு மிக்க அதிகாரம் செலுத்தக்கூடிய தன்மையும் ஏற்பட்டிருந்தது. ஆனாலும், அந்தக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் முன்னிருந்த வழக்கத்தாலும், டைரெக்டர்களின் அசிரத்தையாலும், நீதிக்குமாறான வழியில் பொருளைச் சம்பாதித்துப் பணக்காரரானார்கள். அதனால்தான் வங்காளவாசிகள் அதிகமான கொடுமை களுக்கு உள்ளாகிக் கஷ்டங்களை அனுபவித்து வந்தார் கள். உத்தியோகஸ்தர்களுக்கு அதிகாரங் கொடுத்து விட்டுச் சம்பளத்தை மாத்திரம் குறைத்து அவர்களை எளிய வாழ்க்கையில் வாழும்படி செய்வது கூடாத காரியமென்று கிளைவ் நினைத்தார்; கம்பெனியின் உத்தி யோகஸ்தர்களுக்கு உயர்ந்த சம்பளம் கொடுக்காமல் சீர்திருத்தங்கள் செய்ய முற்படுவதில் யாதொரு பய னும் உண்டாகாதென்றும் கருதினார். ஆனால் கம்பெனி யின் டைரெக்டர்கள் தங்களுடைய உத்தியோகஸ்தர்க ளுக்குத் தங்கள் வரும்படியிலிருந்து அதிகச் சம்பளம் கொடுக்கமாட்டார்கள் என்பதும் அவருக்கு விளங் கிற்று. அதனால், அவர் உப்புவரி விதித்து அதன்மூலம் வந்த பணத்தைக் கொண்டு கம்பெனியின் உத்தியோ கஸ்தர்களுக்குச் சம்பளங்களை அதிகப்படுத்தினார். அவர் இவ்வாறு செய்ததைப்பற்றிப் பிரபல சரித்திரா சிரியர்களும், அவருடைய பகைவர்களும் அதிகமாகக்

கண்டித்தார்கள். எப்படியெனில், அவர் டைரெக்டர்க ளின் சொற்படி காரியங்களை நடத்தவில்லையென்றும், தாம் செய்து வந்த வாக்குத்தத்தத்தி னின்றும் பிறழ்ந்து விட்டாரென்றும், கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் சொந்தத்தில் வியாபாரஞ் செய்யக் கூடாதென்று சொல்லிக்கொண்டே உப்பு வரியைக்கொண்டு அவர் களுக்கு அனுகூலஞ் செய்து விட்டாரென்றும், மில், தாரன்டன் முதலிய சரித்திராசிரியர்கள் குறை கூறி னார்கள். கிளைவ் பிறக்காததற்கு முன்னிருந்தே இந் தியாவிலிருந்த அரசாங்கங்களுக்கு உப்புவரி மூலமாக வருமானம் கிடைத்துக்கொண்டிருந்து. இப்போதும் இந்தியா அரசாங்கத்திற்குக் கிடைக்கும் பிரபல வரு மானங்களில் உப்பு வரி ஒன்று. அவ்விதம் இருப்பத னால் கிளைவின் மீது மாத்திரம் அதற்காகக் குற்றஞ் சாட்டுவது அவ்வளவு உசிதமாகத் தோற்றவில்லை.

ஸிவில் சர்விஸ்காரர்களின் ஏற்பாடுகளுக்கு விரோதமா யிருந்ததைக் கிளைவ் மேற்கூறியபடி சரிப் படுத்தி விட்டார். ஆனால் இராணுவத்தைச் சேர்ந் தவர்களின் சம்பந்தமாகச் சீர்திருத்தங்களைச் செய் வது கஷ்டமானதா யிருந்தது. அக்காலத்தில் கம் பெனியின் டைரெக்டர்கள் இராணுவத்திற்குரிய செல வைக் குறைக்கவேண்டுமென்று கட்டளை யிட்டார்கள். கிளைவ் அக்கட்டளையை நிறைவேற்ற ஆரம்பித்தார். அதனால் இராணுவ வீரர்கள் ஒரே முகமாய் அவரை எதிர்க்கலானார்கள். இராணுவ வீரர்களைச் சீக்கிரத்தில் அடக்கிவிடுவது கூடாத காரியமா யிருந்தது. இரு நூறு ஆங்கிலேய இராணுவ தளகர்த்தர்கள் ஒன்றாய்க் கூடிச் சதியாலோசனை செய்து, குறிப்பிட்ட ஒரு

தினத்தில் எல்லோரும் உத்தியோகங்களை விட்டு விட்டுக் கிளைவுக்குக் கஷ்டத்தை உண்டாக்க வேண்டுமென்று தீர்மானித்து அவ்வாறே இராஜிநாமாக் கொடுத்துவிட்டார்கள். ஆனால், அவர்களுக்குக் கிளைவினுடைய சாமர்த்தியம் தெரியாது. மேற்கூறிய தளகர்த்தர்களைத் தவிர மற்றும் சில தளகர்த்தர்கள் அவரை விட்டுப் பிரியாமல் அவர் சொன்னபடி காரியங்களை நடத்தக் கூடியவர்களா யிருந்தார்கள். கிளைவ், அவர்களோடு மேலும் துணைசேர்த்துக்கொள்ளக் கருதி ஸெயிண்ட் ஜார்ஜ் கோட்டையிலிருந்து சில இராணுவ வீரர்களையும், தளகர்த்தர்களையும் வரவழைத்துக்கொண்டார். மேலும், தமக்குதவியா யிருக்கும் பொருட்டுச் சில வியாபாரத் தலைவர்களையும் தம்முடன் சேர்த்துக் கொண்டு அவர்களுக்கு இராணுவ தளகர்த்தர் பதவிகளை வழங்கினர். அதன்மேல் இராணுவ உத்தியோகத்தினின்று விலகிய ஒவ்வொரு உத்தியோகஸ்தரையும் கல்கத்தாவுக்குக் கொண்டுவர வேண்டுமென்று அவர் கட்டளை பிறப்பித்தார். அங்ஙனம் காரியங்கள் நடைபெறவே சதியாலோசனைக்காரர்கள் "நாம் முன் ஆலோசனையில்லாமல் காரியங்களைச் செய்துவிட்டோம்" என்று கருதினர்கள். கவர்னராகிய கிளைவ் சதியாலோசனைக்காரர்களுடைய சூழ்ச்சிக் கிடங்கொடாமல் திடசித்தத்தோ டிருந்தார். ஆங்கிலேயப் போர்வீரர்களும் அவருடைய கட்டளைப்படி நடக்கக் கூடியவர்களா யிருந்தார்கள். இந்தியச் சிப்பாய்களும் அவரிடம் விசுவாசமுடையவர்களா யிருந்தார்கள். சதியாலோசனைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் தலைமையா யிருந்தவர்கள் கைதி செய்யப்பட்டு விசாரிக்கப் பட்டார்கள். அதன்மேல் அவர்கள் வேலையினின்று

நீக்கப்பட்டார்கள். மற்றவர்கள் பயங்கொண்டவர்க ளாய்க் கிளைவினிடஞ் சென்று, தங்களுடைய இராஜி நாமாக் கடிதங்களை வாபீஸ் வாங்கிக்கொள்வதாகக் கூறினர்கள். அவர்களில் அநேகர், தாங்கள் அறி யாமையால் செய்துவிட்ட காரியங்களுக்காகக் கண்ணீர் வடித்தார்கள். அவர்களில் மிக்க இளமை யுடையவர்க ளாகிய இராணுவ வீரர்களிடம் கிளைவ் கருணை காட்டி ஞர். ஆனல், சதியாலோசனைக்கு மூல புருஷர்களா யிருந்தவரிடத்தில் மாத்திரம் அவர் சிறிதும் கருணை காட்டவில்லை. மேற்கூறிய கூட்டத்தாருள் சிலர் அவரை நேரில் தூஷித்தவர்கள்; சிலர் அவரைக் கொலை செய்யத் துணிந்தவர்கள். தம் சொந்த விஷயத்தில் இவ்வாறு நடந்துகொண்ட அவர்களையும் தண்டிக் காமலே விட்டுவிட்டார். இச்செயல்கள் அவருடைய மேன்மையான பெருந்தகைமைகளைக் காட்டுகின்றன.

இதுவரை கிளைவ், ஸிவில் சர்வீஸ், இராணுவம் ஆகிய இவைகளைப் பற்றிய சீர்திருத்தங்களைச் செய்த விவரம் கூறப்பட்டது. இனி, அவர் இதா மன்னர் கள் சம்பந்தமான காரியங்களில் வெற்றியடைந்த விவ ரத்தைக் கூறுவாம். அவர் கல்கத்தாவில் வந்து இறங் கிய சமயத்தில் அயோத்தியின் நவாபாகிய ஸுஜா-வுட்-டவுலா பெரிய படை ஒன்றைத் திரட்டிக்கொண்டு ஆங்கிலேயர்களுக்கு விரோதமாக பீஹாரின் எல்லைப் புறத்தில் வந்திருந்தார். அவருடன் ஆப்கானியர் களும், மஹாராஷ்டிரர்களும் சேர்ந்திருந்தார்கள். இன் னும் ஆங்கிலேயருக்கு விரோதமாக எல்லா இந்திய அரசர்களும் அவர்களோடு சேர்ந்துகொள்ள ஆயத் தமா யிருந்தார்கள். ஆனல், கிளைவ் இங்கிலாந்திலிருந்து

திரும்பி வந்துவிட்டார் என்ற செய்தியைக் கேட்டதும் மேற்கூறியவர்கள் அனைவரும் அடங்கி விட்டார்கள். ஆங்கிலேயருக்கு விரோதியாய்க் கிளம்பி வந்த ஸுஜா வுட்-டவுலா, கிளைவுக்கு எழுதிய கடிதமொன்றில் தாம் அவருடைய நிபந்தனைகளுக்கு இணங்குவதாகத் தெரிவித்தார்.

அதே சந்தர்ப்பத்தில் லார்டு கிளைவ் வங்காளத்தின் ஆட்சியிலும் சீர்திருத்தங்களைச் செய்தார். அதற்கு முன் அம்மாகாணத்தில் கம்பெனியாருக்கு அதிகாரம் இவ்வளவுதான் உண்டு என்பதைப்பற்றி ஒருவித வரையறை எழுத்து மூலமாக ஏற்படுத்தப்படவில்லை. இத்தகைய ஏற்பாடின்றியே கம்பெனியார் ஆட்சி முறையை ஒருவாறாக நடத்தி வந்தார்கள். அதனால் கிளைவ் கம்பெனிக்கு எழுத்து மூலமான அதிகாரத்தை ஏற்படுத்திவிடவேண்டுமென்ற கருத்துக் கொண்டு, அதைப்பற்றி டில்லியிலிருந்த மொகலாய சக்கரவர்த்திக்கு விண்ணப்பம் செய்துகொண்டார். மொகலாய சக்கரவர்த்திக்கு அது சம்மதமில்லை. எனினும், அதைத் தடுக்க ஆற்றல் இல்லாமையாலும், அதனால் பணம் கிடைக்குமென்ற கருத்தாலும், கிளைவ் கேட்டுக் கொண்டபடி ஆங்கிலேயக் கம்பெனியாருக்கு வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய இம்மாகாணங்களின் வரிகளை வசூலித்துச் செலவு செய்யும் அதிகாரம் உண்டென்று ஒரு விளம்பரத்தை வெளியிட்டார். அதனால் கம்பெனிக்கு அவ்விடங்களில் எழுத்து மூலமான அதிகாரமும் ஏற்பட்டுவிட்டது.

மேற்கூறிய அதிகாரம் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்ட பின்னும் வங்காளத்தில் நவாப் போளவில்

மாத்திரம் 'நவாப்' ஆக இருந்து வந்தார். அவரை அடி யோடு ஒழித்துவிட வேண்டுமென்று கிளைவ் ஒரு சந் தர்ப்பத்தில் எண்ணினர். எனினும் பிரான்சுக்காரர் களும், டச்சுக்காரர்களும், டென்மார்க் தேசத்தினரும் நவாபின் கட்டளையை மதித்து நடக்கும் இயல்புடைய வர்களா யிருந்தமையால் நவாப் ஒருவர் இருக்கவேண்டி யது அவசியம் என்பதை அறிந்து போளவில் மாத்திரம் அவரை நவாபா யிருக்கும்படி வைத்திருந்தார். அவர் காலத்தில் இவ்வேற்பாடு நன்மை பயப்பதா யிருந்தது. அவருக்குப் பின் அத்தகைய நவாப் ஒருவர் இருக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அதனல் நவாப் பதவி எடுபட்டு விட்டது.

கிளைவ் இவ்வாறு வங்காளத்தில் ஆட்சிமுறை நடத்தியபோது, இஷ்டப்பட்டிருந்தால் ஏராளமான சொத்துக்களைச் சேகரித்துக் கொண்டிருக்கலாம். அவர் வங்காளத்தி லிருந்த பணக்காரர்களைக் கஷ்டப்படுத்தா மலே அவர்களிடம் வருடத்திற்கு மூன்று லட்சம் பவுன் இனமாகப் பெற்றுக்கொண்டிருக்கலாம். இன்னும் அவர் இஷ்டப்பட்டிருந்தால் அருகிலிருந்த சிற்றரசர்களும் அவருடைய தயவைச் சம்பாதிப்பதற் காக அவருக்கு அளவற்ற தொகைகளைக் கொடுத்திருப் பார்கள். ஆனாலும், அவர் மற்றவர்களின் பொருட்டு ஏற்படுத்திய நிபந்தனைகளுக்குத் தாமும் கட்டுப்பட்டு அவ்வித சம்பாத்தியங்களைச் சிறிதும் விரும்பாம லிருந் தார். காசியைச் சேர்ந்த அரசர் அவருக்கு அதிக விலை யுயர்ந்த வைரங்களைக் கொடுக்க முன்வந்தார். அயோத்தி நவாபும் ஏராளமான தொகையையும், விலையுயர்ந்த நகைகளடங்கிய பெட்டி ஒன்றையும் தம்மிடமிருந்து

பெற்றுக்கொள்ளும்படி அவரை வேண்டினர். ஆனால், அவர், அவ்விருவரும் அவ்வாறு கொடுக்க விரும்பிய வெகுமதிகளை ஏற்காமல் அடியோடு மறுத்துவிட்டார். அப்படி மறுத்துவிட்டதைப் பற்றி அவர் தற்பெருமை பேசிக்கொள்ளவுமில்லை. அவர் இறந்த பிற்பாடுதான் அவ்விஷயம் வெளிக்கு வந்தது. அவர், தம்முடைய சம்பளத்தையும், உப்பினால் தமக்குக்கிடைத்த ஊதியத்தையும், கிழக்கு தேச வழக்கப்படி மறுக்காமல் தாம் ஏற்கவேண்டி யிருந்த வெகுமதிகளையுமே பெற்று வந்தார். இவைகளைப் பற்றிய கணக்கை அவர் பிழையின்றி வைத்துக்கொண் டிருந்தார். மேற்கூறிய வழிகளில் கிடைத்த பணத்தைக்கொண்டு அவர் தம் உத்தியோக அந்தஸ்துக்குத் தக்கவிதமாய் வாழ்க்கையை நடத்தி வந்தார். மீதியாய் இருந்த தொகையைத் தம்முடன் இந்தியாவுக்கு வந்த நண்பர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தார். இந்தியாவுக்குக் கடைசிமுறையில் வந்து நிர்வாகம் நடத்தியதால் தமக்கிருந்த சொத்தில் குறைவு ஏற்பட்டதே யொழிய அதிகரிப்பு ஏற்படவில்லை யென்று அவர் கூறியுள்ளார். அக்கூற்று உண்மையே.

அவர் மேற்கூறிய ஒழுங்குகளை அனுசரித்து வந்த காலத்தில், மீர்ஜாபர் தாம் இறப்பதற்குமுன் எழுதிய மரண சாசனத்தில் கிளைவுக்கு அறுபதினாயிரம் பவுன் மதிப்புள்ள தொகைகளையும் நகைகளையும் உரிமையாக்கி எழுதிவிட்டுச் சென்றார். கம்பெனியின் டைரெக்டர்கள் உயிருடனுள்ளவர்களிடமிருந்து மாத்திரம் கம்பெனி உத்தியோகஸ்தர்கள் வெகுமதிகள் பெறக்கூடாதென்று விதி ஏற்படுத்தியிருந்தார்கள்; இறந்துபோனவர்கள் எழுதிவிட்டுப்போன தொகைகளைப்பற்றி ஒன்

றாங் குறிப்பிடவில்லை. ஆகவே, கிளைவ் அவ் வெகுமதியை ஏற்றுக்கொள்வது சட்ட விரோதமாகாதென்று ஒப்புக்கொண்டு, அப்பொருள்களைக்கொண்டு ஒரு நிதி ஏற்படுத்தி, கம்பெனி வேலையிலிருந்து வேலைசெய்யச் சக்தியில்லாமல் நீங்கியிருக்கும் இராணுவ வீரர்களுக்கு அந்நிதியை உபயோகிக்க வேண்டுமென்று ஓர் ஏற்பாடு செய்தார். கம்பெனியாரும் அதை வந்தனத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். இப்போதும் அந்த நிதிக்குக் 'கிளைவ் நிதி' என்ற பேர் வழங்கி வருகிறது.

இவ்வாறு கிளைவ் காரியங்களை நடத்திக்கொண்டு ஒன்றரை வருட காலம் இந்தியாவிலிருந்தார். இந்தக் குறுகிய காலத்திற்குள் எத்தகைய சாமர்த்தியம் வாய்ந்த ஒரு இராஜதந்திரியாலும் செய்யமுடியாத சிறந்த பல சீர்திருத்தங்களை அவர் செய்து முடித்தார். அவருடைய சீர்திருத்தங்கள் நீதிக்குப் பொருத்தமானவைகளாயும், ஜனங்களுக்கு நன்மை செய்யக் கூடியனவாயுமிருந்தன. மிக்கப் பிரயாசையின் பேரிலேயே இச் சீர்திருத்தங்கள் நிறைவேறின. கிளைவ், இவ்வாறு தாம் செய்த சீர்திருத்தங்களைப்பற்றிச் சந்தோஷமடைந்தார்; தாம் அதுவரை செய்து வந்த காரியங்களில் அச்சீர்திருத்தங்களே சிறந்தவையென்று அவர் எண்ணினார்.

# அத்தியாயம் 21.

## கிளைவ் இங்கிலாந்துக்குத் திரும்புதல்—

## இங்கிலாந்தில் நேர்ந்த கஷ்டங்கள்.

மேற் கூறியபடி இந்தியாவில் பதினெட்டு மாத காலம் கிளைவ் இருந்த பிறகு அவருடைய உடம்புக்கு அசௌகரியம் எற்பட்டது. அதன்மேல் அவர் 1767-ம் வருஷம் ஜனவரி மாதம் முடிவில் இந்தியாவைக் கடைசி முறையாக விட்டு இங்கிலாந்துக்குப் பிரயாணமானர். அவர் இங்கிலாந்து போய்ச் சேர்ந்தவுடன் அவரை ஜனங்கள் முன்னொருமுறை வரவேற்றதைப்போல் வர வேற்க வில்லை. அவருக்கு விரோதமாக அநேகர் கிளம்பி, அவர் மனதில் வருத்தத்தை உண்டாக்கினர்கள். அத ஞல் அவர் மனமுடைந்து அகால மரணமுமடைய நேரிட்டது. எப்படியெனில், இங்கிலாந்தில் ஈஸ்ட் இந் தியா கம்பெனியின் காரியாலயத்தில் இருந்த அவரு டைய பழைய விரோதிகள் அப்போது பலங்கொண்ட வர்களாய் விட்டார்கள். அவர்களுக்குத் துணையாய் அநேகர் அவர்களுடன் கலந்து கொண்டார்கள். அவர் கள் அனைவரும் சேர்ந்து கிளைவுக்குக் கெடுதல்களை உண்டாக்கக் கங்கணங் கட்டிக்கொண்டு அதற்கான எற்பாடுகளையும் ஓயாது செய்துவந்தார்கள். சொந்தத் தில் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் நடத்தி வந்த வியாபாரத்தை அவர் தடுத்ததிஞல் அவர்மீது பகை கொண்டு இங்கிலாந்து சென்ற அவ்வுத்தியோகஸ்தர் களும் அவருக்கு விரோதமான கட்சியாருடன் கலந்து கொண்டார்கள். அவர்கள் அவருக்கு உண்டாக்கிய கஷ்டங்கள் கொஞ்சமல்ல. அவர்களில் அநேகர் ஈஸ்ட்

இந்தியா கம்பெனியின் பங்குக்காரர்களா யிருந்தால் மாத்திரந்தான் அவரைத் துன்புறுத்தக்கூடும் என்று கருதி அதன் பொருட்டாகவே அக்கம்பெனியில் பங் கெடுத்துக் கொண்டார்கள். அவரைத் தூற்றுவதற் கென்றே பத்திரிகைகளைப் பிரசுரஞ் செய்தார்கள். அக்காலத்திலிருந்த ஜனங்கள் அப்பத்திரிகைகளின் கூற்றை நம்பி அவர் விஷயத்தில் தப்பு அபிப்பிராயங் களைக் கொள்ளலாயினர்.

முந்திய அத்தியாயங்களில் கூறியபடி இந்தியா விற்கு வந்து செல்வாக்குடன் பணம் திரட்டிக்கொண்டு இங்கிலாந்துக்குச் சென்ற ஆங்கிலேயர்கள், அங்கிருந்த ஜனங்களால் 'நவாபுகள்' என்று சொல்லப்பட்டார் கள். அவர்கள் முன்னே இங்கிலாந்தில் இருந்த காலத் தில் பணக்காரர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களல்லர். அவர்கள் சிறு வயதிலேயே இந்தியாவுக்கு அனுப்பப் பட்டு இந்நாட்டில் ஏராளமான சொத்துக்களைச் சேக ரித்துக் கொண்டு சொந்த நாட்டிற்குத் திரும்பியவர் கள். அவர்கள், ஜனங்களால் நன்கு மதிக்கப்பட்ட ஜனசமூகங்களில் சேர்ந்தவர்களல்லர்; அதனால், அவர் கள் தாழ்ந்த குணங்களோடு அங்கே ஆடம்பரமான காரியங்களைச் செய்துகொண்டிருந்தார்கள்; நூதன மான சில அனுஷ்டானங்களையும் செய்துகொண்டு வந் தார்கள். புதிதாகப் பணம் படைத்தவர்கள் அங்ஙனம் செய்வது சகஜமே. அவர்கள், இந்தியாவிலிருந்த காலத் தில் கற்றுக்கொண்ட சில பழக்க வழக்கங்களைக் கொண் டிருந்தது, இங்கிலாந்தை விட்டு வெளிநாடுகளுக்குச் செல்லாதவர்களுக்குப் பிடிக்காமல் இருந்தது. இந்தியா விற்குச் சென்று வந்தவர்கள் அங்கே அதிகாரம்

செலுத்தியவர்க ளாதலால் இங்கிலாந்திலும் இறுமாப் புடையவர்களாகவே காணப்பட்டார்கள். அவர்கள், எங்கெங்கே வசித்தார்களோ அந்த இடங்களிலெல்லாம் அவர்களுக்கும், பரம்பரை உயர் குலத்தவர்களுக்கும் சச்சரவுகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. இச்சச்சரவுகள் நெடுநாள் வரை ஓயவில்லை.

அதனால், இந்தியாவிலிருந்து சென்ற அவர்களை, இங்கிலாந்திலிருந்தவர்கள் வெறுத்தார்கள். இந்தியாவி லிருந்து வந்தவர்களில் சிலர் அங்கிருந்தபோது திறமை யான காரியங்களைச் செய்தவர்கள். அதனால் ஈஸ்ட் இந் தியா கம்பெனியாருக்கும் அதிகமான நன்மை ஏற்பட் டது. ஆனால், அவர்கள் இங்கிலாந்து சென்றவுடன் அங்கே அவர்களுடைய சாமர்த்தியங்களைக் காட்ட வில்லை. அதனுடன் அவர்கள் இந்தியாவில் இயற்றிய அரிய காரியங்கள் இங்கிலாந்தி லிருந்தவர்களுக்குத் தெரியாமலு மிருந்தன. ஆனால், அவர்கள் கீழ்நிலையி லிருந்து மேல்நிலையை யடைந்ததாலும், ஏராளமான செல்வத்தைச் சம்பாதித்திருந்ததாலும், மேற்கூறியபடி இறுமாப்புக்கொண்டு வரையறை இல்லாமல் பணத் தைச் செலவழித்து வந்தார்கள் ; அதனால் உணவுப் பொருள்களின் விலையை அதிகப்படுத்தி விட்டார்கள் ; அவர்களுடைய வேலைக்காரர்கள் தாங்கள் அணிந் திருந்த உடுப்புகளினால் கோமகனுடைய வேலைக்காரர் களுக்கும் மேற்பட்டவர்களாய் விளங்கினார்கள்; அவர் கள் வைத்திருந்த குதிரை வண்டிகள் லார்டு மேய ருடைய வண்டிகளுக்கும் மேற்பட்டனவா யிருந்தன; அவர்கள் இத்தகைய ஆடம்பரங்களை யுடையவர்களா யிருந்தும் அவர்களில் சிலர் கௌரவம்வாய்ந்த மனித

ருக்கு இருக்கவேண்டிய குணங்களைப் பெருமல் கீழ்மக் களுக்குரிய குணங்களையே கொண்டிருந்தார்கள். இக் காரணங்களினலேயே அவர்கள் இங்கிலாந்திலுள்ளவர் களால் அவமதிக்கப்பட்டார்கள். இன்னும், அவர்கள் இழிவான காரியங்களைச் செய்தே பெரிய செல்வத் தைப் பெற்ருர்கள் என்று நினைத்தும் ஜனங்கள் அவர் களைப் பெரிதும் அலக்ஷியம் செய்து வந்தார்கள். இவ் வாறு பல வகைகளினுலும் அவர்களைப் பொது ஜனங் கள் அவமதித்ததற்கு அளவேயில்லை. இங்கிலாந்து ஜனங்கள், அவர்கள் அநியாய வழியில் பணத்தைச் சம்பாதித்தார்கள் என்பதைக் கேள்விப்பட்டு ஆச்சரிய மடைந்தார்கள். செட்டாகப் பணத்தைச் செலவழித் தவர்கள் அவர்களுடைய ஆடம்பரச் செலவைக் கண்டு அவர்களை வெறுக்கலானுர்கள். பெரிய பணக்காரர்கள் முதல் ஏழைகள் இறுதியாகவுள்ள எல்லா ஜனங்களுமே அவர்களை வெறுத்தும், அவமதித்தும் வந்தார்கள். அவர்களுடைய நடை உடைகளைப்பற்றிய விஷயங் களும், அவர்கள் பணம் சம்பாதித்த விதங்களைப்பற்றிய விஷயங்களும் பிற்காலத்தில் எழுதப்பட்ட நூல்களில் வெளி வந்தன.

மேற்கூறியபடி இந்தியாவுக்குப் போய்வந்து, இங்கிலாந்து ஜனங்களால் அவமதிக்கப்பட்டவர்களில் கிளைவும் ஒருவரே. அவர் விசேஷ சாமர்த்தியமும், கீர்த்தியும், தனமும், அந்தஸ்தும் வாய்ந்தவரா யிருந் தாலும், அவர் தம் திரவியத்தைப் பிரயோகம் செய்த முறை ஜனங்களிடத்தே பொருமையைக் கிளப்பிவிட் டது. அவர் மிகவும் ஆடம்பரமாக வசித்து வந்தார். ஷிராப்ஷையர் (Shropshire) என்ற இடத்தில் ஒரு

மாளிகையையும் கிளேர்மாண்ட் (Claremont) என்ற இடத்தில் வேறொரு மாளிகையையும் கட்டிக்கொண்டார். பார்லிமெண்டிலும் அவருக்கு அதிகமான செல்வாக்கு இருந்தது. ஆனாலும், அவருக்குப் பகைவர்கள் இருந்துகொண்டே இருந்தார்கள். அவருடைய உறவினர்களிலும் சிலர் அவர்பால் பொறாமை கொள்ளலாயினர். அவர் பல நற்குணங்களை யுடையவரானாலும் ஜனங்கள் அவ்வாறு பொறாமை கொள்ளுவதற்கேற்பச் சில தகுதியில்லா நடக்கைகளும் அவரிடமிருந்தன. அவர் இந்தியாவிலிருந்த காலத்தில் ஆடம்பரமில்லாமலே யிருந்தார். அப்படி யிருந்தவர் இங்கிலாந்துக்கு வந்ததும் அளவற்ற ஆடம்பரங்களைச் செய்ய ஆரம்பித்து விட்டார். இவையே இங்கிலாந்து ஜனங்கள் வெறுப்படைவதற்கு ஏதுவாயின. அதோடு அவர் இந்தியாவில் இருந்தபோது மிகவும் அநியாயமான காரியங்களைச் செய்தார் என்று சிலரால் பொய்க் கதைகளும் கட்டிவிடப்பட்டன. அவர் செய்யாத செயல்களும் அவர் தலைமேல் பலரால் சுமத்தப்பட்டன. இந்தியாவில் ஆங்கிலேயர்கள் செய்த அக்கிரமச் செயல்கள் எல்லாம் அவரால் செய்யப்பட்டனவென்று பலர் கருதினர். அவர் இந்தியாவில் இல்லாத காலத்தில் நடைபெற்ற செயல்களுக்கும் அவரே காரணமென அவர் மீது குற்றஞ் சாற்றப்பட்டது. அவர் கம்பெனி உத்தியோகஸ்தரிடமிருந்த எந்தெந்தக் குற்றங்களை இந்தியாவில் கண்டித்தாரோ அந்தக் குற்றங்களெல்லாம் அவர்மேல் சுமத்தப்பட்டன. இந்தியாவில் ஆங்கிலேயர்கள் செய்த குற்றங்கள் எல்லாம் அவர் தூண்டுதலின் மேல் செய்யப்பட்டன என்ற அபிப்பிராயம் இங்கிலாந்து ஜனங்களிடம் உண்டாயிருந்தது.

கிளைவ் இந்தியாவை விட்டுச் சென்றபின், அவ ரால் ஏற்படுத்தப்பட்ட சீர்திருத்தங்கள் அங்கே சரியாய் அமுலுக்கு வாராமல் போய்விட்டன. கம்பெனி உத்தி யோகஸ்தர்கள் அவருடைய கொள்கைகளைப் பெரும் பாலும் விட்டுவிட்டுத் தங்களுக்குத் தோன்றியபடி காரியங்களைச் செய்தார்கள். அவர் எந்தெந்தக் கெடு தல்களை ஒடுக்கினரோ அக் கெடுதல்களை மறுபடியும் அவ் வுத்தியோகஸ்தர்கள் செய்ய ஆரம்பித்தனர். கடை சியில் அரசாங்கத்தினால் தடுக்கமுடியாத ஒரு சம் பவம் ஏற்பட்டது. அது யாதெனின், 1770-ம் வரு டத்தில் மழைபெய்யாமற் போய்விட்டது; அதனால் பூமியெல்லாம் காய்ந்துவிட்டது; குளங்களிலும், ஆறு களிலும் தண்ணீர் இல்லை; இக்காரணங்களால், கங் கைப்பிரதேச முழுமையிலும் பஞ்சம் உண்டாயிற்று. வெளிவாராதிருந்த கோஷாஸ்திரீகளும், இக்கடுமை யான பஞ்சத்தைத் தாங்கமுடியாமல் தெருக்களில் வந்து கண்ணீர்விட்டழுதபடியே போவார் வருவார்க ளிடமெல்லாம் தங்கள் குழந்தைகளுக்காக ஒரு பிடி அரிசி கொடுக்கும்படி கேட்பாராயினர். ஹுக்ளி நதி யில் ஆங்கிலேயர் இருந்த இடத்திற் கருகில் தினந் தோறும் பசிக் கொடுமையால் இறந்த மனிதரின் ஆயிரக் கணக்கான பிரேதங்கள் மிதந்து சென்றன. கல்கத் தாவின் தெருக்களில் அநேகர் இறந்து கிடந்தனர்; சிலர் இறக்குந் தறுவாயில் மயங்கிக் கிடந்தனர்.

பஞ்சத்தின் கொடுமையால் சாகாமல் எஞ்சி யிருந் தவர்கள், செத்துப்போனவர்களைத் தூக்கிக்கொண்டு போய் அப்புறப்படுத்துவதற்கும், அப்பிணங்களைத் தின்னக் காத்துக் கொண்டிருந்த கழுகுகளையும், நரிகளை

யும் தூக்துவதற்கும் சக்தியில்லாதவர்களா யிருந்தார்கள். பஞ்சத்தினால் இறந்தவர்களின் தொகையை அளவிட்டு உரைத்தல் முடியாது. ஜனங்கள் லட்சக் கணக்காய் இப்பஞ்சத்தில் மாண்டார்கள். இவ்வாறு இந்தியாவில் பஞ்சம் எற்பட்ட விஷயமும் இங்கிலாந்திலிருந்த கிளைவின் பகைவர்கள் அவர்மீது குறை கூறுவதற்கு அனுகூலமாகவே யிருந்தது. இப்பஞ்சத்தினால், இங்கிலாந்திலிருந்த ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் பங்குக்காரர்கள் தங்களுக்குப் பங்கு வருமானம் எங்கே வாராமல் போகிறதோ வென்று ஐயங்கொண்டார்கள். பஞ்சத்தால் லட்சக் கணக்கானவர்கள் மடிந்ததைக் கேட்டு இங்கிலாந்து மக்கள் பெரிதும் விசனப்பட்டார்கள். கம்பெனியைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் நாட்டிலிருந்த அரிசிகளை யெல்லாம் வாங்கி வைத்துக்கொண்டு மேற்படி பஞ்சகாலத்தில், வாங்கின விலைக்குமேல் பன்னிரண்டு பங்கு இலாபம் வைத்து விற்றார்க ளென்றும் சிலரால் ஒரு கதை கட்டிவிடப்பட்டது.

அந்தப் பஞ்சம் எற்படுமுன் ஒரு காசுக்குக்கூட வழியில்லாமலிருந்த கம்பெனி உத்தியோகஸ்தன் ஒருவன் பஞ்சம் எற்பட்டபின் அறுபதினாயிரம் பவுன்களைச் சம்பாதித்துத் தன் ஜன்ம தேசத்துக்கு அனுப்பினான் என்றும் ஒரு வதந்தி உலாவிற்று. மேற்கூறிய கதைகளும், வதந்திகளும் ஆதாரமற்றவை. கிளைவ் இந்தியாவை விட்டுச் சென்றபின் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் அரிசி வியாபாரத்தில் தலையிட்டார்கள் என்பது உண்மையா யிருக்கலாம்; அதனால் அவர்கள் இலாபமும் அடைந்திருக்கலாம். ஆனால், இயற்கை

யாக எற்பட்ட பஞ்சத்திற்கு அவர்கள்தான் காரணம் என்று சொல்வது பொருந்தாது. ஆகையால், கம்பெனி யின் உத்தியோகஸ்தர்கள் மீது குறை கூறுவது பொருந்தாததாகும். அப்படி யிருந்தும் ஆடம் ஸ்மித் தை(Adam Smith)ப் போன்ற பெரிய மேதாவி களுங்கூட பஞ்சத்திற்குக் காரணம் ஈஸ்ட் இந்தியா கம்பெனி உத்தியோகஸ்தர்களே என்று கருதினார்கள். இச்சம்பவங்கள், கிளைவின்மீது இங்கிலாந்து ஜனங் களுக்கிருந்த வெறுப்பை அதிகப்படுத்தி விட்டன. பஞ்சம் எற்பட்டபோது கிளைவ் இங்கிலாந்தி லிருந்தார். அவர் செய்த சீர் திருத்தங்களால் பஞ்சம் எற்பட வில்லை. கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் மேற் கூறியபடி அரிசி வியாபாரம் செய்திருந்தால் அது, கிளைவ் செய்த எற்பாடுகளுக்கு விரோதமான தாகும். அப்படி யிருந்தும், இங்கிலாந்தி லுள்ளவர்கள், இந்தி யாவிலிருந்த கம்பெனி உத்தியோகஸ்தர்களின் மேல் பொதுவாகக் கொண்டிருந்த பகைமையாலும், வெறுப் பினாலும், அவர்களில் கிளைவை முதன்மையானவர் என்று கருதியதாலும், வங்காளத்தில் எற்பட்ட பஞ் சத்திற்கு அவரே காரணமெனக் கருதினார்கள்.

## அத்தியாயம் 22.

### இந்திய விஷயங்களைப் பற்றிய விசாரணை

1772-ம் வருடம் வரை பார்லிமெண்டார் இந்திய விஷயங்களில் கவலை செலுத்தாம லிருந்தார்கள். இரண்டாவது ஜார்ஜ் அரசர் இறந்ததிலிருந்து ஏற்பட்ட மந்திரிகள் திறமை யற்றவர்களா யிருந்ததனுல் அவருடைய ஆட்சியில் கஷ்டங்கள் ஏற்பட்டன. அதனுலேயே அவர்கள், இந்திய விஷயங்களைப் பற்றிக் கவனிக்க அவகாசமில்லாமல் போயிற்று. எனினும், சில சமயங்களில் அவர்கள் அவ்விஷயங்களைச் சிறிது கவனித்தார்கள். அவ்வாறு கவனித்தபோதும் அதிகப் பயன் ஏற்படவில்லை. மூன்ருவது ஜார்ஜ் அரசருடைய ஆட்சியின் முதற்பாகத்தில் அதாவது 1766-ம் வருடத்தில் லார்டு சாதம் அல்லது வில்லியம் பிட் என்னும் மந்திரி, கம்பெனியார் இந்தியாவில் சம்பாதித்த மாகாணங்களின் விஷயமாகத் தகுதியான ஓர் ஏற்பாட்டைச் செய்ய எண்ணினுர். ஆனுல், அவருக்கு ஏற்பட்டிருந்த காசநோய் அவருடைய எண்ணம் பூர்த்தியாகாதபடி செய்து விட்டது.

அதற்குப் பின் 1772-ம் வருடத்தில், பார்லிமெண்டார் இந்தியாவைப் பொறுத்த விஷயங்களைக் கவனித்தார்கள். அக்காலத்தி லிருந்த மந்திரி சபை திறமை வாய்ந்ததா யிருந்தது. அச்சந்தர்ப்பத்தில் உள்நாட்டு விஷயங்களும், ஐரோப்பிய விஷயங்களும் சீரான நிலையிலிருந்தபடியால் அம்மந்திரிகள் அவற்றில் கவனம் செலுத்தவேண்டிய அவசியமில்லாம லிருந்தது. மிடில்-ஸெக்ஸ் (Middlesex) ஜில்லா எலெக்ஷனைப் பற்றி

ஏற்பட்ட கிளர்ச்சியும் ஒடுங்கியிருந்தது; அமெரிக்காவில் ஏற்பட்ட கிளர்ச்சியும் அதிகரிக்கவில்லை. இத்தகைய சௌகரியங்கள் ஆட்சியாளர்க்கு ஏற்பட்டிருந்ததாலும் கம்பெனியின் வருமானம் குறைவுற்றிருந்ததாலுமே, பார்லிமெண்டார் அவ்விஷயத்தைக் கவனிக்கும்படி மந்திரிகளை வற்புறுத்தினர்கள். அதனல் மந்திரிகள் அவ்விஷயத்தில் தலையிட்டார்கள். எல்லா விஷயங்களும் சேர்ந்து கிளைவுக்கு உபத்திரவத்தை யுண்டாக்கின.

அச்சந்தர்ப்பத்தில் கிளைவின் நிலை பரிதபிக்கக் கூடியதாயிருந்தது. இங்கிலாந்து முழுவதிலும் அனைவரும் அவரை வெறுத்தார்கள். லண்டனில், கம்பெனியின் காரியாலயத்தி லிருந்தவர்களும் அவரை வெறுத்தார்கள். இந்தியாவில் அவர்மீது விரோதங்கொண்டிருந்த கம்பெனியின் உத்தியோகஸ்தர்களும் அவருக்குத் தீமை விளைவிக்கக் கங்கணங் கட்டிக்கொண்டிருந்தார்கள். அவர் இந்தியாவிற்செய்த சீர்திருத்தங்களையும் கெட்டவை யென்றே பிரஸ்தாபித்து அவரைத் தூஷித்தார்கள். எந்தக் கட்சியாரும் அவரை ஆதரிக்கவில்லை; அவர் சேர்ந்திருந்த ஜார்ஜ் கிரன்வில் கட்சியார் அரசாங்கத்துக்கு விரோதமாயிருந்தார்கள். ஆனாலும், அக்கட்சியார்கள் அரசாங்கத்துக்கு விரோதமான எக்கட்சியிலும் சேராமல் இருந்தார்கள். அக்காலத்தில், ஜார்ஜ் கிரன்வில் இறந்துவிட்டார். அவருடைய கட்சியினர் வெவ்வேருய்ப் பிரிந்துவிட்டனர். ஆகவே, அவர் உதவி பெற்றுப் பார்லிமெண்டில் மெம்பராயிருந்த சிலர் மட்டும் அவர் சார்பி லிருந்தார்கள். அவர் இந்தியாவில் செய்த சீர்திருத்தங்களைக் கண்டு அவர்மீது விரோதங் கொண்டவர்கள், அவரை அடியோடு ஒழித்துவிடத்

தீர்மானித்தார்கள்; அவருடைய கீர்த்தியையும், செல்வத்தையும் அழித்துவிடவும் எண்ணினர்கள்; அவரைப் பார்லிமெண்டிலிருந்து ஒழிக்கவும், அவருடைய ஜாகிரைப் பறிமுதல் செய்யவும் கருதினர்கள்.

•

மேற்கூறியபடி கிளைவுக்கு விரோதமான காரியங்கள் நடந்துகொண்டிருக்கையில், அவர், இராணுவத்தில் சாமர்த்தியமாகக் காரியங்களை நடத்தியதைப் போலவே, பெரும்பாலும் தமக்கு விரோதமாயிருந்த பார்லிமெண்டிலும், காரியங்களை நடத்த ஆரம்பித்தார். அவருக்குப் பெரும்பான்மையும் பக்கபல மில்லாமலிருந்தும், அவர் எதற்குஞ் சோர்வுறாது தைரியமாகவே எதிரிகளுடன் வாதாடினர். அவர் தம்மீது சாற்றப்பட்ட குற்றங்கள் ஆதாரமற்றவை என்று கூறினர். அவர் பேச்சைக் கேட்டதும் பார்லிமெண்ட் அங்கத்தினர் அவர்மீது அன்பு கொண்டார்கள். அவருடைய சாதுரியப் பேச்சானது பலரும் விரும்பக்கூடியதா யிருந்தது. அதனல், மிகவும் பிரக்கியாதி பெற்றிருந்த லார்டு சாதம் என்பவரும் அன்று காமன்ஸ் சபைக்குப் போய் கிளைவினுடைய பிரசங்கத்தைக் கேட்டு "இதைப்போன்ற பிரசங்கத்தை எப்போதும் நான் கேட்டதில்லை" என்று கூறினர். அவர் அங்ஙனம் கூறியது கிளைவினுடைய சொற்படி அச்சிடப்பட்டு ஜனங்களுக்கு வழங்கப்பட்டது. கிளைவ் மேற்கூறியபடி பேசியதில் தாம் கடைசி முறையாக வங்காளத்தில் செய்த சீர்திருத்தங்களையே விசேஷமாக விளக்கிக் காட்டினர். அதில் எதிரிகள் குற்றங் கண்டுபிடிப்பதற்கு வழி இல்லை. அங்ஙனம் வழி இல்லாமற் போகவே, அவருடைய பகைவர்கள் இந்தி

யாவில் அவர் ஆரம்ப காலத்தில் செய்த காரியங்களைப் பற்றிக் குறை கூறினார்கள்.

அப்படி அவர்கள் கிளைவின்மீது குற்றமாகக் கூறிய விஷயங்களை விசாரிப்பதற்கு ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அக்கமிட்டியார் ஸூராஜ-வுட்-டவுலாவை அரசாட்சியினின்று நீக்கி, மீர்ஜாபரை நவாபாக நியமித்துக் கொஞ்சகாலங் கழித்து அவரையும் அப்பதவியினின்று நீக்கிய விஷயங்களையும், ஓமிச்சண்ட் முதலியவர்களுடைய விஷயங்களையும் கிளைவினிடம் விசாரித்தார்கள். அப்படி விசாரிக்குங் காலத்தில் அவர்கள் கிளைவின் விஷயத்தில் ஒரு சிறிதும் இரக்கங் காட்டாமல் குற்றங் கண்டுபிடித்து அவரைத் துன்பத்திற்கு உள்ளாக்க வேண்டுமென்று எண்ணிக் கடினமாக நடவடிக்கை நடத்தினார்கள். அதைப்பற்றிக் கிளைவ் ஒரு சந்தர்ப்பத்தில் கமிட்டியார், தம்மை, ஆடு திருடிய ஒரு கைதியை நடத்துவதுபோல் நடத்தினர்கள் என்று கூறியுள்ளார். கமிட்டியார், மேற்கூறியபடி கேட்ட கேள்விகளுக்குக் கிளைவ் சரியான விடையளித்தார். அவ்விடைகளிலிருந்து அவர் இந்தியாவில் செய்த சில காரியங்கள் ஒழுங்கு தவறியவைகளாகக் காணப்படினும் சந்தர்ப்பம் நோக்கிச் செய்யப்பட்டனவாதலின் நியாய விரோதமானவை யாகாவென்பதும், அவர் நியாயந்தவறி எதையும் செய்யாதவரென்பதும் விளங்கின. தாம் ஓமிச்சண்டை ஏமாற்றியது உண்மைதானென்றும், அதனால் தமக்கு அகௌரவம் ஏற்படாதென்றும், மேலும் அம்மாதிரியான சந்தர்ப்பம் ஏற்பட்டால் அப்போதும் அதைப்போலவே தான் காரியம் நடத்தக்கூடு மென்றும், அவர் கூறினர். மீர்ஜாப

ரிட மிருந்து அளவு கடந்த திரவியங்களைப் பெற்றது உண்மையே யென்றும், ஆனால் அதன் பொருட்டுத் தாம் நீதிமார்க்கத்தினின்றும் பிறழவில்லை யென்றும், அதைப்பற்றித் தம்மைப் பலரும் புகழ்ந்தார்க ளென்றும் கூறினர். பிளாஸி யுத்தத்தின் வெற்றியால் தமக் கேற்பட்ட உன்னத நிலையை எடுத்துரைத்து, அந்நிலையில் தாம் இஷ்டப்பட்டிருந்தால் எவ்வளவோ பணத்தைச் சம்பாதித்திருக்கலாம் என்றும், ஆனால் தாம் அத்தகைய பேராசையைக் கொள்ளவில்லை யென்றும் கூறி, முடிவில், அக்கமிட்டித் தலைவரை நோக்கி, "தலைவரவர்களே! ஈசன் சாட்சியாக அக்காலத்தில் நான் பேராசை யில்லாமல் நடந்துகொண்டதை இப்போது நினைத்தாலும் எனக்கு வியப்புண்டாகிறது" என்று கூறி முடித்தார்.

அன்று விசாரணை முடியவில்லை. கமிட்டியார் கலைந்து மற்றொரு சமயம் கூடி விசாரணையை முடித்தார்கள். அவ்விசாரணையின் முடிவில் பாரபக்ஷமில்லாத மனிதர்கள் கிளைவினுடைய உண்மையான தன்மைகளைத் தெரிந்துகொண்டார்கள். அவர் செய்த சில காரியங்கள் குற்றமுடையனவாகச் சிலருக்குக் காணப்படினும், அவை அத்தன்மையன அல்லவென்பதும், புத்திசாலித்தனமாகவும் தீரமாகவும் அவர் அக்காரியங்களைச் செய்திருக்கிறார் என்பதும், அவர் தம்முடைய தேசத்திற்காகவும், இந்திய மக்களுக்காகவும் உண்மையாக உழைத்திருக்கிறார் என்பதும், அவர் மீர்ஜாபரிடமிருந்து பணம் வாங்கியதற்காகவாவது ஓமிச்சண்டை எமாற்றியதற்காகவாவது விசாரிக்கப்படவில்லை யென்பதும், அவர் கம்பெனி உத்தியோகஸ்தர்களின் பேராசை

யையும் கொடுமையையும் ஒழிக்கத்தக்க சீர்திருத்தங்களை இந்தியாவில் செய்ததற்காகவே அவர்மீது விரோதங் கொண்ட அவ்வுத்தியோகஸ்தர்களின் 'முயற்சியால் இவ்விவகாரம் தொடரப்பட்டது என்பதும் விளங்கின.

ஒரு சாதாரண மனிதன்மீது குற்றம் ஏற்பட்டால் அதை நியாயாதிபதி விசாரிக்குங் காலத்தில் அவன் முன்னே நற்காரியங்களைச் செய்திருந்தாலும் அவற் றைக் கவனிப்பதில்லை. அக்குற்றவாளி எத்தகைய கௌரவம் வாய்ந்தவனு யிருந்தபோதிலும் அக்குற்றத் திற்காக அவர்கள் அவனைத் தண்டனைக்குள்ளாக்கி விடு வார்கள். இத்தகைய வழக்கத்தைத் தேச நன்மைக்குப் பாடுபட்ட கிளைவ் போன்ற பெருங் குணமுடையவ ரிடத்துக் கொள்ளக்கூடாது. அத்தகையவர்மீது குற்றஞ் சாற்றப்படும்போது அவர்கள் செய்த நற்காரியங்களை யும், துஷ்காரியங்களையும் சீர்தூக்கிப் பார்த்து அவைக ளில் நற்காரியங்கள் அதிகமா யிருந்தால் அவர்களை அக் குற்றமில்லாதவரென்று விடுதலை செய்வதுடன் அவர் கள் செய்த காரியங்களைக் கொண்டாடியும் பேசவேண் டும். 'குற்றஞ் செய்வது மானிடர்களுக்கு இயற்கை' யென்று மில்டன் (Milton) என்ற மகா கவி கூறியுள் ளார். அதன்படியே அரும் பெருங் காரியங்களை முடித்த பெரிய மனிதர்களும் சிற்சில சமயங்களில் சிறு சிறு தவறுகளைச் செய்துவிடுவது உலக இயற்கை. அவ் வாறு அவர்கள் செய்யினும் அச்சிறு குற்றங்கள் மனித ரால் பாராட்டப் படுவதில்லை.

ஸ்காட்லண்டு தேசத்தை நல்ல நிலையில் அமைத்த புரூஸ் (Bruce) என்பவரும், ஜெர்மனியைச் சீர்ப்படுத்

திய மாரீஸ் (Morris) என்பவரும், ஹாலண்டு தேசத்தை விருத்தி செய்த வில்லியம் (William) என்பவரும், இங்கிலாந்தில் குடியாசு ஆட்சியை ஸ்தாபித்த மூன்ரு வது வில்லியம் (William III) என்பவரும், பிளாரன்ஸ் நாட்டைக் காத்தவரான காஸ்மோ (Cosmo) என்ப வரும், ஸ்காட்லண்டு தேசத்து அரசாகிய ஏழாவது ஜேம்ஸ் என்பவரின் இளமைப்பருவத்தில் அவருக்குப் பதிலாய் ரீஜண்ட் பதவியிலிருந்து காரியங்களை நடத்திய மர்ரே (Murray) என்பவரும், பிரான்ஸ் தேசத்தின் நாலாவது ஹென்றியும் (Henry IV), ருஷ்யாவின் பீட் டரும் (Peter the Great) சில சந்தர்ப்பங்களில் குற் றங்களைச் செய்தவர்களே. அங்ஙனம் குற்றங்களைச் செய்தவர்களா யிருந்தாலும் இத்தகையோர்களைப் பற்றிச் சரித்திரக்காரர்கள் இழித்துக் கூறவில்லை; உயர்ந்த அபிப்பிராயங்களையே கூறியிருக்கின்ருர்கள். ஆகை யால், கிளைவைப் போன்ற பெரியார் செய்கைகளைப் பற்றி விசாரணை செய்வோர் மேற்கூறிய முறையை அனுசரிக்கக்கூடியவர்களா யிருக்கவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அவர்களுடைய தீர்மானங்கள் பிற் காலத்தினரால் உயர்ந்தனவாக மதிக்கப்படமாட்டா. எனவே மேற்கூறிய கமிட்டியார் கிளைவ் விஷயத் தில் ஒருவாறு குற்றம் பாராட்டவில்லை. ஆனுலும், அவர்கள் கிளைவ் நிரபராதி என்று தீர்மானமாகக் கூறி விடவும் துணியவில்லை; அவருடைய பகையாளிகளின் இஷ்டப்படி பூரணக் குற்றவாளியென்று தீர்மானித்து விடவுமில்லை. இங்கிலாந்தின் பிரதம மந்திரியாயிருந்த லார்டு நார்த் (Lord North) அவரோடு நேசமில்லாத வாயிருந்தும் அவர்மீது பூரணமாகக் குற்றஞ் சாற்ற இஷ்டப்படவில்லை. கிளைவ் மீது வழக்குத் தொடரப்படு

வதற்கு முன்னமே அவருக்கு 'நைட் ஆவ் தி பாத்' (Knight of the Bath) என்ற பட்டம் அரசரால் வழங்கப்பட்டிருந்தது. இந்த விசாரணையின்போது அவர் அப்பட்டத்திற்குரிய மரியாதைகளைப் பெற்று அரசரால் கௌரவிக்கப்பட்டார். அதற்குப் பின் கொஞ்ச நாட்களுக்குள் அவர் ஷிராப்ஷையர் மாகாணத்தின் லார்டு லெப்டினண்டாக (அதிபதியாக) நியமிக்கப்பட்டார். அப்பதவியை இங்கிலாந்தின் அரசராயிருந்த மூன்றாவது ஜார்ஜ் என்பவரே அவருக்குக் கொடுத்தார். அப்போது அவரிடத்தில் அம்மன்னர் அன்புடையவராகவே யிருந்தார். கிளைவ் அப்பதவியை ஏற்றுக்கொண்டபின் ஒரு சமயம் அரசரைப் பேட்டி கண்டார். அப்போது அரைமணி நேரத்திற்குமேல் அம்மன்னர் இந்திய விஷயங்களைப் பற்றிக் கிளைவுடன் பேசினார். அவர் தாம் இந்தியாவில் இங்கிலாந்துக்காகச் செய்த காரியங்களையும், அவற்றிற்காகத் தாம் அடைந்து வரும் கஷ்டங்களையும் விவரமாக எடுத்துக் கூறினார். அவைகளைக் கேட்டு அரசரும் அவர்மீது அனுதாபங் காட்டினார்.

கிளைவை விசாரித்த கமிட்டியார் அவர் செய்த குற்றங்களடங்கிய ஜாபிதா ஒன்றைத் தயாரித்தனர். அதன் நகல் ஒன்று கமிட்டித் தலைவரால் காமன்ஸ் சபையில் ஆஜர் செய்யப்பட்டது. அக்கமிட்டியின் தலைவர் பர்க்காயன் (Burgoyne) என்பவர்; அவர் புத்தி சாதுரியமும், கௌரவமும், ஆடம்பரமும் உள்ளவர். நாடகங்கள் எழுதுவதிலும் பேர் போனவர். தைரியம், வீரம் முதலான குணங்களையும் கொண்டவர். அவருடைய திறமையை அனைவரும் மெச்சுவது வழக்கம். கிளைவின்

மீது குற்றஞ் சாற்றியவர்களில் அவர்தான் முதன்மை பெற்றவர். காமன்ஸ் சபையில் கிளைவின் குற்றங்களைப் பற்றிய விசாரணை நடந்தது. மந்திரிகளிற் சிலர் அநுகூலராயும், சிலர் பிரதிகூலராயு மிருந்தார்கள். அக்காலத்தில் அரசாங்க விஷயங்களல்லாத மற்ற விஷயங்களில் மந்திரிகள் தங்களிஷ்டம்போல் அபிப்பிராயங்களை வெளியிடலாமென்ற ஏற்பாடிருந்தது. அதனாலேயே அவர்கள் கிளைவ் விஷயத்தில் மேற்கூறியபடி அபிப்பிராயமுள்ளவர்களா யிருந்தார்கள். அரசாங்க அட்டர்னி ஜெனரலான தர்லோ (Thurlow) என்பார் கிளைவுக்கு விரோதமாகப் பேசினார். சொலிசிட்டர் ஜெனரலான வெட்டர்பர்ன் (Wedderburne) என்பவர் கிளைவினுடைய கட்சியில் இருந்து அவர்மேல் சுமத்தப்பட்ட குற்றங்களை மறுத்துச் சாதுரியமாயும் விவேகத்துடனும் வாதாடினார். கிளைவும் தம்மீது சுமத்தப்பட்ட குற்றங்களை மறுத்துக் காமன்ஸ் சபையில் பேசுகையில் அதிக தீரத்துடனும், சோகத்துடனும் பேசினார். அவர் தாம் செய்த நற்காரியங்களையும் தீயகாரியங்களையும் உள்ளவாறு எடுத்துரைத்துக் கடைசியில் கமிட்டி அங்கத்தினர்களைப் பார்த்து, "நீங்கள் நடுநிலைமையோடு இவற்றை ஆராய்ந்து என்னுடைய கௌரவத்திற்கும் உங்களுடைய கௌரவத்திற்கும் தக்கபடி தீர்மானஞ் செய்யவேண்டும்" என்று கூறிவிட்டு வெளியேறினார்.

அரசாங்க இராணுவ வீரர்களின் உதவியைக் கொண்டு இந்தியாவில் கைப்பற்றப்பட்ட நாடுகள், அரசாங்கத்துக்கே உரியனவென்றும், அத்தகைய நாடுகளைக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய சொந்தச் சொத்துக்களாகப் பாவிப்பது சட்ட விரோதமான

தென்றும், அவ்விதியை வங்காளத்திலிருந்த கம்பெனி யின் உத்தியோகஸ்தர்கள் மீறி நடந்திருக்கிறார்க ளென்றும், அது தவறென்றும் காமன்ஸ் சபையார் அன்று தீர்மானித்தார்கள். பின்னர் சில தினங்கள் கழித்து, "கிளைவ் தமக்கிருந்த இராணுவ அதிகாரத்தைக் கொண்டு மீர்ஜாபரிட மிருந்து ஏராளமான தொகை யைக் கைக்கொண்டார்," என்றும் தீர்மானித்தார்கள். அச்சபையாருடைய தீர்மானங்கள் இம்மட்டோடு நின்றுவிட்டன. அதன்மேல் லார்டு கிளைவ் தம்முடைய அதிகாரத்தைக் கெட்டவழிகளில் செலுத்திக் கம்பெனி யின் உத்தியோகஸ்தர்களுக்குக் கெட்ட வழியைக் காட் டினார் என்று சிலர் ஒரு தீர்மானங் கொண்டுவந்தார் கள். அதன்மேல் மேற்கூறிய தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டுச் சபையாரால் அங்கிகரிக்கப்பட்டது. பிறகு வெட்டர்பர்ன் என்பவர் எழுந்து, கிளைவ் தாம் செய்த குற்றங்களுடன் தம்முடைய நாட்டிற்கு உயர்வுண்டா கத்தக்க வழியில் அபாரமான காரியங்களையும் செய் திருக்கிறார் என்று ஒரு தீர்மானங் கொண்டு வந்தார். இத்தீர்மானம் எல்லாராலும் ஏகமனதாக ஒப்புக்கொள் ளப் பட்டது.

காமன்ஸ் சபையார் தங்களுடைய கௌரவத்திற் கும், நீதிக்கும், விவேகத்திற்கும் பாதகம் நேராத முறை யில் கிளைவ் விஷயத்தில் நடந்து கொண்டார்கள், அவர்களுக்கு அவரைக் கெடுத்துவிடவேண்டு மென்ற எண்ணமில்லை.

## அத்தியாயம் 23.

### கிளைவின் மரணம்.

கிளைவைப்பற்றி விசாரணை செய்த காமன்ஸ் சபையார் அவருடைய சொத்துக்களையாவது, அவருக்கு ஏற்பட்டிருந்த கௌரவங்களையாவது குறைக்கவில்லை. அவருக்கு நண்பர்களும், சுற்றத்தார்களும் அதிகமாக ஏற்பட்டார்கள். ஆனாலும், மேற்கூறியபடி நடந்த விவகாரங்களால் அவருடைய மனதில் சஞ்சலம் ஏற்பட்டு வளர்ந்துகொண்டே இருந்தது. சிறு வயதிலிருந்தே சில சந்தர்ப்பங்களில் ஏற்பட்ட மன வருத்தங்களுக்காகத் தம் உயிரைப் போக்கிக் கொள்ளத் துணியும் வழக்கம் அவரிடத்தில் இருந்து வந்தது. அவர் சென்னையில் குமாஸ்தாவாக இருந்த காலத்தில் இரண்டு தடவைகளில் உயிரைப் போக்கிக்கொள்ள எண்ணினர். எனினும், அடுத்த சமயம் அவருக்கு ஏற்பட்ட நிலை அவருடைய மனதில் சந்தோஷத்தை யுண்டாக்கி விட்டது. அதனால் அவர் அங்ஙனம் தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்தை மாற்றிக் கொண்டார். இந்தியாவில் அவர் பெரிய காரியங்களில் சம்பந்தப்பட் டிருந்ததாலும், இங்கிலாந்தில் மிகுந்த செல்வத்தை அனுபவித்துக்கொண் டிருந்ததாலும் அவருக்குப் பெரும்பான்மையும் சஞ்சலம் ஏற்படவில்லை. அதனாலேயே அவர் முந்திய காலத்தைப்போல் உயிரைப் போக்கிக்கொள்ளும் விஷயத்தில் கருத்தைச் செலுத்தாமல் இருந்து வந்தார். ஆனல், அவர்மீது மேற்கூறியபடி ஏற்பட்ட வழக்கு விசாரணை நடந்தபின் அவருக்கு மன நிம்மதி இல்லாமற் போயிற்று. உலக வாழ்க்கையில் வெறுப்புண்டாயிற்று. அதனல் மழை

முகங் காணாத செடி வாட்டமடைவதைப்போல் அவருடைய ஊக்கம் குறைந்தது. அவருடைய பகைவர்கள் அவரைத் துன்புறுத்திய மாதிரியும், கமிட்டியார் அவர் மீது குற்றங் கண்டுபிடிக்க வேண்டுமென்ற கருத்துடன் அவரை விசாரணை செய்ததும், காமன்ஸ் சபையாரும் அவர் மீது சாற்றிய சில குற்றங்களை ஒப்புக் கொண்டதும், அவருடைய நாட்டினரில் பெரும்பான்மையோர் அவரைக் கொடியர் என்று எண்ணியதும் அவருக்கு ஆறாத துக்கத்தை விளைவித்தன. அத்துடன் அவருக்கு உடம்பிலும் நோய் ஏற்பட்டுக் கஷ்டத்தை யுண்டாக்கிற்று. அவர் இந்தியாவில் இருந்த காலத்தில், மனக் கலக்கம் ஏற்படும் சமயங்களில் அதை மாற்றிக் கொள்ள அபின் உபயோகிப்பது வழக்கம். அப்பழக்கம் நாளாவர்த்தியில் அவருக்கு அதிகமாகிவிட்டது. ஆதலால், இந்தக் கலக்கமான சமயத்தில் அவ்வழக்கப்படி அபினை அதிகமாக உபயோகித்தார். ஆனால், கடைசி வரையிலும் அவருடைய விவேகமானது குறைவுபட வில்லை. சிற்சில சந்தர்ப்பங்களில் அவர் தம்முடைய புத்தித் திறமையைக் காட்டிக்கொண்டிருந்தார். அவர் சஞ்சலத்தினால் சில சந்தர்ப்பங்களில் மணிக்கணக்காகச் சும்மா உட்கார்ந்திருப்பார். பின் பேசவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டபோது கியாதி அடைந்த ஒரு தளகர்த்தனைப் போலவும், இராஜ தந்திரியைப் போலவும் பெரிய விஷயங்களைப் பேசிவிட்டு மறுபடியும் சஞ்சலத்தில் ஆழ்ந்து விடுவார்.

அக்காலத்தில் அமெரிக்காவில் ஏற்பட்ட கிளர்ச்சி அதிகரிக்கவே இங்கிலாந்து அரசாங்கத்தார் அவர்களுடன் யுத்தஞ்செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்

டது. ஆகளுல், மந்திரிகள் கிளைவினுடைய உதவியைப் பெற எண்ணினர்கள். அவர், பிளாஸியில் யுத்தம் நடந்த போதும், ஹூக்ளி நதிக்கரையில் டச்சுக்கார ரின் கப்பல்களைத் தாக்கியபோதும் கொண்டிருந்த மனே திடத்தையும் விவேகத்தையும் இப்போதும் கொண் டிருந்தால் அந்த அமெரிக்கர்களின் கிளர்ச்சியை ஒடுக்கி விட் டிருக்கக்கூடும். அமெரிக்காவும் இங்கிலாந்தினின்று அப்போது பிரிந்திருக்க மாட்டாது. ஆனுல், அவ ருடைய பலமெல்லாம் இப்போது குன்றி யிருந்தபடி யாலும், அவருடைய மனநிலை சரியாக இல்லாதபடியா லும் அவர் அதில் தலையிடவில்லை. இங்கிலாந்து சர்க் காருக்கு மேற்கூறிய அனுகூலங்கள் ஏற்படவுமில்லை. கடைசியில் அவர் தமக்கேற்பட் டிருந்த மிகுந்த மனக் கவலையால், 1774-ம் வருஷம் நவம்பர்மீ 22-ம் தேதி யன்று தம் கையாலேயே தம்முடைய உயிரை மாய்த் துக்கொண்டார். அவர் இறக்கும்போது அவருக்கு நாற்பத்தொன்பது வயது பூர்த்தியா யிருந்தது.

கிளைவுக்கு விரோதிகளா யிருந்த ஜனங்கள் அவர் அம்மாதிரி இறந்து விட்டதை யுணர்ந்து அவர் மீது கொண்டிருந்த துரபிப்பிராயங்களை ஸ்திரப்படுத்திவிட் டார்கள். கடவுள் தான் அவரை இவ்விதமாகத் தண் டித்து விட்டாரென்றும், அவருடைய குற்றங்களே அவரைத் தற்கொலை செய்து கொள்ளும்படி தூண்டின வென்றும் பேசிக்கொண்டார்கள். ஆனுல், அவர்க ளுடைய அபிப்பிராயம் சரியானதன்று. அவர் உலக வாழ்க்கையில் மிக்க வெறுப்புற்றதாலும், அவருடைய கீர்த்திக்குப் பங்கம் ஏற்பட்டதாலும், அவருக்குக் கொடிய வியாதி ஏற்பட்டதாலுமே அவர் மனத்துய

ரம் அதிகரித்து அதைச் சகிக்க முடியாமல் அவ்வாறு இறந்தார். கிளைவ் இந்தியாவில் சில தவறுகளைச் செய்தது உண்மையே; அவைகளை மறைக்க முடியாது. ஆனால், அவர் செய்த நற்காரியங்களையும் துஷ்காரியங்களையும், அம்மாதிரி அவர் அவற்றைச் செய்ய ஏற்பட்ட காரணங்களையும், அவற்றால் விளைந்த நன்மைகளையும் சீர்தூக்கிப்பார்த்தால் அவர் நல்லவரெனக் கருதத் தக்கவரே யாவர்.

கிளைவ் இந்தியாவுக்கு வந்தபின் இங்கிலீஷ்காரருடைய வீரச்செயல்கள் வெளிப்பட்டன; அவர் இந்தியாவுக்கு வருமுன், ஆங்கிலேயர்களை இந்தியர்கள் சாதாரண வியாபாரிகளென்றே மதித்து வந்தார்கள்; பிரென்சுக்காரர்கள்தான் சண்டையில் திறமை வாய்ந்தவர்களென்றும், ஜனங்களை அடக்கியாளும் வல்லமை பெற்றவர்களென்றும் எண்ணி யிருந்தார்கள். கிளைவினுடைய வீரமும் திறமையும் அந்த எண்ணத்தை ஒழித்துவிட்டன. ஆற்காட்டு முற்றுகையிலிருந்து அவரால் ஆங்கிலேயர்களுக்கு ஜயம் ஏற்பட்டு வந்தது. அவர் இராணுவ காரியங்களை நடத்தியபோது அவருக்கு வயது இருபத்தைந்து. இவ்வளவு சிறு வயதில் இத்தகைய திறமை ஒருவருக்கு வாய்ப்பது அரிது. அலெக்ஸாண்டர், கோண்டி, பன்னிரண்டாவது சார்லஸ் ஆகியவர்கள் இவரைக்காட்டிலும் சிறு பருவமுடையவர்களா யிருந்தபோதே யுத்தங்களில் வெற்றியடைந்திருக்கிறார்கள்; ஆனால், அவர்கள் தனியாய் அவ்வெற்றிகளை அடையவில்லை. அவர்களுடைய தளகர்த்தர்களின் சுறுசுறுப்பாலும், நுண்ணறிவாலும், போர்த்திறமையாலுமே அடைந்தார்கள்; அதனால்

அவர்கள் கிளைவுக்கு ஈடானவர்க ளாகமாட்டார்கள். ஆனால், கிளைவ் இராணுவ விஷயங்களில் ஒரு சிறிதும் அனுபவமில்லா திருந்தும், அவ் விஷயங்களில் மிக்க அனுபோக முடையவர்களைப்போல் நடந்து கொண்டார். அவரைப்போல் சாமர்த்தியசாலி யென்று பெயரெடுத்த தளகர்த்தர் நெப்போலியன் போனபார்ட் (Napoleon Bonaparte) ஒருவரே.

கிளைவ் இரண்டாம் முறையாக இந்தியாவுக்கு வந்ததிலிருந்து ஆங்கிலேயரின் அரசியல் பலப்பட ஆரம்பித்தது. அவருடைய சுறுசுறுப்பாலும், அஞ்சாத் தன்மையாலும் சில மாதங்களுக்குள் அநேகம் பெரிய விஷயங்கள் நிறைவேறின. ரோமாபுரி நன்னிலையில் இருந்த காலத்திலும் எந்த இராணுவ தளகர்த்தனும் கிளைவ் ஆங்கிலேய அரசாட்சிக்குச் சம்பாதித்துக் கொடுத்ததுபோல் விஸ்தாரமானதும், பணவருவாய் உள்ளதுமான நிலப்பாகத்தை ரோமாபுரிக்குச் சம்பாதித்துக் கொடுக்கவில்லை.

கிளைவ் மூன்றும் முறையாக இந்தியாவுக்கு வந்தது முதல் ஆங்கிலேயருடைய இந்திய ராஜ்யத்தின் ஆட்சி முறையில் சீர்திருத்தங்களும் மாறுதல்களும் எற்படலாயின. அவர், 1765-ம் வருடத்தில் கல்கத்தாவில் வந்து இறங்கியபோது, வங்காளமானது, கம்பெனி உத்தியோகஸ்தர்களாகிய ஆங்கிலேயர்கள் நியாய விரோதமான வழிகளில் பணம் திரட்டுவதற்குரிய இடமாயிருந்தது. கம்பெனியின் உத்தியோகஸ்தர்கள் ஜனங்களைப் பயமுறுத்திப் பணத்தைக் கொள்ளையடித்து வந்தனர். அதைக் கிளைவ் அஞ்சாத நெஞ்சத்

தூடனும், முன் ஆலோசனையுடனும் நிறுத்தினர். அவர் சொத்துக்களையும், சுகத்தையும், உயிரையும் ஒரு பொருட்டாக மதியாமல், ஆட்சி முறையில் செய்த சீர் திருத்தங்களினால் ஆங்கிலேயர்களுக்கு மிகுந்த வெற்றி கள் உண்டாயின. வெற்றி வீரர்களுள் இன்றைக்கு கிளைவ் முதன்மை ஸ்தானம் வகித்து வருகிறார். அவர் ஜனங்களின் நன்மைக்காக அநேக காரியங்களைச் செய் திருக்கிறாராகையால் அவருடைய பெயர் என்ஞான் றும் நிலைத்திருக்கும்.

முற்றிற்று.

PRINTED AT THE ANANDA BODHINI PRESS, MADRAS.